# உலக முதன்மொழி தமிழ்




கு. பூங்காவனம்

# உலக முதன்மொழி தமிழ்

(உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் சார்பில் அமைந்த

கு. பூங்காவனம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES
டி. டி. டி. ஐ. (அஞ்சல்) தரமணி, சென்னை-600113.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அறக்கட்டளைச் சொற்பொழிவு — 3

Dr. G. Devaneya Pavanar Endowment lecture — 3

Endowment Lectures Publication Number — 13

---

# BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | | Ulaka Mutan Moli Tamil |
| Author | | K. Poongavanam, Dept. of Tamil Maharani Arts College Bangalore—560001 |
| Publisher | : | International Institute of Tami Studies, T. T. T. I. Post, Taramani, Madras-600113. |
| Publication Number | : | 124 |
| Language | : | Tamil |
| Edition | : | First |
| Date of Publication | : | June 1986 |
| Paper used | : | Tamilnadu 14.1 Kg. |
| Size of the book | : | 21 X 14 cms |
| Printing types used | : | 10 point |
| Number of copies | : | 1200 |
| Number of pages | : | IV + 118 |
| Price | ; | Rupees Twelve |
| Printers | : | Jayasree Printers, 238, Pycrofts Road, Triplicane, Madras-5. |
| Binding | : | Card board |
| Artist | : | A. S. Veluchamy |
| Subject | : | A study in Tamil, as world's first language |


---

அறக்கட்டளைச் சொற்பொழிவாளர் கருத்துகளுக்கு, நிறுவனம் பொறுப்பல்ல.

# பதிப்புரை

டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்,
இயக்குநர்,
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-600 113.

உலகின் முதன்மொழி தமிழே என்பதை ஐயந்திரிபற நிலை நாட்டிய மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் அரும் பெரும் ஆய்வுகளைத் தமிழுலகு நன்கு அறிதற் பொருட்டு நிறுவப் பட்டது, 'மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணரின் அறக் கட்டளைச் சொற்பொழிவு. இவ்வறக்கட்டளை நிறுவப் பெருந் தொகை அளித்த திரு. கோவலங் கண்ணன் அவர்கட்கும், பிறருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவிக்கிறோம்.

இவ்வறக்கட்டளையின் மூன்றாம் சொற்பொழிவாக இந்நூல் அமைகிறது. உலக முதன்மொழி தமிழே என்று பாவாணர் உறுதி செய்யுமாற்றை இந்நூல்வழி நூலாசிரியர் காட்டுகிறார். இக்கருத்துடைப் பிறரினின்றும் பாவாணர் எங்ஙனம் வேறுபட்டுச் சிறப்புறுகிறார் என்பதனைத் தெள்ளிதின் காட்டியுள்ளார். இந்நூலாசிரியர், திரு. கு. பூங்காவனம் அவர்களைப் பாராட்டிப் போற்றி மகிழ்கிறேன்.

இந்நிறுவனப் பணிகளுக்கெல்லாம் ஆக்கமும் ஊக்கமும் தருகின்ற கல்வியமைச்சர் மாண்புமிகு, செ. அரங்கநாயகம் அவர்களுக்கு மிக்க நன்றியுடையோம்.

இந்நூல் வெளிவர நன்முறையில் முயன்ற அறக்கட்டளைச் சொற்பொழிவுப் பொறுப்பாளர் டாக்டர் ச. சிவகாமி அவர் கட்கும், அச்சுப்படி திருத்தி உதவிய ஆய்வாளர் திரு. பெ. அனந்தசயனம் அவர்கட்கும் நூலைச் சிறப்புற அச்சிட்டுத் தந்துள்ள ஜெயஸ்ரீ அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றி.

சென்னை,
2-6-'86

அன்பன்
ச. வே. சுப்பிரமணியன்

# உள்ளுறை

# முன்னுரை

உலக மொழிகள் மொத்தம் 2796 எனக் கணக்கிடப்பட்டுள்ளன. உலக மொழிகளனைத்தும், சிறியவும் பெரியவுமான பல்வேறு மொழிக் குடும்பங்களாகப் பிரிக்கப் பட்டுள்ளன. அவை,

1. ஆத்திரேலியம், 2) பாப்புவன் (Popuan) 3) மலையோ பாலினீசியம் 4) திரவிடம், 5) ஆத்திரோ-ஆசியம் அல்லது மான்-குமேர் 6) சீனோ-திபேத்தியம் 7) கதாய் (Kadai] 8) ஊரல்-ஆலத்தேயம் 9) காக்கேசியம் 10) இந்தோ-ஐரோப்பியம் 11) சேமியம் 12) ஆமியம் 13) சரி-நீல் (Chari-Nile) 14) நடுச் சாகரம் (Central. Saharan] 15) நைசர்-காங்கோ (Niger-Congo) 16) காய்சன் (Khoisan) என்பன. இவற்றுள், சூடான் நாட்டில் மிகச் சிறிதே அறியப்பட்டுள்ள பல சிறுமொழிக் குடும்பங்களும், தென் அமெரிக்காவின் பிரசில் நாட்டில் வழங்கும் பொதுக்கலவை மொழியும் ஐரோப்பிய மொழிகளின் தாக்கத்தால் வழக்கு வீழ்ந்து வரும் சில இடை அமெரிக்க மொழிகளும் அடங்கா. இம் மொழிக் குடும்பங்களேயன்றி வட அமெரிக்காவில் வழக்கு வீழ்ந்தனவும் வீழாதனவுமாகிய மொழிகள் பின் வருமாறு மொழிக் குடும்பங்களாகப் பாகுபாடு செய்யப்பெற்றுள்ளன.

1. அல்காங்குவியன் (Algon quian)
2. நாச்செசு-மசுக்கோசியம் (Natchez-Muskogeam)
3. இரோக்குயான் (Iroquoian)
4. சீயோவன் (Siouan)
5. கட்டோர்வன் (Cuddean)
6. துனிகன் (Tunican)
7. யூசி (Yuchi)
8. எசுகிமோ (Eskimo-Aleut)
9. சலிசன் (Salishan)
10. வக்கசன் (Wakashan)
11. சிமக்குவன் (Shimakuan)
12. இரிட்டுவான் (Ritwan)

13. மாயன் (Mayan)
14. ஓடோ மாங்குவேன் (Otomanguean)
15. உடோ-அசுதெகன் (Uto-Aztecan)
16. அத்தபாசுகன் (Atha'Baskan)
17. தனோவன் (Tanoan)
18. கெரேசன் (Keresan)
19. சுனி (Zuni)

இவையே யன்றி, சுமேரிய மொழியும், எத்திரசுகள் (Etrusean) மொழியும், பாசுக்கு (Basque) மொழியும் வேறு சிலவும் இன மற்றனவாகக் கூறப்படுகின்றன.

பாவாணரின் வண்ணனை மொழி நூலின் வழுவியலில் (பக்கம் 79-85) உலக மொழிக்குடும்பங்கள் என்னும் பகுதியைக் காண்க. பிரித்தானியக் கலைக் களஞ்சியத்திலும் வேறு சில மொழியியல் நூல்களிலும் உலக மொழிக் குடும்பங்களைப் பற்றி சிறிது வேறுபடவும் கூறப்பட்டுள்ளது.

முந்நூற்றாண்டுக் கால மொழியாராய்ச்சியால் மொழிகளின் இலக்கணங்களையும் அகர முதலிகளையும் ஒப்பிட்டு ஆராய்ந்ததன் பயனாக மொழிகளை இவ்வாறும் இதனினும் சிறிது வேறுபட்டவாறும் இனம் பிரித்து மொழிக் குடும்பங்களாகப் பகுக்க முடிந்ததேயன்றி, அவற்றின் தொன்மை அல்லது அண்மையை அறியவோ, உலக முதன் மொழியைக் கண்டு கொள்ளவோ, அது தோன்றி வளர்ந்த வகையை அறிந்து கொள்ளவோ இயலவில்லை. உலக முதன்மொழி எதுவெனக் காணவும் மொழித் தோற்றத்தை அறியவும் ஆராய்ச்சி நடைபெற வில்லை எனவும் கூறமுடியாது. உலக முதன் மொழியைக் கண்டறிய விரும்பிய ஓர் எகுபதிய அரசன், இரு குழந்தைகளைப் பிறந்தவுடன் வேறாகப் பிரித்து வளர்த்ததாகவும அவற்றுள் ஒன்று "பெகோசு" என்னும் சொல்லைக்கூறியதாகவும், அச்சொல் பிரிசிய மொழியில் இருந்தமையால் பிரிசிய மொழியே முதன் மொழி என்று முடிவு செய்து கொண்டதாகவும், வரலாற்றுத் தந்தை எரோதோத்தசு (Herodotus -கி.மு. 485-425) குறிக்கின்றார். மொழித் தோற்றத்தை அறிந்து கொள்ள விழைந்து ஆராய்ந்த மொழியாராய்ச்சியாளர்களும் தத்தம் கொள்கைகளை எடுத்துரைத்தனர். அவை பன்னிரண்டுக்கும் மேலாகப் பல்கிப் பெருகியும் உண்மை காண வியலாமல் உள்ளனர். உண்மை காணாமை ஒருபுறமிருக்க, மொழியியலாரிடையே எழுந்துள்ள கருத்து வேறுபாடுகளும் விருப்பு வெறுப்புகளும் ஆராய்ச்சியின் அடிப்படைத் தவறுகளும், அவர்

கள் எக்காலத்தும் மொழித்தோற்ற உண்மையை அறியவெட்டாமல் தடுப்பவையாக உள்ளன.

மொழித் தோற்றத்தை அறிந்து கொள்ள உதவும் வரலாற்று மொழியியலும் ஒப்பியன்மொழியியலும் மொழியாராய்ச்சியாளர்களால் புறக்கணிக்கப்பட்டு, மொழியமைப்பை ஆராயும் வண்ணனை மொழியாராய்ச்சியே இக்கால் பெரிதும் மேற்கொள்ளப்படுகின்றது.

மாந்தத் தோற்றத்தினளவு முன்மையும் தொன்மையும் உடைய மொழித் தோற்றத்தை ஆராய்தற்கு மொழியாராய்ச்சி மட்டுமன்றி, பிறதுறைகளின் துணையும் தேவைப்படுவதே.

இத்தகைய பல்வேறு சிக்கலையுடைய மொழித் தோற்றம் பற்றிய ஆராய்ச்சி இத்தமிழ் மண்ணிலும் நிகழ்ந்துள்ளது என்பதும், அவ்வாராய்ச்சிக்காகவே தம்மைப் படைத்துக் கொண்டு தம் வாணாள் முழுமையும் உழைத்த தமிழ்ப் பெரியார் திரு. ஞா. தேவநேயப் பாவாணர் அவர்களால் கண்டறிந்துரைக்கப் பட்ட மொழித் தோற்றக் கொள்கை ஆராயப்படுவதும், அவர் தம் முடிபுகள் உண்மையாகி வருவதும் மகிழ்ச்சியூட்டுவன.

மக்கள் தம் கூட்டு வாழ்க்கைக்காக உருவாக்கிக் கொண்டதே மொழி—இஃது ஓர் அடிப்படை.

மக்கட் கூட்டம் ஓரிடத்தில் தோன்றிப் பல்கிப் பரவினர்-இது மற்றோர் அடிப்படை.

இயற்கையின் இடர், உணவுதேடல், புத்திடங் காணும் அவா ஆகிய இவை போன்ற பல கரணியங்களால் உந்தப்பட்டுக் கூட்டமாகவும், குழுக்குழுவாகவும் பல்வேறு திக்குகளில் மக்கள் பிரிந்து சென்றனர்-இஃது இன்னோர் அடிப்படை. இத்தகைய சில அடிப்படைகளை உண்மையாக ஏற்றும், மாந்தன் பிறப்பிடங் குறித்துக் கூறப்படும் பல்வேறு ஆராய்ச்சிக் கருத்துக்களைச் சீர் தூக்கி, மாந்தனின் உண்மையான பிறப்பிடம் யாதாகக் கூடும் என வரையறை செய்தும் அவ்விடத்தே தோன்றிய முதன்மொழியின் தோற்ற வளர்ச்சி நிலைகளை அறிஞர் பாவாணர் ஆய்வின் வழிநின்று காட்டியும், அவர்க்கு முன்னும் பின்னும் நிகழ்ந்த ஆய்வுகளை எடுத்துக் காட்டியும் ஒப்பிட்டுரைத்தும் மொழியாய்வின் பல்வேறு வளர்ச்சி நிலைகளைச் சுட்டியும் பாவாணர் ஆய்வு முடிவுகள் உண்மையாகும் நிலைகளை எடுத்துக்காட்டியும் பாவாணர் அறக்கட்டளையின் இவ் ஆய்வுரை நிறைகின்றது.

# க-மாந்தன் பிறந்தகம்

## உலகத் தோற்றம்

1. முதலின் தேவன் வானத்தையும் நிலத்தையும் படைத்தார்.

2. நிலம் ஒழுங்கின்மையும் வெறுமையுமாய் இருந்தது. ஆழத்தின்மேல் இருள் இருந்தது. தேவ ஆவியானவர் நீரின்மேல் அசைவாடிக் கொண்டிருந்தார்.

3. தேவன் வெளிச்சம் உண்டாகக் கடவது என்றார் வெளிச்சம் உண்டாயிற்று.

4. வெளிச்சம் நல்லது என்று தேவன் கண்டார்., வெளிச்சத்தையும் இருளையும் தேவன் வெவ்வேறாய்ப் பிரித்தார்.,

5. தேவன் வெளிச்சத்திற்குப் பகல் என்று பேரிட்டார், இருளுக்கு இரவு என்று பேரிட்டார். சாயுங்காலமும் விடியற்காலமுமாகி முதலாம் நாள் ஆயிற்று.........

(விவிலியம், பழையஏற்பாடு, முதலாகமம், முதலதிகாரம்),

இப்படிக் கிறித்தவ சமயமும், இதைப் போலவே இறைவன் ஏற்பாட்டின்படி உலகம் உண்டாகியது என்று பிறசமயங்களும் கூறுகின்றன. ஆயின் அறிவியல் ஆராய்ச்சி உலகத் தோற்றத்தைப் பற்றி வேறு வகையான விளக்கத்தை நமக்குத் தருகிறது. உலகம் எவ்வாறு தோன்றியது, எத்தகைய மாற்றங்களைக் காலந்தோறும் பெற்றுக் கொண்டே மாறிவந்துள்ளது என்றெடுத்துரைக்கும் நிலவியல் ஆய்வு முடிவுகளைச் சுருக்கமாகக் காணலாம்.

### 1. உலகத் தொடக்க வூழி

4,600,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை நிலவுருண்டை கதிரவ மண்டலத்திலிருந்து பிரிந்து சுழலும் வளித்(Gas) தொகுதியாகக் கதிரவனின் ஈர்ப்பாற்றலால் சுழன்று சுற்றத் தொடங்கிய காலம்.

2. ஆர்க்கேயன் ஊழி (Archaean Age)

4,600,000,000 ஆண்டு முதல் 600,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

வளித் தொகுதிகள் நீர்ப்பொருட்டொகுதியாகவும் திடப் பொருட்டொகுதியாகவும் மாறி, நிலத்தின் மேல்பகுதி உருவாகியது. உலகத்தைச் சூழ்ந்திருந்த நீராவி குளிர்ந்து கடுமழை போல் பெய்து பெருங்கடல்களும் ஆறுகளும் உருவாயின. வெண்மையான காற்றினால் சூடேற்றப் பெற்றும் பெரு மழையால் குளிரூட்டப் பெற்றும் கற்பாறைத் தொகுதிகளினின்றும் மண்ணும் மணலும் உண்டாயின. அண்ட நுண்ணுயிரிகளின் (Microcosmos) தொடக்கமும் இவ்வூழியில் உண்டாகியது.

3. கம்பிரிய ஊழி (Gambrian Age)

600,000,000 ஆண்டுமுதல் 500.000,000 ஆண்டுகளுக்குமுன்புவரை.

நிலத்தில் கற்பாறைகள் தோன்றின. வெண்மையான பருவ நிலை அமைந்தது. கடலில் மட்டும் உயிர்கள் வாழ்ந்தன. கடல்நீர்க் களைகளே நிலத்திணை (தாவரங்)களாயிருந்தன. முதுகெலும்பில்லாப் புழுக்களும் இழுது மீன்களும் (Jelly fishes) உண்டாயின.

4. ஆர்தோவிசிய ஊழி (Ordovician Age)

500,000,000 ஆண்டு முதல் 440,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

முதல் முதுகெலும்புயிரிகள் உண்டாயின.

5. சிலூரிய ஊழி (Silurian Age)

440,000,000 ஆண்டு முதல் 400,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

செடிவகைகளும் கடலில் கூடுதலான முதுகெலும்புயிரிகளும் தோன்றின.

6. தேவோனிய ஊழி (Devonian Age)

400,000,000 ஆண்டு முதல் 350,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

நிலத்திணை வளர்ச்சி மிகுந்தது. கடலில் மீன்கள் தோன்றின; அட்டை, சிலந்தி முதலான பூச்சிகள் தோன்றின.

7. கார்போனிவெரசு ஊழி (Carboniferous Age)

350,000,000 ஆண்டு முதல் 270,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

பசுமைப்பெருமர வகைகளும், நீரிலும் நிலத்திலும் வாழும் ஈருயிரிகளும் (Amphibious) நிலத்தில் ஊருயிரிகளும் (Reptiles) தோன்றின. சில பூச்சிகளுக்கு இறக்கைகள் முளைத்தன.

8. பெர்மிய ஊழி (Permian Age)

270,000,000 ஆண்டு முதல்225,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

பெருங்கண்டமாகிய பேங்கியா (Pangaea) உடைந்து, வடக்கில் இலோரேசியாவாகவும், தெற்கில் கோண்டுவானா நிலப்பரப் பாகவும் ஆயின. நிலவிலங்குகள் பெருகின.

9. திரியாசிக ஊழி (Triassic Age)

225,000,000 ஆண்டு முதல் 180,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

தென் அமெரிக்கா, ஆப்பிரிக்கா, அராபியா ஆகியவை ஒரு புறமும் அண்டார்டிகா. ஆத்திரேலியா இந்தியா ஒருபுறமாகக் கோண்டுவானா நிலப்பரப்பு இரண்டாகியது. பாலுண்ணி (Mammal) விலங்குகள் தோன்றின.

10. சுராசிக ஊழி (Jurassic Age)

180,000,000 ஆண்டு முதல் 135,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

34,000 சிரெடைக் (கிலோ) கனமுடைய ஊருயிரிகள் உண்டாயின. செதிளிலிருந்து இறக்கை முளைத்த பறவை உண்டாகியது.

11. கிரெட்டேசிய ஊழி (Cretaceous Age)

135,000,000 ஆண்டு முதல் 70,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை,

திஞேசர் (Dinosaurs) போன்ற பேருயிரிகள்தோன்றிமறைந்தன,

12. பலேயோசன் ஊழி (Palaeocene Age)

70,000,000 ஆண்டு முதல் 60,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை,

நிலமட்டம் கடல் மட்டத்திற்கு மேலுயர்த்த மேட்டு நிலப் பரப்புகள் உண்டாயின.

13. ஈயோசின் ஊழி (Eocene Age)

60,000,000 முதல் 40,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை,

பூக்கும் நிலத்திணைகள் பெருகின. கடலா (Sea Cow)வும் திமிங்கலங்களும் கடலில் வாழ்தற்கேற்றவாறமைந்தன.

யானை, குதிரை, முன்னைக் குரங்குகள் முதலான விலங்குகள் உண்டாயின.

14. ஒலிகோசின் ஊழி [oligocene Age]

40,000,000 ஆண்டு முதல் 25,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை.

நண்டு, நத்தை, பூனை நாய்களுக்கு முந்திய உயிர்வகை, வாலில்லாக் குரங்கு முதலாயின [தோன்றின. இலைதழையுண்ணும் விலங்குகள் பெருகின.

15. மியோசின் ஊழி [Miocene Age)

25,000,000 ஆண்டு முதல் 3,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை

எலும்புள்ள மீன் வகைகள் பெருகின. யானைகளும் பிற விலங்குகளும் பேரளவினவாய்ப் பெருகின.

16. பிளியோசின் ஊழி [Pliocene Age]

3,000,000 ஆண்டு முதல் 1,000,000 ஆண்டுகளுக்கு முன்பு வரை'

கடலுயிரிகள் ஏறத்தாழத் தற்காலத்தில் உள்ளமைபோன்ற வளர்ச்சியடைந்தன. மாந்தக்குரங்குகளும் யானைகளும் பெருகின.

17. பிளிசுடோசின் ஊழி (Pleisocene Age)

1,000,000 ஆண்டுகளுக்கு முன்னும் பின்னுமிருந்த பனிக்கட்டிப் படலக்காலம் (Glacial Period) இப்பனிக்கட்டிப்படலம், முன்னை, நடு, பின்னை என முன்றுஊழிகளாகப் பின்னும் பகுக்கப் பெறுகின்றது.

பத்திலக்க ஆண்டுகளுக்கு முன்பிருந்து தொடங்குவனவாகப் பிலைசுடோசின் (Pleistocene) ஓலோசின் (Holocene) ஆகிய இரு ஊழிகளைக் குறிப்பர்.
(பண்டாரகர் ஏ. கே. தே. (Dr. A. K. Dey) என்பார் 1939 ஆம் ஆண்டில் வெளியிட்ட இந்திய நிலவியல் (Geology of India) என்னும் நூலைத் தழுவியது இப்பகுதி)

அண்டப் பெருவெளியில் இவ்வாறு தோன்றிய இவ்வுலகத்தில் உயிர்கள் உண்டாகிய வரலாற்றை நிலவியல், உயிரியல் மாந்தவியல் ஆகியவற்றின் துணையால் அறியலாம். உயிர்த் தோற்றத்திற்கேற்றதாக இவ்வுலகம் அமைந்த வரலாறு நீல்நூல் அடிப்படையில் இங்குச் சுருக்கமாகக் கூறப்பெற்றது.

# உ-மாந்தத் தோற்றம்

பத்தொன்பதாம் நூற்றாண்டில் வாழ்ந்த உயிர் நூலறிஞர் சார்லசு தார்வின், ''உயிர் வகைகளின் தோற்றம்'' (Origin of Species by means of Natural selection] என்னும் நூலை 24-1-1859 ஆம் நாளிலும் அதைக்தொடர்ந்து மாந்தத் தோற்றம் (The Descent of man in relation to sex] என்னும் நூலை 24-2-1871 ஆம் நாளிலும் வெளியிட்டார். இவ்விரு நூல்களும் அறிவியலில் பொதுவாகவும் உயிரியியலில் சிறப்பாகவும் பெரும் புரட்சியை உண்டாக்கின. இவ்விரு நூல்கள் வழியும் வேறு சில கட்டுரைகள் வழியும் அவர் தம் திரிவாக்கம் (Evolution இயற்கைத் தெரிப்பு (Natural selection) வல்லுயிர் வாழ்வு (Survival of the fittest) ஆகிய கொள்கைகள் விளக்கம் பெற்றன. இக் கொள்கைகள் அறிவியலரால் ஏற்கப்பட்டன வெனினும், இக்கொள்கைகளைச் சற்றுச் சீர்திருத்தியும், சிற்சில மாறுதல்களைச் சேர்த்தும் புதுத் தார்வினிய (Neo-Darwinism) அறிஞர்கள் எடுத்துரைத்தனர்.

உயிர்களின் படிநிலை வளர்ச்சியில் ஒன்றன் பின் ஒன்றான இறங்கு நிலையில் மாந்தன் தோன்றியதாகக்குறிக்கும் (Descent of man) என்னும் தொடரை வளர்நிலை வரிசையில் Ascent of man) எனவும் அறிஞர் சிலர் குறித்தனர்.

உயிர் வளர்ச்சியில் குரங்கிலிருந்து சிறிது சிறிதாக மாற்றம் பெற்று மாந்தன் தோன்றினான் என்னும் தார்வின் கூற்றிலிருந்து சிறிது மாறுபட்டும் சில அறிஞர் கூறுவாராயினர்.

குரங்கிலிருந்து மாந்தன் தோன்றவில்லை, குரங்கும் மாந்தனும் ஒரு பொதுவகை உயிரிலிருந்து தனித்தனியே பிரிந்து தோன்றியிருத்தல் வேண்டும் என்னும் கருத்தும் கூறப்படுகிறது. பண்டாரகர் ஆசில் மாண்டேகு என்பார் மாந்த உருவாக்கம் (Process of man) என்னும் நூலில் (பக். 16) பின் வருமாறு கூறுவர்.

''குரங்கிலிருந்து அல்லது அதனினும் வேறுபட்ட மாந்தக் குரங்கிலிருந்து, அல்லது வாலில்லாக்குரங்கிலிருந்து மாந்தன் தோன்றினான் என்று அடிக்கடி கூறப்படுகிறது. அத்தகையகூற்று பிழைபாடுடையது. இவ்விலங்குகளும் மாந்தரும் பொதுவாகப் பாலுண்ணி வகையின் உச்ச வளர்ச்சி உயிரினமாய் இருப்பினும் மாந்தர்க்கும், குரங்குக்கும் உள்ள அரத்த உறவு மிகச் சேய்மையானதாகும். ஆப்பிரிக்கக் குரங்கு, வாலில்லாக் குரங்கு, மாந்தக் குரங்கு ஆகியவற்றுடன் மாந்தர்க்குள்ள உறவு கிளைவழி மரபேயன்றிக் கால்வழி மரபாகாது, குரங்கு வகைகளும் மாந்தனும் ஒரு பொது உயிர் வகையிலிருந்து தோன்றினராயின் அவர்தம் திரிவாக்க வளர்ச்சி வெவ்வேறாகவும் தனித் தனியாகவும் நிகழ்ந்தது.''

தார்வின் கொள்கையுடன் மாறுபடாதவர் குரங்குக்கும் மாந்தனுக்கும் இடையிலான வேறோர் உயிர் மறைந்து பட்டதென்றும் அதனைக் ''காணுமற்போன இணைப்பு'' (missing Link) என்றும் கூறுவர்.

ஆயின் சமயவியலார் இத்தகைய கொள்கைகளை ஏற்கிலர். அவர் இக்கொள்கைகளை ஏற்பின், அவர்தம் சமயக் கருத்துக் கோட்டையும், ஆண்டவன் படைப்பு என்னும் நம்பிக்கையும் ஒருசேரச் சரிந்து வீழும் என்பதே அவர் ஏலாமைக்கு கரணியமாகுமேயன்றி வேறு எவ்வித அறிவியற் கரணியமுமில்லை.

அதே வேளையில் திரிவாக்கக் கொள்கையும், அதில் உள்ள சிக்கல்களும் முறையே முழுமையாகத் தீர்மானிக்கப் பெறாமலும் தீர்க்கப் பெறாமலும் உள்ளன என்பதும் உண்மையாகும் தவிர, நீகிரோவ, காக்கேசிய, மங்கோலிய இனங்கள் எனப்படும் மாந்தர் தம் உருவ அமைப்பு வேறுபட்டிருப்பதற்குத் தார்வின் நூல்களில் ஒரு விடையும் கிடைக்குமாறில்லை.

மாந்தத் திரிவாக்கக் கொள்கைச் சிக்கல்கள் ஒருபுறமிருக்க இதுவரை கிடைத்துள்ள எலும்புக் கூடுகளை ஆராய்ந்த மாந்தவியலார் வேறு புதுச்சிக்கல்களையும் தோற்றுவித்துள்ளனர். கிடைத்த எலும்புக் கூடுகள் பல்வேறு காலத்தைச் சேர்ந்தவையாகவும் பல்வேறு இடங்களிற் காணப்படுபவையாகவும் உள்ளன. அவை கிடைத்துள்ள இடங்களைக் கருதி அவ்வெலும்புக் கூடுகளுக்குப் பெயரிட்டுள்ளனர். அவை...

1. **ஐடல் பர்க்கு மாந்தன்:** செருமானிய நாட்டு ஐடல்பர்க்கு நகர்க்கருகில் 1907 ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப்பட்ட எலும்புக் கூடு.

2. **போட்சுவானா மாந்தன்.** தென்னாப்பிரிக்காவில் உள்ள போட்சுவானா என்னும் இடத்தில் 1924 ஆம் ஆண்டு பேரா. தார்த்து (Prof. Dart) என்பவராலும், திரான்சுவால் என்னுமிடத்தில் 1936 ஆம் ஆண்டு பர். புரூம் எனபவராலும் கண்டுபிடிக்கப் பெற்ற எலும்புக் கூடுகள்.

3. **சோலோ மாந்தன்.** சாவகத் [Java] தில் உள்ள சோலோ ஆற்றங்கரையில் 1932 ஆம் ஆண்டு கண்டுபிடிக்கப் பெற்ற எலும்புக் கூடு.

4. **தெர்னிபைன் மாந்தன்.** அல்சீரியாவில் உள்ள தெர்னி பைன் என்னும் இடத்தில் 1954 ஆம் ஆண்டு கண்டு பிடிக்கப் பெற்ற எலும்புக் கூடு.

5. **இலியோடோலில் மாந்தன்.** இலியோடோலில் (Laetolil) என்னுமிடத்தில் மேரி இலிக்கி என்பவரால் 1974-75 ஆண்டுகளில் கண்டுபிடிக்கப் பெற்ற எலும்புக் கூடுகள்.

6. **ஆதர் மாந்தன்.** ஆதர் (Hadar) என்னும் இடத்தில் யோகான்சன் (Johanson) தாயிபு (Taieb) ஆகியோரால் 1974-75 ஆம் ஆண்டுகளில் கண்டுபிடிக்கப் பெற்ற எலும்புக்கூடுகள்.

7. **துர்க்கானா ஏரிமாந்தன் அல்லது இரோடோல்பு மாந்தன்.** 1972 ஆம் ஆண்டிலும் 1975 ஆம் ஆண்டிலும் இரிச்சார்டு இலீக்கி என்பவரால் கண்டுபிடிக்கப் பெற்ற எலும்புக் கூடுகள்.

இவ்வாறு கிடைக்கப் பெற்ற எலும்புக் கூடுகளை ஆராய்ந்த மாந்தவியலார் அவற்றைப் பின்வருமாறு வகைப் படுத்தியுள் ளனர்,

**1, இந்தியக் குரங்கு மாந்தன். (Rama pithecus)**

கிடைத்துள்ள எலும்புக் கூடுகளில் தொன்மையானது 14,000,000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. ஆப்பிரிக்கா-யுரேசியா நாட்டுப் பகுதிகளில் காணப்பட்டது.

**2. தெற்கத்தியக் குரங்கு மாந்தன் (Australopithecus)**

மாந்தக் குரங்கினும் மூளை வளர்ச்சியுடையது. இரு காலால் நிமிர்ந்து நடந்து கையால் சில கருவிகளைப் பயன் படுத்திய உயிரினம். 1,750.000 ஆண்டுகளுக்கு முற்பட்டது.

**3, நிமிர்ந்த மாந்தன் (Homo Erectus)**

'நிமிர்ந்த குரங்கு மாந்தன்,' என்று இவ்வகைக்கு முதலில் பெயரிட்டாலும், குரங்கு இனத்திலும் மாந்தவினத்துடன்

இதற்கிருந்த மிகுந்த ஒற்றுமை கண்டறியப் பட்டபின் நிமிர்ந்த மாந்தன் என்று பெயர் மாற்றப் பட்டது, தெற்கத்திய மாந்தனைக் காட்டிலும் நன்கு நடக்கும் தன்மையது. மிகு மூளை வளர்ச்சியுடையது. குரங்கிலிருந்து மாந்தன் பெற்ற வளர்ச்சியைக் காட்டுவது.

4. அறிவு மாந்தன்

கிடைத்துள்ள எலும்புக் கூடுகளுள் எண்ணும் மாந்தனாகக் (Thinking man) குறிக்கப் பெறும் இவ்வகையைச் சேர்ந்தது யாதும் இல்லை. எனினும் 50,000 ஆண்டுகளுக்கு முன் பனி படர் ஊழிக்குப் (Glacial Period) பின்னர்த் தோன்றிய உயிர் வகையாகவும், உயர் மாந்தன் வகையாகவும் இதனைக் குறிப்பர்.

மாந்தவியல் ஆராய்ச்சி முடிபுகள் தார்வின் கொள்கைகளை ஏற்பதாகவும் வலியுறுத்துவதாகவும் அமையினும் தார்வின் கொள்கைச் சிக்கலைத் தீர்ப்பனவாக இல்லை. மாந்தவியல் ஆராய்ச்சி இன்னொரு புதுச்சிக்கலையும் தோற்றுவித்தது.

கிடைத்துள்ள எலும்புக் கூடுகள் பல்வேறு காலத்தை சேர்ந்தன என்பதும், உலகின் பல்வேறு பகுதிகளில் காணப்பெற்றவை என்பதும் உண்மையாதலால், மாந்தத் தோற்றம் ஓரிடத்தில் நிகழ்ந்ததா? பல்வேறிடங்களில் பல்வேறு காலக் கட்டங்களில் நிகழ்ந்ததா? இச்சிக்கலுக்குத் தீர்வுஒன்றையும் மாந்தவியலாரால் முழுமையாகவும் நிறைவாகவும் வழங்க முடியவில்லை. எனவே உயிர் நூலார் இதுபற்றி யாது கூறுகின்றனர் எனக் காண வேண்டியுள்ளது.

இதுபற்றி உயிர் நூற் புரட்சியாளர் சார்லசு தார்வின் கூறுங் கருத்துகளைக் காணலாம்.

''இயற்கை நூலார்கள் கருத்துரையாடும் வினா ஒன்று நம் முன்னேயுள்ளது. உயிரினங்கள் நிலப்பகுதியின் ஒரே இடத்தில் உண்டாயினவா? என்பதே அவ்வினா. உயிரினங்கள் ஓரிடத்திலிருந்து தொடர்பில்லாச் சேய்மையான இடங்களுக்கு எவ்வாறு பெயர்ந்தன என்பதைப் புரிந்து கொள்ளுதற்கு மிக அரிதாகவுள்ளது. எனினும் ஒவ்வோர் உயிர் வகையும் ஒரு குறிப்பிட்ட இடப்பகுதியில் உண்டாயின என்னும் எளிமையான பார்வை நம் மனத்தைக் கவர்ந்திழுக்கின்றது. இதை மறுப்போர், ஒரு பொதுத் தலைமுறையின் பின்னைப் பெயர்ச்சியையே மறுப்போரும், இறும்பூது விளைக்கும் வேறோர் முகவத்தை நாடுவோரும் ஆவர்'' என்றும், (The origin of Species 1958 பக் 343)

''ஆகவே ஓர் உயிர்வகை ஓரிடத்திலேயே உண்டாயிற்றென்றும் பின்னர் அதன் இடப் பெயர்ச்சி யாற்றலுக்கேற்பவும் அது வாழ்வதற்கேற்ற முற்கால, அவ்வக்காலச் சூழலுக்கேற்பவும் இடம் பெயர்ந்த தென்பதுமே உண்மையாகக் கூடும் என்று வேறு பல இயற்கை நூலார் கருதுவதைப் போலவே நானும் கருதுகின்றேன்'' என்றும்

(மேற்படி நூல். பக். 344)

''தொடர்பில்லாச் சேய்மையிலுள்ள ஈரிடங்களில் குறிப்பிட்ட ஓர் உயிர் வகை வாழ்வது இடப்பெயர்ச்சியாலேயே என்று விளக்குவதும், முற்பழங்கால தட்ப வெப்ப மாறுபாடுகள் பற்றியும் நிலவியல் திரிபுகள் பற்றியும் அறியாத நமக்கு உயிர் வகையின் ஓரிடப் பிறப்பே ஒப்பற்றதும் காப்பானதும் ஆகிய சட்டமாகும் என்று நம்புகின்றேன்'' என்றும்

(மேற்படி நூல் பக். 344-45)

''ஓரிடப் பிறப்பா? பல்லிடப் பிறப்பா? என்னும் வினா இதனோடு தொடர்புடைய வேறொரு வினாவிலிருந்து வேறுபடுகிறது. ஓர் உயிர் வகையின் எல்லா உருப்படிகளும் ஒரே இணையிடமிருந்து தோன்றினவா? இருபாலுறுப்பியாகிய ஒன்றிலிருந்தா? சில நூலாசிரியர்கள் கருதுவது போல பல உருப்படிகள் ஒரே நேரத்தில் படைக்கப்பட்டனவா?'' என்பதே அவ்வினா.

ஒன்றோடொன்று இடைக்குறுகாத உயிர்களில் ஒவ்வோர் உயிர்வகையும் உருமாறிய வேறொன்றிலிருந்து தோன்றியதாயும் ஒவ்வொன்றும் தனித்தனியே ஊன்றிக்கொள்வதாயும், பிறிதோர் உருப்படியுடனோ உயிர் வகையுடனோ ஒன்றாததாயும், இவ்வாறு தனிப் பெற்றோரிடமிருந்து தோன்றியதாயுமிருத்தல் வேண்டும்'' என்றும்,

(மேற்படி நூல் பக் 345)

தார்வின் கூறுவதனால் உயிர் வகைகள் ஓரிடத்தில் தோன்றிப் பல்வேறிடங்களுக்கும் பரவின என்பதும், அதனால் மாந்தனும் ஓரிடத்திலேயே தோன்றிப் பின்னர்ப் பரவி இடம் பெயர்ந்தான் என்றும் அறியலாம்.

உலகின் பல்வேறு பகுதிகளிலுள்ள வேறுபட்ட மதத்தினர் தத்தம் சமயத் தொன்மங்களுக்கேற்பவும் நம்பிக்கைக் கேற்றவாறும் கூறிக் கொள்வதே மாந்தனின் பல்வேறிட பிறப்புக்குச் சான்றாகித் தார்வினியத்தை மறுப்பதாகலின், அத்தகைய சமயவியலார் கருத்தை பொருட்படுத்தாது விலக்குதலே நன்று.

தார்வின் திரிவாக்கக் கொள்கையை அறிஞர் பாவாணர் ஏற்க மறுக்கின்றார். மாந்தன் மாந்தனாகவே தோன்றினான் என்பதும் அவர் கருத்தாக உள்ளது.

''உயிரினங்கள், அடிமட்டத்திலிருந்து உச்சநிலை வரை படி முறையாய்த் தாழ்ந்த இனத்திலிருந்து உயர்ந்த இனமாக ஒன்றினொன்று தோன்றி வளர்ந்தனவென்று நில நூலார் (Geologists) உயிர் நூலார் (Biologists) மாந்தநூலார் (Anthropologists) முதலிய அறிவியல் நூலாரால் நம்பப்படினும் கடவுள் நம்பிக்கையில் உறைத்து நிற்கும் பெரும்பான் மக்களால் ஒப்புக் கொள்ள பெறவில்லை.

குரங்கு வகைகளும் காட்டுமாந்தன் (Orang-outang) குரங்கு மாந்தன் (Pithecanthropos) முதலிய மாந்தற்போலிகள் (Anthropoids) தோற்றத்தில் மாந்தனை ஓரளவு ஒத்திருப்பினும் தோல்மென்மை, மூளை வளர்ச்சி, பேச்சுத் திறன் நகையழுகை மெய்ப்பாடுகள் முதலிய மாந்தன் சிறப்பியல்களின்றி விலங்கு நிலையிலேயே இருந்ததால் குரங்கினம் உடலமைப்பில் மாந்தனுக்கடுத்த நிலையிலுள்ள விலங்கினம் என்று கொள்வதல்லது, குரங்கினின்று மாந்தன் தோன்றினான் என்று கொள்வது பொருந்தாது. இங்ஙனமே ஏனையினங்கட்கும் வடிவொப்புமையன்றிப் பிறப்புத் தொடர்பு கொள்வதற்கு இடமில்லை. காலந்தோறும் உயிரினங்கள் வேறுபட்டும் உள்ளன. பல்வேறு நிலப் படைகளில் காணப்பெறும் எலும்புக் கூடுகளும் கல்லுடம்புகளும் (Fossils) தாழ்ந்த இனங்களைக் கீழும் உயர்ந்த இனங்களை மேலுமாகக் காட்டுகின்றனவெனில், அது இறைவன் உயிரினங்களை ஏறு வரிசையிற் படைத்தானென்று கொள்வதற்கன்றித் திரிபாக்கக் கொள்கைக்குச் சான்றாகாது.''

(வண்ணனை மொழி நூலின் வழுவியல் பக்.11)

என்று தார்வீனியத்தை மறுத்துரைக்கின்றார். உயிர்களின் படைப்பு இறைவனின் ஏற்பாடே என்பதை,கல்வியறிவு நிறைந்த மாந்தர் வாழுமிடங்களிலும் ஆட்சியின்றேல் ஏற்படும் குழப்ப நிலையையும் கோள்களின் ஒழுங்கான இயக்கத்தையும் எடுத்துக் காட்டி, இயக்குபவனாக இறைவன் உள்ளான் என்று தம் உறைத்த இறை நம்பிக்கையின் பாற்பட்டு அவர் கூறுகின்றார் [செந்தமிழ் ஞாயிறு ஞா. தேவநேயம் - உலகமதி இல்லம் முத் தமிழ் நூலகவெளியீடு 1985, பக்.6], எனினும்,மாந்தன் தோற்றம் ஒரு வயிற் பிறப்பினதே என்னும் கருத்துடையவராய் அவர் கூறுவதாவது:

''மாந்தன் தோற்றம் பற்றியும், ஒரு வயிற்பிறப்பு (Monogemy) பல்வயிற் பிறப்பு (Polygemy) என இருவேறு கொள்கைகள் உள.

''வரலாற்றிற் பின்னுக்குச் செல்லச் செல்ல மாந்தர் தொகை சிறுத்துப் போவதாலும், இன்று மக்கட்டொகை மிக்குள்ள பல தீவுகளும் நிலப்பகுதிகளும் ஒரு காலத்தில் மாந்தன் குடியிருப்பின்றிப்பிருந்தமையாலும், தட்ப வெப்ப நிலையினாலேயே மக்கள்நிறம்வேறுபட்டுத் தோன்றுவதனாலும், எந்நாட்டு ஆடவனும் எந்நாட்டுப் பெண்டோடும் கூடி வாழ்வதனாலும். எவரும் எந்நாட்டு மொழியும் கற்கவும் எந்நாட்டு நாகரிகத்தையும் மேற்கொள்ளவும் இயல்வதனால் பலநாட்டுப் பழக்க வழக்கங்கள் ஒத்திருப்பதாலும் பல மொழிகள் ஒன்றோடொன்று தொடர்புடைமையாலும் பலமொழிகள் திரிபாலும் கலப்பாலுமே ஒன்று பலவாய்ப் பெருகி வந்திருப்பதாலும், மக்களுறவினின்று பிரிக்கப்பட்ட பிள்ளைகள் ஒரு மொழியும் பேசாமையாலும் பல நாட்டு அறிஞர் கருத்து ஒன்றுபடுவதாலும் மன்பதை முழுவதும் அநாகரிக நிலையிலிருந்தே நாகரிகத்தையடைந்திருப்பதாலும் ஒரேபெற்றோரிணையினின்றே மக்களெல்லாம்தோன்றியிருத்தல் வேண்டும். இது வரலாறு தழுவிய முடிவேயன்றிச் சமயக் கொள்கையன்று.''

(வண்ணனை மொழி நூலில் வழுவியல் பக். 12)

என்று கூறுவதால், மாந்தனின் ''ஓரிடப் பிறப்பு''க் கொள்கையே உண்மையானது என்பதை வற்புறுத்துவதோடு, சமய நம்பிக்கையின் பாற்பட்டுக் கூறுவதாயின் இக் கொள்கையின் வலிமை குன்றும் என்று பாவாணரே கருதுவதால், இதுவரலாறு தழுவிய முடிவேயன்றிச் சமயக் கொள்கையன்று'' என்று விதந்து கூறுவதையும் காணலாம். 29.3.1986 ஆம் நாளைய இந்தியன் எக்சுப்பிரசு (பெங்களூர்ப் பதிப்பு)ச் செய்தித்தாளில் வெளியான செய்தி வருமாறு.

''அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஐரோப்பா, ஆத்திரேலியா, ஆசியா ஆகிய கண்டங்களைச் சேர்ந்த 147 மாந்தப் பெண்டிர்தம் நச்சுக் கொடியிலமைந்த நுண்ணுயிராக்கக்காடியை (D.N.A) ஆராய்ந்த கலிபோர்னியாப் பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த பர். ஆலன் சிவில்சன் என்பார், ஆப்பிரிக்க நாட்டில் 1,40,000 ஆண்டு முதல் 2,80,000 ஆண்டுத் தொன்மை வரை வாழ்ந்த ஒரு பெண் வழியே மாந்த இனம் தோன்றிப் பரவியிருக்க வேண்டும் என்று முடிவு செய்துள்ளார். ஆப்பிரிக்க நாட்டில் தோன்றிய மாந்த இனம் பின்னர்ப் பிற நாடுகளுக்கும் பரவியது என்றும் கூறியுள்

ளார். இதே ஆராய்ச்சியில் ஈடுபட்டுள்ள கலவை வேதியல் அறிஞர் பேரா, தகளசு வாலோ.ஈ என்பார் இம்முடிவை ஒரு வாறு மறுத்துள்ளார். உலக மாந்த இனத்திற்கு ஒரு தாய் மூலம் என்னும் முடிவை இவ்வாராய்ச்சியினால் அடைய வேண்டிய கட்டாயமில்லையென்றும், ஒரு சிற்றளவான எண்ணிக்கை யுடைய தாய்க் குடும்பமாகவும் இருக்கலாம் என்றும் அவர் கூறி யுள்ளார்'' என்பதாகும்.

இத்தகைய உயிரியல் ஆராய்ச்சி முடிவுகளும் ஓரிணை ப்பெற் றோர் அல்லது மாந்தரின் ஓரிடப் பிறப்புக் கொள்கையை சார்ந்தனவாகவே இருத்தலையும் ஏறத்தாழ இதே உண்மையை அரை நூற்றாண்டுகளுக்கு முன்பே பாவணர் தம் நுண்மதியால் உய்த்துணர்ந்து கூறியிருத்தலையும் அறியலாம்.

''உடலமைப்புப் பற்றிய மாந்தன் நிலைகளும், முதலாவது விலங்கு போல்வது,இரண்டாவது பண்டை நீக்ரோவரது,மூன்றாவது திரவிடரது, நாலாவது ஆரியரது'' என்று ஒப்பியன் நூலில் (1940-பக் 268)'' தமிழர் நீக்கிரோவர்க்கும் ஆரியர்க்கும் இடைப்பட்டோராதல்'' என்னும் பகுதியுள் பாவாணர் கூறி யுள்ளார்.

# ௫. குமரிக் கண்ட கொள்கை

சுகாட்டு எலியட்டு என்னும் அறிஞர் ''மறைந்த லெமூரியா [The lost Lamuria] என்னும் நூலில் ஆப்பிரிக்கக் கண்டம் முதல் ஆத்திரேலியக்கண்டம் வரை வித்தியம் முதல் கிழக் கிந்தியக் தீவுகள் வரை பரவியிருந்த நிலப்பரப்பு இருந்ததென் றும் அங்கு வாழ்ந்த குரங்கு வகையை இலெமூர் என்றும் கிளேற் றர் [Sclater] என்னும் அறிஞர் பெயரிட்டமையால் அந்நிலப் பரப்பை இலெமூரியா என்று அழைக்கலாம் என்றும் முதல் மாந்த இனம் அவ்விடத்தில் தான் தோன்றியதென்றும் கூறியுள் ளார். வயவர் வால்டர் இராலே என்பார் தாம் எழுதியுள்ள ''உலக வரலாறு'' [History of the world] என்னும் நூலில் இலெமூரியாவே முதல் மக்களினம் தோன்றிய நிலப்பரப்பு என்னும் கொள்கையை நிலைநாட்ட முயன்றார். பேராசிரியர் எக்கேல் என்பாரும் தம்முடைய படைப்பு வரலாறு [History of Creation] என்னும் நூலிலும் ''மாந்தர் குடிவழி மரபு'' [The Pedigree of man] என்னும் நூலிலும் சந்தாத் தீவுகளிலிருந்து ஆசிய கடற்கரை வழியாக ஆப்பிரிக்கக் கீழ்க்கரை வரை பரவி யிருந்த ஒரு பெருநிலப்பரப்பு இருந்ததென்றும் அந்நிலப் பரப் பின் ஒரு பகுதியில் தான் மாந்தன் தோன்றியிருத்தல் வேண்டு மென்றும் விளக்குகின்றார். வயவர்யோவான் எவான்சு என்னும் அறிஞரும் இலெமூரியாக் கொள்கைக்கு உடன் படுவதுடன் தென்னிந்தியாவே மாந்த இனத்தின் தாயகமாகும் என்னும் முடிவையும் அவர் எழுதிய 'மாந்தனின் தாயகம் (The Home of Man kind) என்னுங் கட்டுரையில் விளக்குகின்றார். இந்நூல் களின் கருத்துக்கள் தமிழக அரசு வெளியிட்டுள்ள தமிழ் நாட்டு வரலாறு-தொல் பழங்காலம் என்னும் நூலில் [பக் 114-118] விளக்கம் பெற்றுள்ளன.

இவர்களையன்றி, அறிஞர்கள் ஒல்டுகாம், யோவான், இங்கி லாந்து, ஆகியோரும் இலெமூரியாக் கொள்கையை ஏற்றுக் கருத்தறிவித்துள்ளனர்.

ஆத்திரேலியா முதல் ஆப்பிரிக்கா வரையேயன்றி, தென் அமெரிக்கா வரை பரவியிருந்த நிலப்பரப்பென்றும் அதற்குப் பெயர் காண்டுவானாக் கண்டம் என்றும் கூறுவர். கடல்நூல் Oceanography) என்னும் தற்காலக்கலை, ஒரு காலத்தில் தென் அமெரிக்காவினின்று ஆப்பிரிக்காவையொட்டியும் ஆத்திரேலியா வரை படர்ந்திருந்ததும், கண்டுவானாக் கண்டம் என்றறியப் பட்டதுமான ஒருமுழுகிய வியனிலத்தைப் பற்றி வியக்கத்தக்க உண்மைகளை அண்மையிற் கண்டுபிடித்திருக்கின்றது'' என்பது 29.7.1934 இல் வெளி வந்த இந்தியப் படவிளக்கம் கிழமையிதழ்ச் செய்தியாகும் என்று பாவாணர் தம் ''தமிழ் வரலாறு'' ( பக் 52] நூலில் எடுத்துக் காட்டுவர்.

வயவர் யோவான் மரே [Sir John Murry] என்னும் அறிஞர் இந்து மாக்கடல் ஆராய்ச்சிக்கு என இருபதினாயிரம் பொன் முதலீடு வைத்துச் சென்றமையும் அதன் பயனாக அமைந்த ஆராய்ச்சிக் கழகத்தார், சிந்து ஆறும், அவ் ஆற்றின் பள்ளத் தாக்கும் அதன் அருகில் உள்ள ஆரவல்லி மலைகளும் கடலுள் பெருந் தொலை சொக்கோத்ரா வரை நீண்டுகிடந்ததற்கான குறிகள் அத்தீவில் உள்ளன என்று கூறுகின்றனர் என்றும் ஆர வல்லி மலையின் தொடர்ச்சியும் சிந்து ஓடிய பள்ளத்தாக்கும் அதிற் காணப்படுகின்றனவென்றும் அறிஞர் அப்பாத்துரையார் [குமரிக்கண்டம் அல்லது கடல்கொண்ட தென்னாடு - பக் 21-22) எடுத்துக் காட்டுவர்.

இவ் அறிஞர்களால் குறிக்கப்பட்ட இலெமூரியா நிலப்பரப்பு பல்வேறு கடல் கோளால் அழிவுற்றது எனவும் கூறியுள்ளனர்.

இலெமூரியா நிலப்பரப்புக் கொள்கைகளை ஏற்று அறிஞர். பலர் பல செய்திகளை விளக்குகின்றனர்.

பொதுவுடைமைக் கொள்கையின் மூலவர்களாகிய இரட் டையருள் ஒருவர் பிரடரிக்கு எங்கேல்சு என்பார்,

''பல கோடி ஆண்டுகளுக்கு முன்பு நிலவரலாற்றில் இன்னும் தெளிவாக உறுதிசெய்யப்படாத ஒருகட்டத்தில் மிகவும் வளர்ச்சி பெற்ற மாந்தக் குரங்கினம் ஒன்று நிலவுருண்டையின் வெப்ப மண்டலத்தைச் சேர்ந்த ஏதோ ஒரு பகுதியில் வாழ்ந்திருத்தல் கூடும். இந்து மாவாரிக்குள் ஆழ்ந்து மூழ்கிப்போன ஒரு மாபெரும் கண்டத்தில் இந்த இனம் வாழ்ந்திருக்கக் கூடும். இவையே மாந்தனுக்கு முற்பட்டவையாகும். இவற்றைப் பற்றி தார்வின் கிட்டத்தட்ட சரியானதொரு விளக்கத்தைத் தந்துள்ளார் என்று கூறுகின்றார். [Dialectic of Nature Sixth Printing 1974 பக். 170]

பேரா. பி.தி. சீனிவாசர், தமிழர் வரலாறு (History of Tamils) இந்தியாவில் கல்லூழி (Stone Age in India) ஆரியர்க்கு முற்பட்ட தமிழ்ப்பண்பாடு (Pre. Aryan Tamil Culture) முதலான நூல்களிலும் பேரா. வி. ஆர். இராமசந்திரர் 'தமிழரின் தோற்றமும் பரவலும் (The origin and spread of Tamils) என்னும் நூலிலும் இவ் இலெமூரியா நிலப்பரப்பு கொள்கைக்கு அரணாகும் செய்திகளை வரைந்துள்ளனர்.

தமிழரை வந்தேறியராகவே கருதியிருந்த பேரா. வி.கோ. சூரிய நாராயணர் தாம் வரைந்த ''தமிழ் மொழியின் வரலாறு'' நூலில் பின்வருமாறு கூறிக் குமரிக் கண்ட கொள்கையை ஒப்புகின்றார்.

''இக் குமரிநாடுதான் கிழக்கே சந்தாத் தீவுகள் வரையிலும், மேற்கே மடகாசுகர் தீவு வரையிலும் அகன்று கிடந்ததாகக் கூறப்படும் இலெமூரியா என்ற நிலப்பரப்பாம், இந்நிலப்பரப்பு ஒரு காலத்தெழுந்த பெரு வெள்ளத்தில் ஆழ்ந்து போயிற்றென்றும் அவ்வாறு ஆழ்ந்து போன பெருநிலம் இவ்வுலக முழுவதற்கும் நடுவிற் கிடந்த பரப்பாகலான் மக்கள் முதன் முதல் இந்நிலத்திலிருந்து பின் நாற்றிசையினும் பிரிந்து சென்று வேறுபட்டனரென்றும் அங்ஙனம் இதிலிருந்து தொல்லோர் வழங்கியது தமிழ்ப் பாஷையாமென்றும், பலகாரணங்கள் காட்டி விளக்கி நிறுவினார் மேற்புல விஞ்ஞானிகளுரொருவர். இது கேட்பதற்கு இனிதாகவும், விநோதமாகவும் இருக்கின்றது''

(தமிழ் மொழியின் வரலாறு 1968 ஆம் ஆண்டுப் பதிப்பு பக். 77)

பேரா. கா. சுப்பிரமணியர் தாம் வரைந்த ''தமிழ் இலக்கிய வரலாறு'' முற்பகுதியிலும் யாழ்ப்பாணத்து ந. சிகந்தையா அவர்கள் தம் 'தமிழகம்' 'தமிழர் சரித்திரம்' முதலான நூல்களிலும், அறிஞர்கள் கா. அப்பாத்துரையார் குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு என்னும் நூலிலும், பேரா. க. ப. அறவாணர் வரைந்த 'தமிழரின் தாயகம்', திரவிட ஆப்பிரிக்க மாந்தவியல் ஆராய்ச்சி (Anthropological Studies on the Dravido-Africans) என்னும் நூல்களிலும், உயிரியல் குமுகவியல் மாந்தவியல் பண்பாட்டியல் தொடர்பான பல புதிய செய்திகளை எடுத்துக் காட்டி இலெமூரியா நிலப்பரப்புக் கொள்கையை மெய்ப்பிக்க முயன்றுள்ளனர்.

மொழி நூலறிஞர் பாவாணர் அவர்கள் மேனாட்டறிஞர்கள் ஆராய்ச்சிக் கருத்தையும் பேரா. பி. தி. சீனிவாசர், பேரா. வி. ஆர். இராமச்சந்திரர் முதலானோர் ஆராய்ச்சியையும் தம்

நூல்களில் பல இடங்களில் ஏற்றும் வழி மொழிந்தும் விளக்கியும் சொல்வதுடன் (ஒப்பியன் மொழி நூல் பக் 52—56) தமிழன் பிறந்தகம் தென் வாரியில் மூழ்கிப்போன குமரி நாடே (இலெமூரியா நிலப்பரப்பே) என்பதற்கான பலவகையான சான்றுகளைக் காட்டுகின்றார். அவை.

1) தமிழும் அதனொடு தொடர்புள்ள திரவிட மொழிகளும் நாவலந் தேயத்திற்குள்ளேயே வழங்குதலும், தென்மொழி வடக்கிற் செல்லச் செல்ல ஆரியப் பாங்கில் வலித்தும் உருத்தெரியாது திரிந்தும் சிதைந்தும் ஒடுங்கியும் இலக்கிய மற்றும் இடையீடு பட்டும் தெற்கில் வரவர மெல்லோசை கொண்டும் திருந்தியும் விரிந்தும் இலக்கிய முற்றும் செறிந்தும், இருத்தலும்.

2) நாவலந்தேயத்திற்கு வெளியே திரவிட மொழியின்மையும், மேலை மொழிகளிலுள்ள தென் சொற்கட்கெல்லாம் தமிழிலேயே வேர் அல்லது வேர்ப் பொருளிருத்தலும்.

3) தென் மொழிக் குடும்பத்து இற்றை நாற்பெரு மொழிகளும் தொன்று தொட்டு தென்னாட்டிலேயே வழங்குதலும், அவற்றுள் முழுத் தூய்மையுள்ள தமிழ் அந்நாட்டின் தென் கோடியிலிருத்தலும்.

4) தமிழ் நாட்டுள்ளும் தெற்கே செல்லச் செல்ல தமிழ் திருந்தியும் சொல்வளம் மிக்கும் ஒலியெளிமையுற்றும் இருத்தலும், திருத்தக் கல்விற்குத் தெற்கிட்டுப் பிறந்தவன் என்னும் வழக்குண்மையும்.

5) வடநாட்டு முன்வட (பிராகிருத) மொழிகளிலும் தெலுங்கு முதலிய மொழிகளிலுள்ள வன் மெய்களின்றிப் பதினெண் மெய்களே தமிழிலிருத்தலும், எட்டும் பத்தும் பன்னிரண்டாக மெய்யொலிகள் கொண்ட மொழிகள் ஆத்திரேலியாவிலும் அதனையடுத்துள்ள தீவுகளிலும் வழங்குதலும்.

6) தமிழ் முழு வளர்ச்சியடைந்து முத்தமிழான பின் ஏற்பட்ட தலைக் கழகம் குமரிக் கண்டத் தென்கோடிப் பஃறுளி யாற்றங்கரை மதுரையில் இருந்தமையும், குமரிக் கண்டத் தோற்றத்தின் எண்ணிற்கு மெட்டாத் தொன்மையும், அக்கண்டம் வரலாற்றுக் காலத்திற்கு முன்பே மூழ்கிப்போனமையும்,

7) தென்னை மரம் ஆத்திரேலியாத் தீவுகளின்றே பிற தென்கிழக்குத் தீவுகட்குக் கொண்டுவரப்பட்டதாகச் சொல்லப் படுவதும், குமரிக் கண்டத்தில் ஏழ்தெங்க நாடிருந்தமையும் தென் என்னும் சொல் தென்னை மரத்தையும் தெற்குத்திசையையுங் குறித்தலும்,

8) பண்டைத் தமிழ்ச் செய்யுட்களிற் கூறப்பட்டுள்ள நீர்நாயும், உரையாசிரியராற் குறிக்கப்பட்டுள்ள காரோதிமமும் (காரன்னமும்) ஆத்திரேலியாவிற்குத் தெற்கிலுள்ள தாசுமேனியத் தீவில் இன்னுமிருத்தல்.,

9) வணிகத்தால் வந்த இரண்டோர் அயல்நாட்டு விலங்குகளும் நிலத்திணை (தாவர)வகைகளுந் தவிர மற்றெல்லாக் கருப்பொருள்களும், கால வகைகளும் நில வகைகளுமாகிய முதற்பொருளும், இன்றும் தென்னாட்டிற்கு இயற்கையாகவுரியவையே பண்டைத் தமிழிலக்கியத்திற் கூறப் பட்டிருத்தல்.,

10) தென்னாடு, தென்னர் (தென்னாட்டார்) தென் மொழி, தென்னவன் (பாண்டியன்) தென் கலை என்னும் பெயர்கள் தொன்று தொட்டு வழங்கி வந்துள்ளமை.

11) தென்வடல், தெற்கு வடக்குத் தெரியாதவன், தெற்கும் வடக்குமாய்த் திரிகின்றவன், தென் பல்லி வட பல்லி (தலையணிகள்) முதலிய வழக்குகளில் தென் திசை முற்குறிக்கப் பெறல்.,

12) கடைக் கழகக் காலத்தமிழர் தம் இறந்த முன்னோரைத் தென்புலத்தார் எனக் குறித்தமையும், கூற்றுவன் தென்றிசைக் கிழவன், தென்றிசை முதல்வன், தென் புலக்கோன் எனப் பெயர் பெற்றிருத்தலும்.,

13) தென்மொழி வளர்ச்சியின் முந்து நிலைகளையெல்லாம் தமிழே காட்டி நிற்றல்.

14) கோதுமை, வாற்கோதுமை உறைபனி, பனிக்கட்டி முதலிய குளிர் நாட்டுப் பொருள்கள் பண்டைத் தமிழிலக்கியத்திற் சொல்லப்படாமையும், தமிழர்க்கு வந்தேறிக் கருத்தின்மையும்..

15) கடைக் கழகப் புலவர் நாற்பத்தொன்பதின்மராயும், இடைக் கழகப் புலவர் ஐம்பத்தொன்பதிமராயும் இருக்க, தலைக் கழகப் புலவர் மட்டும் ஐந்நூற்று நாற்பத்தொன்பதின்மராயிருந்தமை.,

குறிப்பு: தலைக் கழகப் பாண்டிய நாடு தெற்கே ஈராயிரம் கல் தொலைவு நீண்டு பரந்திருந்ததனால் அதற்கேற்பப் புலவர் தொகையும் மிக்கிருந்ததென அறிக.

16) தமிழ்ஞாலத்தின் நடுவிடமாக, நடவரசன் தில்லை மன்று குமரிநாட்டுப் பாண்டியனால் அமைக்கப் பெற்றமை.

குறிப்பு: தில்லைமன்று வடபாற் பனிமலைக்கும் தென்பாற் குமரிமலைக்கும் நடுவிடையே அமைந்ததனாலேயே, பேருலகத்-

தின் நெஞ்சத்தானை நிகர்த்தாயிற்று. இதன் விளக்கத்தை என் "தமிழர் மதம்' நூலுட் காண்க. தில்லைக்கு வடக்கிற் பனிமலை யளவு தொலைவிலேயே தெற்கிற் குமரிமலையும் இருந்தது''

இவ்வாறு பதினாறு சான்றுகளைத் தமிழர் வரலாறு (முன்னுரை பக் (12-14) என்னும் நூலிலும் மேலும் சில சான்றுகளை வண்ணனை மொழி நூலின் வழுவியல் (பக் 16-17) என்னும் நூலிலும் பாவாணர் காட்டுகின்றார்- அவை.

1. நாகரிகத் தொடக்க நிலைக்குரிய குறிஞ்சி மகளிர் தழையுடையும் தனியூராட்சியும், தமிழர் முழு நாகரிகமடைந்த பின்பும் அகப் பொருட் செய்யுட்களிற் புலனெறி வழக்கமாகக் கூறப்பட்டு வருதல்.

2. நண்ணிலக் கோட்டையடுத்த வெப்பநாட்டு மக்கட் குரிய நிறத்தராகவே பண்டைத் தமிழர் குறிக்கப் பட்டிருத் தலும், பனிக்கட்டியைப் பற்றி ஒரு குறிப்புமின்மையும்.

3. தமிழ் மக்கள் பழங்கற் காலத்திலிருந்து தென்னாட் டிலேயே தொடர்ந்து வாழ்ந்து வந்திருத்தலும், அவர்க்கு வந் தேறிக் கருத்தின்மையும்.

4. தமிழர் பிற நாட்டினின்று வந்தவரென்று பண்டைத் தமிழிலக்கியத்தில் ஒரு வரலாற்றுக் குறிப்புமின்மை.

5. எண்டிசைத் தலைவருள் வடபால் மூவர் தவிர ஏனைய வரெல்லாரும் குமரி நாட்டிற்கே பொருத்தமாயிருத்தல்.,

6. தென் மொழிச் சொற்களுட் பெரும்பாலான கொத்துக் கொத்தாகவும், குலங்குலமாகவுந் தொடர்பு கொண்டு தமி ழிலேயே வழங்கி வருதல்.''

குமரிக் கண்டக் கொள்கை வலுப்படுமுன்னரும் விளக்கம் பெறு முன்னரும் ஆரியர் முதலான பிற இனத்தாரைப் போலவே தமிழரை வந்தேறியராகவே கருதிய நிலையும் உண்டு அவை.

1. தமிழர் மங்கோலிய இனத்தை சேர்ந்தவரென்றும், திபேத்துப் பகுதிகளிலிருந்து தென்னிந்தியாவிற்கு வந்து குடியேறி யவர் என்றும் அறிஞர். வி. கனகசபை அவர்கள் தம்முடைய ஆங்கில நூலிற் குறிப்பிட்டுள்ளார். (The Tamils 1800 years Ago. பக் 74)

2. எகுபதிய நாகரிக மேம்பாடு வெளிப்பட்டபோது, உலகத் தின் முதல் இனத்தவராக எகுபதியரையும், முதல் நாகரிகமாக அவர்கள் தம் நாகரிகத்தைக் கருதிக் கொண்டு, எகிப்து நாட்டிலி ருந்து கி. மு. 3000 ஆண்டளவில் இந்தியாவிற்கு வந்து குடியேறிய

வர் தமிழர் என்னும் கருத்தை எலியட்டு சுமிது என்பார் கூறியுள்ளார். (Migration of Early Cultures—பக் 79-80)

3. பெலுசித்தானத்தைச் சேர்ந்த பகுதிகளில் வழங்கும் 'பிராகுவி' மொழி திரவிட மொழிக் குடும்பத்தைச் சேர்ந்ததாகக் கணக்கிடப்பட்டுள்ளது. அம்மொழிக்கும் தமிழுக்கும் இருந்த ஒற்றுமையைக் கண்டு, தமிழர் நடு ஆசியாவிலிருந்து இந்தியாவின் வடமேற்குப் பகுதிகளின் வழியாகக் குடியேறியவர் என்னும் கருத்தை அறிஞர் கால்டுவெல் கூறியுள்ளார். (தமிழ் நாட்டு வரலாறு—தொல் பழங்காலம் பக் 98)

4. தமிழர் நண்ணிலக் கடற்கரைப் பகுதியிலிருந்து இந்தியாவிற் குடியேறியவர் என்னும் கருத்தை அறிஞர் கென்னடி என்பார் எடுத்துரைத்தார். (Early Commerce of Babylon with India) பக் 248-297, தமிழ் நாட்டு வரலாறு-தொல் பழங் காலம் பக் 99 மேற்கோள்)

இக் கருத்து, பர். சிலேட்டர், பர். சுனீதிகுமார் சட்டர்சி ஆகியோர்க்கும் உடன்பாடாக இருந்துள்ளது.

இவ்வாறு தமிழர் இந்நாட்டிற் குடியேறியவர் என்னும் கருத்து இருப்பினும். தமிழர்க்குரிய இடத்தைக் கூறாமலும் தமிழர் வந்து புகுந்ததாகப் பல்வேறு வழிகளைச் சுட்டுதலும், அதற்குக் காட்டும் கரணியங்கள் மிக மென்மையானவையாகவும் வேறுபட்டதாகவும் உள்ளமையை அறியலாம். எழுதப்பட்ட தமிழிலக்கியங்களிலும், வாய்மொழி இலக்கியங்களிலும் எவ்விடத்தும் தமிழர் வேற்று நாட்டவர் என்னும் குறிப்பைக் காணவியலாது. மாறாகத் தமிழர்க்குக் குமரிக்கண்ட மூலமும், கடல்கோளால் அந்நிலப் பரப்பு அழிந்தமையும் ஆகிய செய்திகள் பலவிடங்களிலும் பரக்கக் கூறப்பட்டுள்ளன. அவை

1. செந்நீர்ப் பசும் பொன் வயிரியர்க் கீத்த
முந்நீர் விழவின் நெடியோன்
நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே'' [புறம் 9]

என்னும் புற நானூற்றுப் பாடலால் குமரியாற்றுண்மையை அறியலாம்.

2. குமரியாறு உண்டாகியமலை குமரிமலை என்பதையும் அம்மலைக்கு மகேந்திர மலையென்ற பெயர் வடமொழியில் வழங்கப்பட்டதையும்,

''பஃறுளி ஆற்றுடன் பன்மலை அடுக்கத்துக்
குமரிக் கோடும் கொடுங்கடல் கொள்ள''
(சிலம்பு 11- 20-21)

''மன்னு மாமலை மகேந்திரமதனிற்
சொன்ன வாகமத் தோற்றுவித் தருளியும்''
(திருவாசகம் கீர்த்தித் திருவகவல்
ஆகியவற்றால் அறியலாம்.

3. மேற்குறித்த சிலப்பதிகார அடிகளாலும்,
''மலிதிரை யூர்ந்து மண்கடல் வள்ளலின்
மெலிவின்றி மேற் சென்று மேவார் நாடிடம்பட''
(கலித்தொகை)

என்னும் கலித்தொகைப் பாடலாலும் குமரிநாடு கடல்கொள்ளப் பட்டதை அறியலாம்.

4. ''தெனாஅ துருகெழு குமரியின் தெற்கும்' (புறம் 6)
''குமரியம் பெருந்துறை யயிரை மாந்தி'' (புறம் 67)

ஆகியவற்றாலும், இவ்வாறே குறிக்கப் பெறும் மணிமேகலை, சிலப்பதிகாரப் பாடல் அடிகளாலும் குமரியாற்று உண்மையை அறியலாம்.

5. இவையேயன்றி, இறையனார் களவியல் உரையும் ''வடவேங்கடம் தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்' என்னும் தொல்காப்பியப் பாயிரத்திற்கு உரைவரைந்த இளம் பூரணர், ''கடல் கொள்வதன் முன்பு பிற நாடும் உண்மையின் தெற்கும் எல்லை கூறப்பட்டது'' என்று கூறுதலும்'' நெடியோன் குன்றமும் தொடியோள் பௌவமும்'' என வரும் சிலப்பதிகாரப் பாடல் வரிக்கு அடியார்க்கு நல்லார் வரைந்த உரைப்பகுதியும் குமரிக்கண்ட உண்மையை வற்புறுத்துவனவாகும்.

6. ''செங்கோன் தரைச் செலவைத் தனியூரான்
துங்கன் தமிழ்த்தாப் புலித்தொடரால்-அங்கிசைத்தான்
சக்கரக் கோ முன்னின்று சாற்றும் பெரு வூழி
அக்கரக்கோ நாமஞ்சு வாம்''

என்னும் முத்தூர் அகத்தியன் பாட்டால் குமரி நாட்டில் வாழ்ந்த அரசன் செங்கோனைப் பற்றியும், அவனுடைய தரை வென்றிச் செலவு பற்றிப் பாடிய தனியூர்ச் சேர்ந்தனைப் பற்றியும், அக்காலத்து வழங்கிய தாப்புலிப்பா என்னும் பாடலைப் பற்றியும் குறிக்கப் பட்டுள்ளதை அறியலாம்.

அறிஞர்தம் ஆராய்ச்சிக் கருத்தும், பாவாணர் காட்டும் சான்றுகளும், தமிழ் இலக்கியச் சான்றுகளுமாக இவ்வாறு, பல செய்திகள் இருப்பினும், மூமாவாரிப் புதிர்கள்'' (The Riddles of Three Ocean) என்னும் நூலைத் திரு. அலெக்சாண்டர் கொந்த

ரத்தோவு'' எழுதி வெளியிடும் வரை குமரிக்கண்டக் கொள்கை அதற்குரிய ஒப்பேற்பைப் பெறவில்லை என்றே கூறவேண்டும். குமரிக் கண்டக் கொள்கைக்கு அரணாக அமைந்த பல செய்திகள் அந்நூலில் கூறப்பட்டுள்ளமையும், தமிழிலக்கியங்களிற் காணும் குமரிக்கண்டச் செய்திகளை அந்நூல் வழி மொழிந்து செல்வதும் கவனிக்கத் தக்கவை.

''கோடிக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர், தென் அமெரிக்கா, ஆப்பிரிக்கா, இந்தியா, ஆத்திரேலியா, அண்டார்டிக்கா, ஆகிய கண்டங்களை உள்ளிட்ட கோண்டுவானா என்னும் மாபெரும் கண்டம் தென் கோளத்தில் இருந்ததாக நில நூலார் நம்புகின்றனர்.

''கோண்டுவானா நிலத்தின் பல பகுதிகளில் உள்ள விலங்கினங்களின் எலும்புக் கூடுகளையும் நிலத்திணைகளையும் ஒப்பு நோக்குங்கால் பல ஒற்றுமைகளைக் காண முடிகிறது. எலும்புக் கூடுகள் மட்டுமின்றி, வெம்மையை நாடும் மண்புழு இனங்கள் ஒரே வகையினவாகத் தென் மேற்கு ஆத்திரேலியாவிலும் இலங்கையிலும் காணப்படுகின்றன. இந்தியப் பெருங்கடல் வழியாக இம்மண்புழு ஊர்ந்து சென்றிருக்க வியலாது. இந்தியாவும் ஆத்திரேலியாவும் ஒரு காலத்தில் நிலப்பாலத்தால் இணைக்கப் பட்டிருக்கலாம், அல்லது நிலத் தொடர்ச்சியாக இருந்து பல்லாயிரக் கணக்கான மாத்திரிகள் பரப்பினையுடைய கடலால் பிரிக் கப்பட்டிருக்கலாம்.

வயிற்றில்குட்டிகளைத் தூக்கிச் செல்வனவும் பை போன்ற உறுப்பை உடையனவுமாகிய பாலூட்டிகள் ஆத்திரேலியாவிலும் தென் அமெரிக்காவிலும் மட்டுமே காணப்படுகின்றன. இதனால் இவ்விரண்டு கண்டங்களும் ஒரு காலத்தில் ஒரேநிலமாகவோ நிலப்பாலத்தால் இணைக்கப்பட்டிருந்தனவாகவோ இருக்கலாம் என்பதை அறியலாம்.

(The Riddles of Three Ocean பக். 123-24)

''தமிழ்ப் பழங்கதைகள், தமிழர்களின் தாயகம் அலைகளால் விழுங்கப்பட்ட இந்துமா வாரியில் இருந்தது என்று கூறுகின்றன. கடலுள் மூழ்கிய இலெமூரியாக் (குமரிக்) கண்டம் நாகரிகத்தின் தொட்டில் எனவும் கூறுகின்றன. உலகப் பண்டைய நாகரிகங்களில் குறைந்த அளவில் மூன்றில் இரண்டு, திரவிட மொழிகளைப் பேசிய இனங்களோடு தொடர்புடையன என்பதை நோக்குங்கால் வியப்பு மேலிடுகின்றது''

(மேற்படி நூல் பக். 132)

"இந்து மாக் கடலின் பரப்பளவு ஏழரைக் கோடிச்சதுர ஆயிரமாத்திரிகள் ஆகும். இது உலகக் கடற்பகுதியில் ஐந்தி லொரு பகுதி. நூறு ஆண்டுகளுக்கு முன்பு அறைகூவி' (Challenger) என்னும் கப்பலிலிருந்து கடலியலார் இப் பெருங் கடலை ஆராய்ந்தனர். 1886-இல் செருமன் கப்பல் 'பேசல்' என்பது தென்பகுதியிலும், உருசியக் கப்பல் 'விட்யசு' மகரோவ் தலைமையில் வடபகுதியிலும் விரிவான ஆராய்ச்சி செய்தன. பின்னர் உருசிய, பிரித்தானிய, செருமானிய, அமெரிக்க ஆராய்ச்சிகள் நடை பெற்றன. ஆனால் 1960-இல் தான் அமெரிக்க, பிரஞ்சு சோவியத்து மரக்கலங்களின் வழி அளவை செய்து பன்முக ஆய்வுகள் நடைபெற்றன."

"கடலுக்கடியில் 2½ ஆயிரமாத்திரி உயரமுள்ள பெருமலைத் தொடர், நடு இந்தியக் கடல்வாய், மூழ்கிக் கிடந்ததைக் கண்டு பிடித்தது குறிப்பிடத்தக்கது. அராபியத் தீவக் குறையிலிருந்து ஆம்சுடர்டாம் தீவுவரை இரு மலைத் தொடர்கள் ஒன்று அட்லாண்டிக்குப் பெருங்கடலிலும் மற்றொன்று பசுபிக்குப் பெருங்கடலிலும் நீண்டிருப்பது தெரிய வந்தது."

(மேற்படி நூல் பக். 172)

"தமிழ் உரையாசிரியர்கள் வலியுறுத்துவதுபோலத் திரவிடர்களின் தாயகம் கடலில் மூழ்கிவிட்டதா? தொல் திரவிடர்கள் ஆப்பிரிக்கக் கடற்கரைக்குக் குடிபெயர்ந்து போயினரா? அவர்களே பாரசீக வளைகுடாவிலும் இந்தியக் கடற்கரையிலும் குடியேறியவர்களா? நகரங்களையும் துறை முகங்களையும் உள்ளடக்கிய கீழையாப்பிரிக்க நாகரிகங்களின் தோற்றம் புதைபொருளாராய்ச்சியாளர்க்கும், வரலாற் றாசிரியர்க்கும் இன்னும் புதிராகவே உள்ளமையால், இவை யனைத்தும் உண்மையாகலாம். (மேற்படி நூல் பக்.176)

குமரிக்கண்ட உண்மையை மறுக்கவொண்ணாதவாறு, இத்தகைய பல செய்திகள் மூமாவாரிப் புதிர்கள் என்னும் அந் நூலில் காணக்கிடைக்கின்றன. உலக முதன்மொழி தமிழே என்பதை நிலை நாட்டுதற்குப் பாவாணர் குமரிக்கண்டமே மாந்தன் பிறப்பகம் என்னும் கொள்கையை அடிப்படையாய்க் கொண்டிருந்தார்.

பாவாணர் எழுதிய முதல் மொழியாய்வு நூலாகிய ஒப்பியன் மொழிநூலில், "பண்டைத் தமிழகம் (The original Home of the Dravidian Race) குமரிநாடே என்று யான் எழுதிய நூலை 1938-ம் ஆண்டு நவம்பர் — மீ எனக்குக் 'கீழ்கலைத் தலைவர்' பட்டத் (M. O. L. Degree)

திற்கு இடுநூலை[ Thesis), சென்னைப் பல்கலைக் கழகத்திற்கு விடுத்தேன். மூன்றாம் மாதம் அது தள்ளப் பட்டதாகப் பல்கலைக்கழக அறிவிப்பு வந்தது. என் இடுநூலை ஆய்ந்தவர் யாரென்றும், தள்ளினதற்குக் காரணங்கள் எவையென்றும் பல்கலைக் கழகத்திற்கு எழுதிக் கேட்டதற்கு, அவை மறைபொருள் என்று பதில் வந்துவிட்டது'' (ஒப்பியன் மொழிநூல் (1938) ப. 43) 1938-ஆம் ஆண்டு எழுதிய அதே நிலைதான், குமரிக் கண்ட ஆய்வுபற்றிய பல உண்மைகள் வெளிப்பட்டுள்ள இவ்வைம்பதாண்டுக் கால இடைவெளிக்குப் பின்னரும் தமிழகப் பல்கலைக் கழகப் பேராசிரியர்கள் சிலரைப் பொறுத்த அளவில் காரணமின்றியும் குமரிக்கண்டக் கொள்கை தள்ளப் படுகின்ற ஒன்றாகவே உள்ளது.

பெங்களூர் உ. த. க. கிளையின் வெளியீடாகிய மீட்போலை யில் 'அகத்திய லிங்கத்தின் ஆராய்ச்சி' என்னுந் தலைப்பில் வெளி யான ஒரு செய்தி:

''பெங்களூர்ப் பல்கலைக் கழக வெளியீட்டுத்துறையினர் 27-9-85, 28-9-85 ஆகிய இரு நாட்களிலும் இருதேசியச் சொற் பொழிவுகளை ஏற்பாடு செய்திருந்தனர். பேரா. பர். அகத்திய லிங்கம் அவ்விரு நாளிலும் சொற்பொழிவாற்றினர். முதல்நாள் சொற்பொழிவுக்கான தலைப்பு 'திராவிட மொழியாய்வில் அண்மைக்கால வளர்ச்சி' என்பது. ஒருமணி நேரச் சொற் பொழிவு முழுவதும் அவர் அறிந்த வண்ணனை மொழியியல் சார்ந்ததாகவே இருந்தது. அவையில் ஒருவர் எழுப்பிய வினா விற்குவிடையிறுத்தபோது,'திரவிடர் நண்ணிலக் கடற்கரை நாடு களிலிருந்து வந்தவரே' என்றும். 'தமிழ்நாட்டுத் தமிழர்க்கு விருப்பமான கொள்கையாகக் குமரிக்கண்டக் கொள்கை யுள்ளது' என்றும் ஒரு வித்தான சொத்தைக் கருத்தைக் கூறினார், [மீட்போலை சுவடி 4 ஓலை 10 செப்: அக். 85)

உலகம் உருண்டை என்னும் ஓர் உண்மையை உலகிற்கு முற் கூறியர்களான கியர்டானோ புருனோ, கலிலியோ, கோபர்நிகசு ஆகியோரைப் போலவே மொழியியல் உண்மைகளை முற்கூறிய பாவாணர் அடைந்த துன்பங்களும் சிறுமைகளும், அவர் செய்த ஈகங்களும் கணக்கில் அடங்கா. ஆயின் அவர் முற்கூறிய உண்மை கள் நிலைப்படும் இக்காலத்தில், குமரிக் கண்டம் போன்ற கொள்கைகளை ஒன்று புதிய கரணியங்களைக் காட்டி மறுக்க வேண்டும் அல்லது தடைகளை எழுப்பி விளக்கம் காண முற்பட வேண்டுமே யல்லாமல், தம் ஆசிரியரும் ஆசிரியர்க்கு ஆசிரியரும் தமிழ் மறைப்பு நோக்கத்தோடு குமரிக்கண்டக் கொள்கையை

ஏற்கவில்லை என்பதால் தாமும் தம் ஆராய்ச்சியறிவைப் புறந்தள்ளியும் ஆராய்ச்சி உண்மைகளைக் கண்டும் காணாமலும் 'வேதாளம் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்ட கதையைப்' போலத் 'தமிழ்நாட்டுத் தமிழர்க்கு விருப்பமான கொள்கையாகக் குமரிக்கண்டக் கொள்கையுள்ளது' என்பது போன்ற கருத்தைக் கூறிக்கொண்டிருப்பது தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகப் பேராசியர்களுக்குத் தகவாகாது.

## ச!. 'தமிழ் உலக முதன்மொழி' என்னும் கொள்கையின் ஆசிரியர்கள்

### 1. ஆரிய மயக்கும் கால்டுவெலார் ஆராய்ச்சியும்:

இடைக்காலத்திலிருந்து பத்தொன்பதாம் நூற்றாண்டிறுதி வரை ஒரு பெரும் வடமொழி மயக்கு தமிழைக் கவ்வியிருந்தது அம்மயக்கினால்

1) வடமொழி தேவமொழி;
2) வடமொழி இந்திய மொழிகளுக்கும், இந்தோ-ஐரோப்பிய மொழிகளுக்கும் — உலக மொழிகளுக்கும் மூலமானது;
3) வடமொழி பிற மொழிகளிலிருந்து கடன் கொள்ளாது;
4) தமிழை உள்ளிட்ட எல்லா இந்திய மொழிகளின் இலக்கணங்களும் வடமொழி அடிப்படையைக் கொண்டவை;
5) வடமொழித் துணையின்றி இந்திய மொழிகள் இயங்க வியலாது; முதலான கண்மூடிக் கொள்கைகள் வட மொழி வாணரால் பரப்பப்பட்டும், தமிழ்ப் புலவர் களால் நம்பி ஏற்கப்பட்டுமிருந்தன. அதனால் தமிழுக்கு வடமொழி மூலங் கற்பிப்பதைப் பெருமையாகவும் கருதினர்.

இந்த மயக்கத்திலிருந்து தெளிவடையச் செய்தவர் கால்டுவெலாரே. அவர் அரிதின் ஆராய்ந்து ஆங்கிலத்தில் எழுதிய திரவிட மொழிகளின் ஒப்பிலக்கணம் (A Comparative Grammar of the Dravidian or South Indian Family of Languages)என்றநூலே ஆரிய மயக்கை அகற்றியதாகும். அதுவரை தமிழ்ப்புலவர்கள் 'ஐந்தெழுத்தால் ஒரு மொழி அமையுமா?" என்பது போன்ற அறியாமைக்குள் உழன்றனர் என்ற நிலையைத் தான் காண முடிகின்றது.

இந்நிலையைக் கால்டுவெலார் சுட்டிக்காட்டும் இடங்கள் பல உள்ளன.

''வட இந்திய மொழிகளைப் போலவே, திரவிட மொழிகளும் சமற்கிருதத்திலிருந்து திரிந்தவை என்னுங் கருத்து (அவர்களுக்குத் தெரிந்தனவெல்லாம் பிராமணியத் தோற்றத்தையுடையவென்று கருதுகின்ற சமற்கிருதப் பண்டிதர்களால் நம்பப்பட்டு, கீழை மொழிக் கல்வியாளர்களால் அக்கருத்து விரைந்தேற்கப்பட்டது.''

(The Comparative Grammar of Dravidian Languages 1976-ஆம் ஆண்டு பதிப்பு முன்னுரை பக். 43)

''திரவிட மொழிகள் அனைத்தும் சமற்கிருதத்திலிருந்து தோன்றியனவே என்று நம்பிய கீழை மொழிக் கல்வியாளர், திரவிட மொழிகளின் அகரமுதலிகளில் திரியாமலும் திரிந்தும் காணப்பட்ட சமற்கிருதச் சொற்களின் அடிப்படையிலேயே அவ்வாறு கருதினர்.''

(மேற்படி நூல் முன்னுரை பக். 44)

என்று பல இடங்களில் கீழை மொழிக் கல்வியாளர்களின் தவறான கருதுகோளைக் கால்டுவெலார் சுட்டிக் காட்டுவதைக் காணலாம்.

தமிழின் தனித்தன்மையைக் காட்டுதற்குச் சமற்கிருதத் தொடர்பில்லாத அடிப்படைச் சொற்களாக அப்பன், ஆயி, மகன், மகள், தலை, கண், செவி, வாய், பல், மயிர், கை, கால் ஞாயிறு, திங்கள், வான், நாள், இரவு, தீ, நீர், மீன், மலை, மரம், கல், இல், ஊர், ஆனை, குதிரை, ஆ (பசு), எருமை, நாய், பூனை, கடுவாய், மான், குரங்கு, கரடி, பன்றி, பாம்பு, பறவை, கரு (மை) வெள், சே (சிவப்பு), பெரு, சிறு, இன் (இனிமை), புளி, உப்பு, தின், குடி, வா, போ, நில், இரு, ஏகு, ஓடு, உறங்கு, கேள், சொல், நகை, அழு, கொல் ஆகிய அறுபது சொற்களை எடுத்துக் காட்டுவதோடு, (மேற்படி நூல் முன்னுரை பக். 46)

''திருந்தாத மொழிகளாகத் திரவிட மொழிக் குடும்பத்தில் உள்ளமையையும், அவற்றில் சமற்கிருதச் சொற்களே இல்லா திருத்தலையும் கீழை மொழிக் கல்வியாளர்கள் அறியாதிருக்கின்றனர்'' என்றும்,

(மேற்படி நூல் பக். 46)

''விவிலியத் தமிழாக்கத்தின் பத்துக் கட்டளைகளில் காணும் மற்கிருதச் சொற்களின் எண்ணிக்கை ஆங்கில மொழி

யிலமைந்த அப்பகுதியில் காணும் இலத்தீனச் சொற்களின் எண்ணிக்கையை ஒத்துள்ளது. ஆயின், இலத்தீன மொழிக்கு ஆங்கில மொழி கடன்பட்டுள்ளதைப் போல அவ்வளவு ஆழமான கடனைத் தமிழ் சமற்கிருதத்திற்குப் பட்டுள்ளதெனக் கூற வியலாது. சமற்கிருதச் சொற்களில் பலவற்றையும் அல்லது முழுமையாகவும் உடனடியாக நீக்கிவிட்டு இன்னும் தூய்மையாகவும், மேன்மையான நடையுடனும் திகழ முடியும். ஆயின் ஆங்கிலத்தில் உள்ள இலத்தீனச் சொற்களை நீக்கிவிட்டால் பொருள் தெளிவின்றிப் போகும். இலத்தீனிலிருந்து ஆங்கிலோ-சாக்சானியம் கடன் பெற்றுள்ள சொற்களில் பலவற்றிற்கு இணையான சொற்களை அம் மொழியில் காணவியலாதாகையால், இலத்தீனச் சொற்களை நீக்க வேண்டியதேற்படின் ஒரு சொல்லால் குறிக்க வேண்டியதைச் சுற்றி வளைத்துச் சொல்கிற நிலைமையேற்படும். ஆனால் தமிழில் சமற்கிருதச் சொற்களுக்கு இணையான வளமான சொற்கள் உள்ளன என்பதும், தேவை காரணமாக இல்லாமல், காலப் புதுமையின் காரணமாகவே தமிழ் வடமொழிச் சொற்களைக் கடன் கொள்கிறது என்பதையும் அறிதல் வேண்டும்.''

(மேற்படி நூல் முன்னுரை பக். 49)

என்றும் கூறுவதுடன், திரவிட மொழிகள் சமற்கிருதமொழியினின்றும் வேறுபட்ட தனிமொழிகள் என்பதைப் பல்வேறிடங்களில் பல்வேறு சான்றுகளைக் காட்டி மெய்ப்பித்து நிறுவுகின்றார். அதன்பின்னரே, தமிழ் முதலான திரவிடமொழிகள் அனைத்தும் சமற்கிருதத்தைப் பிறப்புமூலமாகக் கொண்டவை என்னும் கொள்கை உடைத்துத் தூளாக்கப்பட்டது.

தமிழ் முதலான திரவிட மொழிகள் வடமொழிப் பிறப்பின அல்லவெனின், வேறு எப்பிறப்பின எனக் காட்ட வேண்டியதும் கால்டுவெலார் போன்ற மொழி நூலார்க்குக் கடமையானது. அது பற்றிக் கால்டுவெலார் கூறுவதாவது:

''இந்தோ-ஐரோப்பிய மொழிக் குடும்பத்திற்கும், துரேனிய அல்லது சித்தியக் குழுவிற்கும்—இடைப்பட்ட நிலையில் அல்லாது — முன்னதைக் காட்டிலும் பின்னதற்கு (துரேனியத்திற்கு) நெருங்கிய ஓரிடத்தையே திரவிடமொழிகள் பெற்றுள்ளன என்பது என் கொள்கையாகும்.''

(மேற்படி நூல் ஆசிரியர் முகவுரை பக். ix)

துரேனிய மொழிகளே உலகத்தின் முதன்மொழியிலிருந்து தோன்றியனவாக இருக்க வேண்டும் என்பதும், அம்மொழிக்

குடும்பத்திற்கு நெருங்கியதாகத் தமிழ் முதலான திரவிட மொழிகள் உள்ளன என்பதும், தமிழர், ஆரியரைப் போலவே வெளிநாட்டிலிருந்து இந்தியாவிற்குள் நுழைந்து குடியேறியவர் என்னும் கொள்கையைக் கால்டுவெலாரும் கொண்டிருந்தார் என்பதும் உண்மையாகும். தொல்காப்பியமும் கடைக்கழக இலக்கியத்தில் பலவும் வெளிப்படாத காலத்தில் வாழ்ந்திருந்தவர் கால்டுவெலார் ஆதலாலும், அவர் வெளிநாட்டவர் ஆதலாலும் அவராலும் பல உண்மைகளை முழுமையாய்க் காணமுடியவில்லை என்பதும் உண்மையாகும்.

தமிழ் உலக முதன்மொழி என்னுங் கொள்கைக்கு ஆசிரியராகக் கால்டுவெலார் அமையவில்லையெனினும், தமிழ் சமற்கிருத மூலத்தைக் கொண்டது என்பதைப் பொய்யாக்கியதும், பின்னர் தோன்றிய மொழியியலார்க்கு உண்மை காணத் தூண்டுகோலாக அமைந்ததும் கால்டுவெலார் மேற்கொண்ட திரவிட மொழியாராய்ச்சியின் பெரும் பயன்களாகும்.

பாவாணரின் மொழியாய்வுக்கு அடிப்படையாய் அமைந்தவை மாக்கசுமுல்லர், கால்டுவெலார் ஆகியோரின் மொழியாய்வுக் கருத்துகளும் முடிவுகளுமே என்று கூறினல் அது மிகையன்று. பாவாணரின் முதல் மொழியாய்வு நூலான ஒப்பியன் மொழி நூலில் இது பற்றிக் காணும் சில கருத்துக்களாவன:

''மொழி நூலானது உலக மொழிகள் எல்லாவற்றையும் தழுவும் ஒரு பொதுக்கலை. உலகமொழிகள் எல்லாவற்றையும் ஆரியம் (Aryan), சேமியம் (Semitic), துரேனியம் (Turanian) என்னும் முப்பெருங் குலங்களாகப் பிரித்துள்ளார் மாக்கசுமுல்லர் அவற்றுள், துரேனியத்தைச் சேர்ந்ததாகக் கருதப்படும் திரவிட.. குடும்பத்தின் மொழிகளைத் திறம்பட வகுத்துக் காட்டியவர் கால்டுவெல். இங்ஙனமே பிறரும் பிற குடும்பங்களை வகுத்துக் காட்டியுள்ளனர். மேற்கூறிய முக்குலங்கட்கும் உள்ள தொடர்பை ஆராய்வதே இந்நூலின் நோக்கம். அவற்றுக்கோர் தொடர்புண்டென்று, அதாவது, அம்மூன்றும் ஒரு மூலத்தினின்றும் கவைத்திருக்க வேண்டுமென்று சென்ற நூற்றாண்டிலேயே மாக்கசுமுல்லர் (Max Muller) திட்டமாய்க் கூறிவிட்டார். அம்மூலத்திற்குத் திரவிடம் மிக நெருங்கியதென்று கால்டுவெல் கூறியுள்ளார். இக்கூற்றை என்னாலியன்றவரை மெய்ப்பித்திருக்கிறேன்.''

(ஒப்பியன் மொழிநூல் முதன்மடலம். திராவிடம் முதற்பாகம் (தமிழ்) 1940 முகவுரை பக் v)

என்று ஒப்பியன் மொழிநூலின் தோற்றத்தைப் பற்றியும்,

''உலகத்திலுள்ள மொழிகளெல்லாம் வேர்ச் சொற்களின் உறவாலும், இலக்கணவொற்றுமையும் பற்றி, துரேனியம் (Turanian), ஆரியம் (Aryan) சேமியம் (Semitic) என முக்குலங் களாக வகுக்கப்பட்டிருக்கின்றன.'' (மேற்படி நூல் பக். 6) என்று மாக்கசுமுல்லர், கால்டுவெலார் ஆராய்ச்சி முடிவுகளை மேலும் வழி மொழிந்தும்,

''பல நாட்டு மொழிகள் மேனாட்டு மொழிகளில் வரையப் பட்டபின், மாக்கசுமுல்லர் என்ற மாபெரும் புலவர், சென்ற நூற்றாண்டில், தம் வாணாளையெல்லாம் மொழிநூற் கல்விக்கே ஒப்புக் கொடுத்து, உலக மொழிகளிற் பெரும்பாலானவற்றை ஆராய்ந்து, தம் நுண்மாண் நுழைபுலத்தால் ஒப்பியன் மொழி நூலை உருவாக்கினார்.

'மாக்கசுமுல்லர் திரவிட மொழிகளைச் சரியாய் ஆராயாத தாலும், அவற்றை வடமொழியின் கிளைகள் என்று தவறாக எண்ணியதாலும், திரவிடத்தின் உண்மையான இயல்புகளைக் கூறமுடியவில்லை. திரவிடம் வடமொழிச் சார்பற்றதென்றும் உலக முதன்மொழிக்கு மிக நெருங்கியதென்றும், வடசொல்லென மயங்கும் பல சொற்கள் தென் சொற்களேயென்றும், வடமொழி யில் பல தமிழ்ச் சொற்கள் கலந்துள்ளனவென்றும், முதன்முதல் எடுத்துக் காட்டி, மொழி நூற் சான்றுகளால் நிறுவியவர் கால்டுவெல் (Caldwell) கண்காணியாளரே. திரவிட மொழி கள் மொத்தம் பன்னிரண்டென்பதும், அவற்றுள் ஆறு திருந்தின வும், ஆறு திருந்தாதனவுமாகும் என்பதும், பெலுச்சித்தானத் திலுள்ள பிராஹுய் திரவிட மொழியே யென்பதும் இவருடைய கண்டுபிடிப்புகளே. திரவிடம் வடமொழிச் சார்பற்றது, வடமொழியில் பல திரவிடச் சொற்களுள்ளன என்னுங் கொள்கைகளில், இவருடன் ஒன்றுபட்டவர், இவர் தமிழைச் சிறப்பாயாராய்ந்தது போன்றே மலையாள மொழியைச் சிறப்பாயாராய்ந்த டாக்டர் குண்டர்ட் (Gundert) ஆவர். இவ் விருவர்க்கும் திரவிடவுலகம், சிறப்பாய்த் தமிழுலகம் பட்டுள்ள கடன் மாரிக்குப் பட்டுள்ளதேயெனினும் பொருந்தும்.

கால்டுவெல், மாக்கசுமுல்லர் என்ற இருவர் ஆராய்ச்சிகளே இந்நூலுக்கு முதற்காரணமாகும். (மேற்படி நூல் பக். 10-11) என்று ஒப்பியன் மொழிநூல் எழுதப்பட்ட காரணத்தைக் குறித்தும் பாவாணர் கூறியுள்ளவற்றை அறியலாம்.

அதோடு, ''முக்குல மொழிகளும் ஒரே மூலத்தின''

(மேற்படி நூல் பக்.27)

என மொழிநூல் நெறிமுறைகளில் 11 ஆவது நெறிமுறையாகவும் பாவாணர் சேர்த்துள்ளார்.

பாவாணர் தம் ஆய்வுத் தொடக்கத்திற்குக் கால்டுவெலாரும் மாக்கசு முல்லரும் மூலவர் எனப் பல இடங்களில் ஒப்பியுரைத் தாராயினும், அவரிருவர்க்கும், வேறு எவர்க்கும் மேலாக மொழி யியல் உண்மைகளை அவரால் கண்டறிய முடிந்தாலும், அதனால் அவ்விரு மேலையறிஞரும் பிறரும் செய்த பிழைகளை யும், தடுமாறிய இடங்களையும் பாவாணர் சுட்டத் தவறிய தில்லை.

''கால்டுவெல், மாக்கசு முல்லர் என்ற இருவர் ஆராய்ச்சி களே இந்நூலுக்கு முதற்காரணமாகும்.'' என்று பாவாணர் கூறிய ஒப்பியன் மொழிநூலிலேயே, அவர்களைப் போன்ற மேனாட்டார் உண்மையைக் காணமுடியாமைக்கான காரணங் களைப் பின்வருமாறு கூறுகின்றார்.

''மேனாட்டார் நடுநிலையும் ஒப்பியலறிவும் உடையாரா யினும், தமிழின் உண்மைத் தன்மையைக் காண முடியாமைக்குப் பின் வருபவை காரணங்களாகும்:-

1. தமிழ் தற்போது இந்தியாவின் தென்கோடியில் ஒரு சிறு நிலப் பரப்பில் வழங்கல்;
2. (தமிழுட்பட) இந்திய மொழிகள் எல்லாவற்றிலும் வட சொற்கள் கலந்திருத்தல்;
3. (கடல்கோளாலும், ஆரியத்தாலும், தமிழர் தவற்றா லும் பண்டைத் தமிழ்நூல்கள் அழிந்து போன பின்) இந்தியக் கலைநூல்களெல்லாம் இப்போது வடமொழி யிலிருத்தல்;
4. இதுபோது பல துறைகளிலும் பார்ப்பனர் உயர்வாயும் தமிழர் தாழ்வாயுமிருத்தல்;
5. பார்ப்பனர் தமிழரின் மதத் தலைவராயிருத்தல்;
6. தமிழைப்பற்றித் தமிழரே அறியாதிருத்தல்;
7. ஐரோப்பியர் தமிழைச் சரியாய் கல்லாமை.

கால்டுவெல் கண்காணியார், தமிழ், வடமொழித் துணை வேண்டாத தனிமொழியென்றறிந்தும், தமிழர் உயர்நிலைக் கலைகளை ஆரியரிடத்தினின்றும் கற்றதாகத் தவற்றெண்ணங் கொண்டமையால் தமிழில் மனம், ஆன்மா என்பவற்றைக் குறிக்கச் சொல்லில்லை யென்றும், திரவிடம், சேரன், சோழன், பாண்டியன் என்னும் பெயர்கள் வடசொற்கள் என்றும், இன்ன

என்னும் வடிவிற்கொத்த அகரச் சுட்டடிச் சொல் தமிழிலில்லை யென்றும், பிறவாறும் பிழைபடக் கூறினர்.''

(மேற்படி நூல் பக். 41-42)

கால்டுவெலார் ஆராய்ச்சியைப் பற்றிப் பாவாணர் கூறிய இக்கருத்து, ஒப்பியன் மொழிநூல் தோன்றி இருபத்தேழாண்டு கட்குப் பின்னர் எழுதப்பட்ட தமிழ் வரலாறு [1967] என்னும் நூலில், 'கால்டுவெல் கண்காணியாரின் காட்சியுரைகள்' என்று கால்டுவெலார் கண்ட உண்மைகளைப் பாராட்டியும், 'கால்டுவெல் கண்காணியாரின் கடுஞ்சறுக்கல்கள்' என்று அவர் தவறிய இடங்களைப் பட்டியலிட்டும் பாவாணர் காட்டியுள்ளார்.

கால்டுவெலாரின் திரவிட மொழியாராய்ச்சி நிகழ்ந் திராவிடின்,

1. தமிழுண்மைகள் பல அறியமுடியாதவாறு அழிந்தும்;
2. அறியப்படும் தமிழுண்மைகளும் காலந்தாழ்ந்து வெளிப் பட்டும்;
3. தமிழாராய்ச்சி சரியான தடத்தில் செல்லுவதிலிருந்து தப்பியும், காலம் தாழ்ந்தும்;
4. தமிழெழுச்சி தோன்றாதவாறும் ஆகியிருக்கும். எனவே கால்டுவெலாரை உலக முதன்மொழி தமிழே என்னுங் கொள்கையின் மூலவர் எனக்கொள்ளுதல் பிழை யாகாது

## 2. மாகறல் கார்த்திகேயனார்

''பொய்யகல நாளும் புகழ்விளைத்தல் என்வியப்பாம்
வையகம் போர்த்த வயங்கொலிநீர்—கையகலக்
கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளோடு
முன்தோன்றி மூத்த குடி'' என்னும் புறப்பொருள் வெண்பாமாலைச் செய்யுளைப் போலவும்,

''வைய மீன்றதொல் மக்கள் உளத்தினைக்
கையி னால்உரை கால மிரிந்திடப்,
பைய நாவை அசைத்த பழந்தமிழ்
ஐயை தாள்தலைக் கொண்டு பணிகுவாம்.''

என்னும் கரந்தைக் கட்டுரைச் செய்யுளைப் போலவும், "சமயக் கணக்கர் மதிவழிச் செல்லாமற் பொது வகையாகவும், பிறவாறு விருப் புணர்வாலும்; நம்பிக்கையாலும், தமிழை உலக முதன் மொழி என்று கூறும் இலக்கிய ஆசிரியர்களும் ஆராய்ச்சியாளர்

கூறும் பலர் உளர் எனினும் இவ்வாறு பொதுவகையால் கூறும் செய்திகளை விலக்கி, ஏதேனும் ஓர் அடிப்படையில் நெறிமுறைகளின் பாற்பட்டு புது ஆராய்ச்சி முறைகளுடனும் ஆராய்ந்து தமிழே உலகமுதன்மொழி என முடிவு கூறியவர்களுள் முதன்மையானவர் 'மொழிநூல்' ஆசிரியராகிய மாகறல் கார்த்திகேயனார் ஆவர்.

மாகறலார்க்குக் குமரிக்கண்டக் கொள்கை ஏற்புடையதே என்பதை,

''இத்துணை யாராய்ச்சியானே குமரிக்குத் தென்பால் பெரு நிலப் பரப்பு இருந்த தென்பதும், அது உலகிற்கு நடுமையாமென்பதும், ஆண்டிருந்தோர் தமிழரென்பதும் சிறந்த பல காரணங்களாற் பெறப்பட்டமை காண்க.''

(மொழிநூல் (1913) பாயிரவியல் பக். 18)

என்பதாலும், அவ்விடத்தேதான் மாந்தன் தோன்றிப் பல இடங்களுக்கும் பரவினான் என்பதை,

''இங்ஙனமாய முக்கிய காரணங்களால் கடல் கொண்ட எழுநூறு காவத நிலப்பரப்பில் நூறுகாவத வளவினதாய ஏழ்குன்ற நாட்டில் மணிமலையில் வேணு வனத்தில் பழந்தமிழ் மொழி பிறந்த தென்பர். அக்குன்றநாடு வெம்மை மிகுந்துள்ள குறிஞ்சியாகலின் முதன்முதல் எல்லா உயிர்களும் அவ்விடத்தே பிறந்து பெருகிப் பின் பல விடங்களிலும் பிரிந்தன''

(மேற்படி நூல் பாயிரவியல் பக். 67)

என்பதாலும் அறியலாம்.

ஆரியத்தினும் தமிழே முதலில் உண்டாயது என்பதும் அவர்தம் கருத்தாகும். இதனை,

''உலகத்து முதன்முதல் ஏற்பட்ட இயற்கைநிலப் பாகுபாடாகிய குறிஞ்சி முதலிய திணைகளுக்கும், இயற்கைக் காலப் பாகுபாடாகிய பெரும் பொழுது சிறுபொழுதென்னும் முதற் பொருளுக்கும், இலக்கணமின்மையானும்; ககோள நூலுக்குப் பின்னரேற்பட்ட அசுவனி முதலிய எல்லா நாள்களுக்கும், மேட முதலிய எல்லா இராசிகளுக்கும், அமர முதலிய வடமொழி நிகண்டுகளில் வேறு பெயர் கூறாமையானும், செயற்கையிற் செயற்கையாய கனைத்தலோசையும் உரப்பலோசையும் மிகுந்திருக்கின்றமையானும்; செயற்கையாய ஐகார ஔகார யகார முதன்மொழிகளால் சிறந்திருக்கின்றமையானும்; பிற்காலத்துண்டாய உபசர்க்கச் சொற்களும், தொடர் மொழிகளும் நிரம்பியிருக்கின்றமையானும்; ஒன்று முதலிய எண்களுக்கு வரி

வடிவம், நுணுகியுணர்வதற்கு முந்திரை, இம்மி, சுவடு முதலிய அளவுப் பெயர்களும், மிளா, பூட்டு, சாவி முதலியவற்றிற்குத் தனிச் சொற்களும், இன்மையானும்; ஆகுபெயரிலக்கணமின்மை யானும்; உரை வழக்கின்மையானும்; தமிழ் முதலிய மொழி களில் பவ்வீ முதலிய பெயர்களும் ஆண்குறி பெண்குறி முதலிய வற்றையுணர்த்துஞ் சில பெயர்களும், அவையல் கிளவியாயின மைபோலக் கடிதடம் நிதம்ப முதலிய பெயர்களும் அங்ஙனம் ஆகாமையானும், நாவிற்குக் கடினமாகிய வல்லின மெய்யீற்றுச் சொற்களுண்மையானும்; செயற்கையெழுத்துகள் மொழி முதலில் வருகின்றமையானும்; மூவகைச் சொற்கள் மிகுதிப் பட்டிருக்கின்றமையானும்; நாவின் செயற்கை நிகழ்ச்சியாகிய மயக்கம் பெரிதுண்மையானும்; பிறவற்றானும் ஆரியம் தமிழ்க் குப் பிறகுண்டாயதென்பதே துணிவு''

(மேற்படி நூல் பாயிரவியல் பக். 32)

என்னும் அவர்தம் கூற்றால் அறியலாம். இக்கருத்தை அவர் மேலும் பல இடங்களில் வற்புறுத்திக் கூறுவதையும் காணலாம். அவை:

''மணிப்பிரவாள நடை முதலியவற்றால் தமிழ் ஆரியத்துக்கு முற்பட்ட தென்பது அங்கைக் கனிபோல் விளங்குகின்றது. தமிழ் ஆரியத்துக்கு முற்பட்டது எனக் கூறுவனவெல்லாம் உண்மை கூற வந்ததன்றி ஆரியத்துக்குக் குறைகூறவந்ததன்று''

(மேற்படி நூல் பாயிரவியல் பக். 52)

''தமிழ் இயற்கை மொழி என்பதையும் ஆரியம் செயற்கை மொழி என்பதையும் இவ்வாராய்ச்சி வற்புறுத்துகின்றது. ஆகலின் தமிழ், ஆரியத்துக்கு முற்பட்ட தென்பதில் ஐயுற வென்னை?''

(மேற்படி நூல் பாயிரவியல் பக். 53)

''மொழி முதலெழுத்தையும், மயக்கத்தையும், சந்தியெழுத் துக்களையும், அய்இ அவ்உ முதலிய வாய்பாடுகளையும், குற்றிய லுகர குற்றியலிகரங்களையும், சொற்களின் தோற்றத்தையும், நடுநிலையில் நின்று ஆராய்ந்தவர்க்கே தமிழ் இயற்கை மொழி யென்பதும், அது ஆரியத்துக்கு முற்பட்ட தென்பதும் விளங்கி நிற்கும்''

(மேற்படி நூல்பாயிரவியல் பக். 79-80)

''ஆரியத்துக்கு முன் தமிழ் இருந்ததென்பது கடுக்கனுக்கு முன் பொன் இருந்த தென்பது போலக் கொள்ளல் வேண்டும். இனிப் பாளியும் பஞ்சத்திராவிடமும் தமிழின் வழிமொழிகளாம். கிரந்தம், இவ்வெல்லாவற்றினின்று முண்டான சார்பு மொழி

யாகும். கிரந்தத்துக்குப் பிறகு ஆரியமென்னும் பெயருண்டாயது. ஆரியத்தின் திருத்தம் சமற்கிருதம்''

(மேற்படி நூல் பாயிரவியல் 86)

இவ்வாறு பல்வேறு காரணங்களைக் காட்டி ஆரியம் செயற்கைமொழியென்றும், தமிழுக்குப் பிற்பட்டது என்றும் கூறுவதோடு, ஆரியம்மட்டுமின்றி, கிரேக்கம் இலத்தீனம் முதலான பழைய செம்மொழிகளும் செயற்கை வளர்ச்சி யுடையன என்பதும், அதனால் அவையும் பிற்பட்டனவே என்பதும் அவர்தம் கருத்தாகிறது என்பதைப் பின்வருங் கூற்றுகளால் அறியலாம்.

''செந்தமிழ் இயற்கை வளர்ச்சியோடு செயற்கை வளர்ச்சி பெரிதுமுடையது. ஆரியம், கிரேக்கு, இலத்தீன் முதலியன பெரிதும் செயற்கை வளர்ச்சியுடையன. ஆங்கிலம் செயற்கை வளர்ச்சியைப் பெறுகின்றது. தெலுங்கிற்குச் செயற்கை வளர்ச்சி சிறிதேயாம், மலையாளம் முதலியன இயற்கை வளர்ச்சி யுடையன. பழைய மராட முதலியன இயற்கை வளர்ச்சி யொன்றேயுடையன''

(மேற்படி நூல் பாயிரவியல் பக் 44)

''இத்துணையானே உலகத்தில் முதல் முதல் கைக்குறியும் ஒலிக்குறியும் இருந்தனவென்பதும், அவ்வொலிக் குறியினின்று இயற்கையாக உண்டானது இசைக்கல்வியென்பதும் அவ்வியற்கையாய இசைக்கல்வியினின்றுண்டாய இயற்கை மொழி தமிழ் மொழி என்பதும் பஞ்சத்திராவிட முதலியனவும் தமிழின் வழிமொழிகளென்பதும் எகிப்து, பாரசீகம், எபிரேயம், அரபி, கிரீக்கு, இலத்தீன் முதலிய பாழைகள் தமிழர் நாகரீகத்தை யெடுத்துக் கூறுகின்றமையானும் பல்வகைச் சிறந்த காரணங்களாலும் அத்தமிழ் ஆரியத்துக்கு முன்னேயேயுள்ளதென்பதும் பெறப்பட்டமை காண்க.

இயற்கை நிலப்பிரிவும், இயற்கைக் காலப் பிரிவும் நாவிற்கெளிதாய இயற்கையொலிவடிவெழுத்தும் கைக்கு எளிதாய இயற்கை வரிவடிவெழுத்தும், இயற்கைச் சொற்களும், இயற்கைப் புணர்ச்சியும் அன்றி வேறு செயற்கையல்லாத காலம் வரையும் இருந்த தமிழ் பழந்தமிழெனப்படும்''

(மேற்படி நூல் பாயிரவியல் பக். 79)

தமிழ் உலக முதன் மொழியென்பதும், அவர் தம் முடிபான கருத்தாகும். இதை அவர்தம் மொழி நூலில் பாயிரவியல் இறுதியில் 'கவனிப்பு' என்னும் பகுதியில் பின்வருமாறு கூறுகின்றார்.

"இம் மொழி நூலில் இலக்கணவியலுள் எழுத்தோசை பொருளோசைகளையும், சந்தியெழுத்தையும், சந்தியெழுத்தின் படியே வுண்டான பதசந்திகளையும் மொழி முதல் வருமெழுத்து வாராவெழுத்துகளையும்,வகர முதன்மொழி முதலியவற்றையும் பிறப்பிடத்தால் இயல்பாக ஒத்துள்ள உடனிலை மெய்ம்மயக்க முதலியவற்றையும்,முதனிலைப்பேறு ஒற்றினீக்கம் நிலை மாற்றம் இனந்தழுவல் முதலியவற்றையும், நெருப்பின் பெயர் முதலிய வற்றையும், உலகவியற்கையும், பிறவும் நன்கு ஆழ்ந்து நுணுகி ஆராய்ந்துணரின் தமிழ், உலகில் முதல் முதலுண்டான இயற்கை முதன்மொழியென்பது விளங்குதலாகும்."

(மேற்படி நூல் பாயிரவியல பக. ௪0)

இனி, உலக முதன்மொழி தமிழ் என்பதற்கு அவர் கொண் டிருந்த கொள்கையையும், தமிழ்மொழியின் வளர்ச்சி நிலைகள் பற்றி அவர் கூறுவனவற்றையும் காணலாம்.

மாகறல் கார்த்திகேயனார் தம் மொழி நூலிலும், மதுரைத் தமிழ்ச் சங்கத்து வெளியீடாகிய செந்தமிழ்த் தொகுதிகள் 12, 13 [1914, 15 ஆண்டின] முதலியவற்றிலும் மொழித் தோற்றங் குறித்த அவர் தம் ஆராய்ச்சி முடிவுகளை வெளியிட்டுள்ளார். மொழி நூலின் இலக்கணவியலில் அவர் வரைந்துள்ள ஆசிரியப் பாவே அவர் தம் மொழித் தேற்றக் கொள்கையை உள்ளடக் கியதெனலாம். அது வருமாறு:

"உலகுறு பொருளெலாம் வட்ட மாகவும்
உலங்கொளும் வடிவ மாகவு மொளிர்வன
உட்டுளை கணுமுத லுடையன வாகவும்
தொட்டொளிர் கின்றன சூழ்வுறிற்சில்பொருள்
உப்பொருட்கெலாம் பெயரிடல் வேண்டின்
வட்டந் திரட்சி யுட்டுளை கணுமுதல்
உடையன வாய வியற்கைப் பொருளினின்
றுண்டா யினதோ ருரையும் வேண்டும்
அவ்வுரை யானே பெயரிட லொன்றே
எளிதா வினிதா விருக்கு மென்ப
ஏழுத்தின் தொடர்பாலியைதலி னுவ்வுரை
எழுத்துகளெல்லா மியற்கை யோசையினின்
றெழுபாக் காயினெளிதா குமே"

(மேற்படி நூல் இலக்கணவியல் பக்.1)

இவ்வாசிரியப்பாவை மாகறலாரின் மொழி நூலிலணக்கண நூற்பாவென்றும், அவர் மொழித் தோற்றங்குறித்து வரைந்த கட்டுரைகளும், மொழி நூலும் இந்நூற்பாவின் விளக்கமே

என்றும் கூறிவிடலாம். அவர் தம் ஆராய்ச்சிக் கருத்தின்படி, மொழி, (அ) செவிப்புலனாம் இயற்கையோசையாலும் [ஆ] கட்புலனாம் இயற்கை வடிவத்தாலும் இயல்பாய்த் தோன்றிப் பின்னர்ச் செயற்கைக் கூறுகளுடன் வளர்ந்தது என்பதாம்.

[அ] இயற்கையோசை மூன்று. அவை:

1. இயற்கை எழுத்தோசை;
2. இயற்கை இசையோசை;
3. இயற்கைப் பொருளோசை.

''இயற்கையெழுத்தோசை - எழுத்துக்களுக்கெல்லாம் ஆதாரமான ஓசை''

(தமிழ் இயற்கைமொழி மாகறலாரின் கட்டுரை. 'செந்தமிழ்' தொகுதி 12 பகுதி 10 ஆக-செப். 1914)

,,எழுத்தோசைக்கு விந்து, முதற்காரணம்''

[மொழிநூல் இலக்.பக்.5.]

தமிழிலுள்ள ஐ, ஔ நீங்கலான பத்து உயிர் எழுத்துகளும், மொழிக்கு முதலில் வரும் உயிர் மெய்யெழுத்துகளின் மெய்யெழுத்துகளான க, ச, த, ந, ப, ம, வ, ய, ஞ, ங, ஆகிய பத்தும் இயற்கை எழுத்தோசைகள். ஏனையவாகிய, ஐ, ஔ, ஆகிய உயிரெழுத்துகளிரண்டும், ல, ர, ள, ழ. ட, ண, ற, ன, என்னும் மெய் எட்டெழுத்தும் செயற்கை எழுத்தோசைகள்.

தொல்காப்பியம் முதலான தமிழிலக்கணங்களுள் கூறப்பட்டுள்ள,

1. மொழி முதலெழுத்து, 2. மொழி யிறுதி எழுத்து, 3. மெய்ம் மயக்கங்கள், 4. புணர்ச்சி, 5. ஆய்தம், 6. குற்றியலிகரம் 7. குற்றியலுகரம், 8. உடம்படு மெய் முதலியனவெல்லாம் நாவின் இயற்கைப்படியே அமைந்திருக்கின்றன.

[தமிழ் இயற்கை மொழி செந்தமிழ் இதழ்க் கட்டுரை தொகுதி 12 பகுதி 10]

இவ்வியற்கை எழுத்துகளினூடே நாக்கு வளைந்து திருத்தமடைவதற்கேற்றவாறு செயற்கை எழுத்தும் சிறுபான்மை உண்டு. அதற்கு ''தண்ணீரை அது செல்லும் இயற்கையின் படியே கொண்டு போய்ப் பிறகு சிறிது சிறிதாகத் திருப்ப வேண்டும்'' என்னும் உவமையையுங் கூறி (மேற்படி கட்டுரை) விளக்கியுள்ளார்.

அகம் என்பது இயற்கை எழுத்தோசையால் ஆனது. இவற்றினிடையே 'ல' என்னும் செயற்கை எழுத்தையுஞ் சேர்த்து அகலம் என்னும் சொல்லை அமைத்தல் இயற்கையோடு செயற்கையும் பொருந்திய சொல்லாக்கம் என்று விளக்குகின்றார்.

இவ்வாறு இயற்கை எழுத்தாலும், அதனோடியைபுற்ற செயற்கை எழுத்தாலும் பல்கிய சொல்வளத்தையுடையது தமிழ் என்றும், இவ்வளத்தையே அவர் 'தமிழின் முதிர்ச்சி' என்று பெயரிட்டும், முற்குறித்த செந்தமிழ் இதழ்க் கட்டுரையில் பின்வருமாறு கூறுகின்றார்.

''தமிழின் முதிர்ச்சி''

''உலகம் குழந்தைப் பருவமாக இருந்த காலத்துண்டான எழுத்தும், சொல்லும் சந்தியுமேயல்லாமல் உலகம் முதிர்ந்த பருவம் அடைந்த காலத்துண்டான எழுத்தும் சொல்லும், சந்தியும் தமிழிலிருக்கின்றன.

குழந்தைப் பருவம்

க- எழுத்து. அ ஆ இ ஈ உ ஊ எ ஏ க ங ச முதலியன
உ- சொல். நிலா அப்பன் கோ ஓ முதலியன.
ங. சந்தி -மர X அடி மராடி; மண்பானை முதலியன.

முதிர்ந்த பருவம்

க. எழுத்து—ஐ, ஔ, ள, ழ, ட, ண, ற, ன
உ. சொல்—குற்றம், காட்சி, சூழ்ச்சி, பட்டம் முதலியன.
ங. சந்தி—மட்பானை, பொற்றாலி முதலியன.

இவ் இயற்கை எழுத்தோசையையும், இவ்வோசை சொற்களில் பொருந்த வருவதையும், இவ்வெழுத்துக்கள் ஒன்று வேறொன்றாகத் திரியும் முறை பற்றியும் தமிழ் இலக்கணங்களுக்கேற்பவும் தம் கொள்கையை எடுத்துக்காட்டி விளக்கியும் தம்முடைய 'மொழி நூலி'ன் இலக்கணவியல் பக்கம் 1 முதல் 60 வரையிலும் அவர் விளக்கியுள்ளதோடு, மதுரைத் தமிழ்ச் சங்கத்தின் 13-ஆம் ஆண்டுக் கூட்டச் சொற்பொழிவான ''தமிழ் இயற்கை மொழி'' என்னும் செந்தமிழ் இதழ்க் கட்டுரையிலும் (தொகுதி 12 பகுதி 10) விளக்கியுள்ளார்.

[ஆ] இரண்டாவது இயற்கையோசையாவது: இசையோசை

''இசையோசையாவது கடலோசை, யாழோசை, முழவோசை முதலியன. அங்காப்பு முதலிய அகமுயற்சியாற் புலப்

படுவது எழுத்தோசையெனவும், அதனைப் புலப்படுப்பதாய் எடுத்தல், படுத்தல் முதலிய புறமுயற்சியாய் பிறப்பது இசை யோசையெனவும், தம்முள் வேறுபாடு தெரிந்து கொள்க என்றும்,

''இசையோசைக்கு ஆகாயம் முதற்காரணம்'' என்றும் அவர் கூறியுள்ளார். (மொழிநூல் பக்.)

மூவகை இயற்கையோசைகளுள் இவ்வியற்கை இசையோசை பற்றி அவர் தம் நூலிலும் கட்டுரைகளிலும் இவ்வளவே கூறி நிறுத்திவிடுகின்றாரேயன்றி, இயற்கை இசையோசை பற்றி வேறொன்றும் அவர் கூறவில்லை.

இ. இயற்கைப் பொருளோசை:

''இயற்கைப் பொருளோசைக்குச் சூரியன் முதற் காரணம்''
(மொழி நூல் பக்.5)

இயற்கைப் பொருளோசையாக அவர் குறிப்பது 'சு' என்னும் ஒன்றே.

''இனி, இயற்கைப் பொருளோசையாவது

'சு' என்பதாம்.

வாயு, தேயு, அப்பு, என்னும் பூதங்கள் மூன்றும் முறையே வீசுதற் கண்ணும், எரிதற் கண்ணும், பெய்தற்கண்ணும்; மக்களும், பாம்பு எருது முதலியனவும்; சீறுதற் கண்ணும்; பால் கறத்தற் கண்ணும்; இயல்பாக வுண்டாதலின், சு என்பது இயற்கை யோசையாயிற்று.

''பொருட்டன்மை தன்னிடத்தே நிரம்பப் பெற்ற சோதிப் பரிதியழற் பெருமண்டிலத்தின் கண்ணே ஒளிவிடும் வெங்கதிர்க் கற்றையானது, நுண்ணிய அரிய மெல்லிய கருவிகளெல்லாம் நிறையக் கொண்டு, அறிவாற் சிறந்த மகன் தனது மெத்தென்னும் உடம்பின் கண்ணே தாக்குங்கால்; அன்னோன் அது பொறானாகிச் சூரியன் சுடுகின்றானென்னும் பொருள் பயக்கச் சுரீர் எனக் கூறலின், அதுவே பொருளோசையுமாயிற்று. சு-சுல், சுலீல்-சுரீர் எனத் திரிந்தது.

''மொழிக்கிறுதியில் லகர மெய் இயல்பாக வந்தடைதல் இவ்விலக்கணமே யாம்'' (மொழிநூல் பக். 61)
என்றவாறு இயற்கைப் பொருளோசையை விளக்குகின்றார்.

அச் 'சுல்' என்னும் இயற்கைப் பொருளோசையின் அடிப்படைச் சொல்லே 'சுய்' என்றும், சொய் என்றும் சோ என்றும்

விரிவடைகின்றன என்றும் சுல் என்னும் சொல் பல்வேறு திரிபுகளைப் பெற்றுச் சொற்கள் உண்டாகின்றன என்றும் காட்டுகின்றார்.

''சூரியனிடத்துள்ள வட்டமும், திரட்சியும், பொன்மை முதலிய வண்ணங்களும் வெம்மையும், பிறவுமாய குணங்களெல்லாம், அவன் காரியமாகிய சுல் என்னும் வியாபக இயற்கை முதனிலையிடத்தும் பொதிந்துள்ளன. காரணத்திலுள்ளது காரியத்திலுமுண்டு. சுல்: சூரியன், எழுதல், வட்டம், திரட்சி, வண்ணம், அழகு, வெம்மை முதலியன.

எல்லாச் சொற்களும் அச் சுல் என்னும் ஓர் வியாபக வியற்கை முதனிலையினின்றே பிறந்து விரிந்து அழகு செய்கின்றமையின், விச்சாதிபதி சூரியனேயாவன்; அதனால் நாமகள் கீழ்த்திசை நோக்கி வீற்றிருக்கின்றனள்; வேதங்கள் அவனைப் போற்றுகின்றன; அனுமான் ஒன்பானிலக்கணங்களையும் அவன் பாற் செவியுற்றனன்; தமிழ் முனிவன இராமச்சந்திரமூர்த்திக்கு அவன் மந்திரோபதேசம் இயம்பினன்; கணிதநூல் சிற்பநூல் முதலியன, அவனையே தலைமையாகப் பெற்றன. பல சமயத்தாரும் அவனை முதற் கண் போற்றுகின்றனர். அவனுக்குப் பூசையும் திருவிழாவும் முற்காலத்துச் சாலவும் நடைபெற்றன. அருச்சனை முதலிய சொற்கள், அவனுக்கே யுரியனவாய் நிலவுகின்றன. கற்றல் முதலிய எல்லாத் தொழில்கட்கும் கீழ்த்திசையே நன்றென நூல்கள் கூறும். நெருஞ்சி முதலியன கீழ்த்திசையையே நோக்கி மலர்கின்றன; அதுவே இயற்கைத் திசையாம்; பிறவு முணர்ந்து கொள்க'' (மொழி நூல் பக். 65) என்றிவ்வாறு கதிரவனை அடிப்படையாய்க் கொண்ட சுல் என்பதே இயற்கைப் பொருளோசைக்கு மூலமானது என்றும், அக்கதிரவனுக்கு அணுக்கமுடைய குறிஞ்சிக் கருப்பொருளாய மூங்கிலைக் குறிக்கும் சொற்களின் வழியாகவும் இயற்கைப் பொருளோசைச் சொற்கள் பிறக்கின்றன எனவும் கூறுகின்றார்.

''மூங்கில் வன்னிகர்ப்ப மாகலின், அழலவனாய சூரியனுக்கு அணுக்கவினையாயிற்று'' (மொழிநூல் பக். 68) என்பது அவர்தம் கூற்று.

சு என்பதினின்றும் தோன்றிய அடிப்படைச் சொற்களாக அவர் மொழி நூலின் முதனிலையியல் என்னும் பகுதியில் (பக். 173—194) எடுத்துக்காட்டி விளக்குகின்றார். அச்சொற்களாவன, சு, சுல், சுன், சூர், சுள், சூடு, சுவடு, சுவறல், வறல், வறளன், வறு, வறள், சுணக்கம், சுண்டு, சுழலல், சுழி, சூளி, சோளம், சுலா, குலா, குளாம், குலம், கூலம், குளம், குரம், குளி,

குழை, குடம் என்பன. "இது சுருங்கிய நூலாதலால் இங்ஙனம் முற்றும் அனுசூத சம்பந்தமாக விளக்கப்பட மாட்டாது. இனி ஓரோவோர் முதனிலையெடுத்துக் கொண்டு விளக்கப்படும் (மொழிநூல் பக். 194) என்று கூறி, குவம், கோடு, கோலம், ஓதம் கலி, கலம், காசம், காணம், சகடம், காழ், கண், கால் (காம்பு), கால் (முளை), கால் (கூர்மை 1) கால்(கூர்மை 2), கால்(சிறுமை), தள், காம்பு, அம்பு, கோல், சுள், புல், தும்பம், தொல், புல், பொய், போது, தாவளம், சம், கம், தாய், தன்னை, புல், (மூங்கில், உட்டுளை-1) புல் (மூங்கில், உட்டுளை-2) முரம், முழு முதலான முப்பத்தேழு சொற்களுக்கான சொற்பொருள் விளக்கம், சொல்வடிவத் திரிபு முதலானவற்றை வரைந்துள்ளார் (மொழிநூல் பக். 194—240). மேலும் இருபது சொற்களுக்கான பொருள் விளக்கத்தைச் "சொற்பொருட்காரணம்" என்னும் தலைப்பிட்ட கட்டுரையிலும் (செந்தமிழ் தொகுதி 15 பகுதி 8) விளக்கியுள்ளார்.

இவ்வாறு செவிப்புலனாம் இயற்கையோசை மூன்று என்னும் கொள்கையை வரையறுத்துக் கொண்டு விளக்குவதுடன் கட்புலனாம் இயற்கை வடிவம் ஒன்றே என்றும், அது வட்டம் என்றும், வட்டக்கருத்தினின்று திரட்சி, வளைவு, சாய்வு, கோணம், மூலை, கூட்டம், சூழ்தல், குவிதல், நெருக்கம் முதலான கருத்துச் சொற்கள் தோன்றுகின்றன என்றும் கூறுகின்றார்.

"அவ்வியற்கை வடிவமாவது வட்டம், இவ்வட்டமே திரட்சியுமாம். வட்டு திரட்சியென்பதனானும் தெளிக. வட்டமும் திரட்சியும் பேதமோ அபேதமோ எனின் பேதாபேதமென்க.

> "பந்தமு மாழையும் வட்டும் பிண்டமும்
> வழியும் சேடுஞ் சேர்வுந் திரளே" (பிங்கலந்தை)

"ஆகாயமும், சூரியனும், சந்திரனும், நட்சத்திரங்களும், கடலும், நிலமும், மலையும். கற்களும், மரங்களும், யாக்கையும் வட்டமும் திரட்சியு மாகலானும் ஓர் நீர் நிலைக்கண் முக்கோண முடைய கல்லையேனும், நாற்கோணமுடைய கல்லையேனும், எறியின் அவ்வடிவமின்றி வட்டவடிவம் தோன்றலானும், உலர்ந்த வெள்ளியதுகிலின் கண் விழுந்த மழைத் துளியும் நீரின் கண் விட்ட எண்ணெய்த்துளியும் வட்டமாகப் பரவுகின்றமையானும், ஓர் சக்கரத்தில் நேர்க்கோடேனும் முக்கோணமேனும் நாற்கோணமேனும் வரைந்து விரைவுபடச் சுற்றின் அவை வட்ட வடிவமாகவே புலப்படுகின்றமையானும், அதுவே இயற்கை வடிவாம். நேர்க்கோடு முதலியன மறைதலின் அவை செயற்கை

வடிவாம்'' [மொழிநூல் பக். 2-3) என்று கட்புலனாம் வடிவத்துள்ளும் வட்டமே இயற்கை வடிவமென்று அவர் கூறியுள்ளார்.

சொற்களின் தோற்றத்தைக் குறித்து,

''சொற்களின் தோற்றரவு வருமாறு:-

சொற்கள் முதல் முதல் உலகத்து அரும்பெரும் பொருளாகிய சூரியன் சொல்லிடத்திருந்தும், பிறகு, குறிஞ்சிக் கருப்பொருட்களுட் சிறந்து சூரியனுக்கு அணுக்கவியையுடைய தாய், ஏனைப் பொருளிலக்கணங்களைத் தன்னிடத்தே விளங்க அமையப் பெற்ற மூங்கிற் சொற்களிடத்திருந்தும், மூங்கிலியையுடைச் சொற்களிடத்திருந்தும், அனுசூதசம்பந்தமாயுண்டாயின்றன'' (மொழிநூல் பக் 146) என்று கூறியுள்ளார்.

தமிழில் இடுகுறியாகச் சொல்லில்லையென்பதும் எல்லாச் சொல்லும் பொருள் குறிக்கும் காரணச் சொல்லே என்பதும் மாகறலார் கருத்தாகும்.

''தமிழ்ச் சொற்களெல்லாம் காரணச் சொற்களேயாம். இடுகுறிப் பெயர் ஒன்றேனும் இல்லை. தொல்காப்பியர் கருத்தும் அது'' [தமிழ் இயற்கை மொழி. செந்தமிழ் தொகுதி 12 பகுதி 10] என்பது அவர் கூற்று.

பெயர், வினை, இடை, உரி என்னும் நால்வகைச் சொற்களில் பெயர்ச் சொல் முந்தியதென்றும், அதன் வழி வினைச் சொல்லும் அவற்றின் வழி இடை உரிச் சொற்களும் தோன்றின என்றும், கூறும் அவர், அங்கும்

''சூரியன் காரியமாகிய சுல் என்பது என் சொல்லோ எனின் சொற்களுக்கெல்லாம் தலைமையுடைய பெயர்ச் சொற்களுக்கும் தலைமைப் பெருஞ்சிறப்புடையதோர் வியாபக இயற்கை முதனிலைச் சொல்லென்க'' [மொழிநூல் பக். 111] என்று தம் கொள்கையை எடுத்து வைப்பர். அன்றியும், தமிழ் என்னும் சொல்லின் காரணங்களாக, இனிமை, வன்மை, மென்மை, இடைமை ஆகிய மூவோசையும் பெற்றிருத்தல் முதலான பல காரணங்களைக் கூறுவதோடமையாது.

த, மி, இயற்கை எழுத்து, ழ் செயற்கை எழுத்து இவ்வாறு இயற்கையும் செயற்கையும் இணைந்து 'தமிழ்' என்றாயிற்றென்றும்,

''தமிழ் பாழை சூரியனாலாகிய ஓர் வியாபக இயற்கைத் தாதுவினின்றே ஒன்றிலிருந்தொன்று அது சூத சம்பந்தம்

பெற்று உண்டானமையின் சூரியனையுணர்த்தும் தாமமென்பது தமில்-தமிள்-தமிழெனத் திரிந்ததெனலே உண்மை கூறலென்னும் உத்தியாம். தாமம்-ஒளி. இங்குச் சூரியன் மேல் நின்றது'' (மொழிநூல் பாயிரவியல் பக். 83-84) என்றும் தம் மதத்தை வற்புறுத்துகின்றார்.

இவ்வாறு மாகறல் கார்த்திகேயனார் தம் மொழி நூலிலும் கட்டுரைகளிலும் தமிழ் உலக முதன்மொழி என்னுங் கொள்கையைத் தாமே ஆராய்ந்து கண்ட இலக்கணந் தழுவிய மொழிநூல் நெறிமுறைகளுடன் தம் கால்நூற்றாண்டுக் கால மொழியாராய்ச்சியின் துணையால் இன்றைக்கு முக்கால் நூற்றாண்டுக் காலத்திற்கு முன்னர் நிறுவ முயன்றார் என்பதை அறியலாம்.

மாகறலார் மொழியாராய்ச்சியின் சில சிறப்புக் கூறுகள்:

1 தமிழ் அடிப்படையில் முதன்முதலில் தமிழில் வெளிவந்த மொழி நூலாக இருத்தல்.

2 குமரிக்கண்டக் கொள்கையையும் தமிழரை முதன் மாந்தரெனவும் தமிழை முதன் மொழியெனவும் ஒப்பிக் கூறுதல்.

3. தமிழ் இலக்கணக் கூறுகளை அடியொற்றி மொழியாய்வு செய்யப்பட்டிருத்தல்.

4. இடுகுறியை ஏலாமையும் எல்லாச் சொல்லும் காரணச் சொல்லே என்பதை ஏற்றும் நூலின் முதனிலையியல் என்னும் பகுதியில் சில சொற்களுக்குச் சொற்பொருட்காரணம் காட்டமுற்பட்டமையும் ஆகும்.

மாகறலார் மொழியாராய்ச்சியிற் காணும் சில குறைபாடுகள்:

1. எழுத்துக்களை இயற்கையெழுத்தோசை செயற்கையெழுத்தோசை எனத் தம் மனம் போனவாறு பிரித்துக் காட்டலும் ஐ, ஔ என்னும் உயிரோசைகளைச் செயற்கையோசையெனவும் ஃ என்பதை இயற்கையோசையெனலும் இயற்கை எழுத்தோசையையும் செயற்கை எழுத்தோசையையும் பிரித்துக் காணுமாறு இயற்கை எழுத்தோசையாவது இயற்கையாய் தோன்றுவது என்பது தவிரவேறு எந்நெறிமுறையையும் கூறாமையும்;

2. 'சு' என்னும் ஒன்றே இயற்கைப் பொருளோசையென்றும் கட்புலனாம் வடிவு வட்டமொன்றே யென்றும் இவ்

விரண்டும் சேர்ந்து 'சுல்' என்று கதிரவனைக் குறித்த தென்றும், இதிலிருந்தும், குறிஞ்சிநிலக்கருப்பொருளாய மூங்கிலிலிருந்துமே தமிழ்ச் சொற்கள் தோன்றின என்றும் பொருந்தாததும், பொருந்தினும் ஒருமருங் குண்மையேயுடையதுமாய ஒரு கொள்கையை வலிந் தும், பன்னிப்பன்னியும் பல்வேறு இடங்களிலும் வற்புறுத்தலும்;

3. இசைக்கல்வியே முதற்கல்வி எனக் கூறல்:

4. மொழிகளை ஆணென்றும் பெண்ணென்றும் வகுத் தலும், தமிழை ஆண்மொழி எனக் கூறுதலும்;

5. மொழியின் பல்வேறு படிநிலை வளர்ச்சியைக் காலவரை யறையுடன் சுட்டாமையும், தமிழின் முந்தைக்கால இயற்கையான இயல்பு வளர்ச்சியெனச் சுட்டுவதுபோல அவர் கூறும் செயற்கை எழுத்தைச் சொல்லின் இடையே சேர்த்தல் என்பது தவிர மொழியின் செயற்கை வளர்ச்சி நிலைகளையும் இலக்கணத் தோற்ற நிலை களையும் சுட்டாமையும்;

6. தமிழ் உலகத் தாய்மொழியாகும் நிலையைத் தம் கொள்கைவழி நூல் முழுவதும் எங்கும் சிறிதும் சுட்டாமை.

மாகறலாரைப் பற்றிப் பாவாணர்,

''தமிழில் முதன்முதல் தோன்றிய மொழிநூற் பனுவல் மாகறல் கார்த்திகேய முதலியார் 1913-ம் ஆண்டு வெளியிட்ட மொழிநூல் ஆகும். மொழிநூல் என்னும் குறியீடும் அவரதே'' (ஒப்பியன் மொழிநூல் 1940 பக். 11-12) எனக் குறித்தாரேனும் மாகறலாரின் இம் மொழியாய்வு உண்மை பொய்ம்மைகளையோ வன்மை மென்மைகளையோ பாவாணர் எங்கும் எடுத்துரைத் தாரல்லர். உண்மையைப் பற்றிக் கொண்டு ஆராய்ந்து தம் கட்டுரை, நூல்கள் வழி வெளிப்படுத்தும் முடிவுகளே பிறர் தம் ஆராய்ச்சியைத் திறனாய்வு செய்வனவாகும் என்று கருதிப் பாவாணர் அமைந்தார் போலும்!

**3. ஞானப்பிரகாச அடிகளார்:**

''தமிழ்ப் பொழி'லில் சில கட்டுரைகளும், 'சொற்பிறப்பு—ஒப்பியல் தமிழ் அகராதி' (An Etymological and Comparative Lexicon of the Tamil Language-1938) என்னும் பெயருடைய அகர முதலில் 'உருள்' என்னும் சொல் வரையிலும் விளக்கம் பெற்ற நான்கு மடலங்களும் ஞானப்பிரகாச அடிகளார் வரைந்

தவையாக நமக்குக் கிடைக்கின்றன. சென்னைப் பல்கலைக் கழகப் பேரகரமுதலி (Lexicon)யைத் தாம் மதிப்பிட்டெழுதிய கட்டுரையொன்றை (Review of the Madras Lexicon in Journal RAS CB XXXI PP 591-2) ஞானப்பிரகாச அடிகளாரே குறிப்பிடு கின்றார்.

'தமிழர் சரித்திரம்' 'தமிழகம்' ஆகிய நூல்களில் ஞானப் பிரகாசரின் கட்டுரைகளாக மேலுஞ்சிலவற்றைத் திரு. ந. சி. கந்தையா அவர்கள் எடுத்துக்காட்டியுள்ளார். அவை;

1. ''இந்திய ஐரோப்பிய மொழிச் சொற்களின் மூலங்கள் பல பழந்தமிழிற் காணப்படுகின்றனவென்பது, அனு மான அளவில் உள்ளதன்று; உண்மையே. இவ்வுண்மை பரந்த ஆராய்ச்சியினாற் கண்டுபிடிக்கப்பட்டது. உச்சரிப்பு ஒற்றுமை பொருள் ஒற்றுமைகளால் மாத்திர மன்று இச் சொற்களின் ஒற்றுமை அறியப்படுவது'' (Pedigree of words-Rev. Gnana Prakasam 'தமிழகம்' 1955-ஆம் ஆண்டுப் பதிப்பு பக்கம் 47 மேற்கோள்)

2. ''தமிழிற் காணப்படும் மூலச்சொற்கள் இந்திய ஐரோப் பிய மொழியில் நீண்ட காலத்துக்கு முன் மறக்கப்பட்ட சொல் மூலங்களாகும். தமிழின் ஆதிச் சொற்கள் அல்லது மூலச்சொற்கள் நம்மை மக்கள் வரலாற்றின் பழங்காலத்துக்குக் கொண்டு போய் விடுகின்றன. அக் காலத்தில் சில நூறு ஓரசைச் சொற்கள் மாத்திரம் ஒன் றோடு ஒன்று சேராது தனித்து வழங்கின. இச்சொற் களே ஆரிய திராவிட மொழிகளாயிருந்தன!''

   (Tamil Roots in other languages-Rev. S. Gnana Prakasam மேற்படி நூல் பக். 47 மேற்கோள்)

3. ''ஓரசையுடைய ஆதித் தமிழ்ச் சொற்கள், மொழியின் ஆரம்பத்துக்கு நம்மைக் கொண்டு செல்கின்றன. சுமேரிய மொழி பழமையுடையதாயிருந்த போதும், தமிழின் பழைய சொற்களோடு சுமேரியச் சொற் களை ஒப்பிட்டு நோக்கும் போது சுமேரியம் தமிழுக்குப் பிந்திய மொழி எனத் தோன்றும். சுமேரியமும் தமிழும் ஓர் ஊற்றினின்றும் பிரிந்த இரு கிளைகள் என ஆராய்ச் சியாற் புலனாகும்''

   (Sumarian and Tamil Rev. S. Gnanaprakasam மேற் படி நூல் பக். 48-மேற்கோள்)

4. ''There are hundreds of words which are to be traced to the old Dravidian forms, forcing us to draw the

conclusion that there is an ancient connection between the Dravidians and Indo-European Languages Herr Schoenar as well remarked-" Rev S. Gnana Prakasam O M I.

(தமிழர் சரித்திரம்-1964-ஆம் ஆண்டுப் பதிப்பு பக். 30 மேற்கோள்)

கிடைத்துள்ள கட்டுரைகளின் வழியும், மேற்கோள் செய்திகளின் வழியும், சொற்பிறப்பு-ஒப்பியல் தமிழ் அகராதியின் வழியும், ஞானப்பிரகாசர், உலக முதன்மொழி தமிழ் என்றும், அது எவ்வாறு தோன்றி வளர்ந்தது என்றும் கூறுவதாகச் சொல்ல முடியவில்லை. அவர் வகுத்துக் கொண்ட நெறிமுறைகளின்படி அடிச்சொல் ஆராய்ச்சியை மேற்கொண்டு பழமையான மொழிகளினும் பழமையானது தமிழ் என்றும், உலக மூல முதன்மொழிக்கு நெருக்கமானது தமிழ் என்றும், இந்தோ ஐரோப்பியம் முதலான பழைய மொழிகள் தமிழுக்குப் பிந்தியன என்றும் அப்பழைய மொழிகளின் அடிச் சொற்களும் தமிழ் அடிச்சொற்களும் சொல்லாலும் பொருளாலும் நெருங்கியவை என்றும் இம் மொழிகள் எல்லாம் ஒரே மூலத்திலிருந்து கிளைத்தவை என்றும் ஞானப்பிரகாச அடிகளார் முடிவு கட்டுகின்றார் என்று துணியக் கிடக்கின்றது.

"தமிழ் அடிகள் உள்ளபடி மக்களுள் இயல்பாய் எழுந்த ஒரு ஆதி பாஷையோடு பிணைப்புண்டனவாய்க் கிடத்தல் எமது ஆராய்ச்சியால் இப்போது வெளிப்பட்டிருக்கின்றது. அவ் அடிகள் சுட்டுகின்ற எண்ணங்கள்தாம் மக்கள் சிந்தித்த ஆதி எண்ணங்கள் ஆகின்றன. ஆகவே, அவ் அடிகளில் நின்றே இந்திய-ஐரோப்பிய மொழிகள் எல்லாம் பிறந்து விகற்பித்தன என்றதும் துணியப்படும்"

(சொற்பிறப்பியல்-ஒப்பு தமிழ் அகராதி முகவுரை பக். XXV)

தமிழ் மொழியின் தலைமையான அடிச் சொற்கள் பற்றிப் பின்வருமாறு கூறி, அவை இத்துணைய என்றும் அவர் வரையறுக்கின்றார்.

"தமிழ்த் தலையடிகள் அண்மை, சேய்மை, கீழுறல், மேலுறல் எனும் ஆதி எண்ணங்களை முறையே குறிக்கின்ற அ, இ, உ, எ என்னும் சுட்டுக்களை முதனிலையாகவும், ஓரோர் மெய்யை இறுதியாகவும் கொண்ட பண்டைக் காலச் சொற்களாம் அ, இ, உ, எ என்பன அண்மை ஆகிய இடச் சார்புகளை மங்குளமாகவே சுட்டுதலால், அவற்றைச் சிறிது வரை

யறுத்துத் துலக்க மாக்கும் பொருட்டு மெய்கள் அடுத்து வழங்கப் பட்டன. இதனால் இம்மெய்கள் ''விளங்குகின்றவை'' எனும் அர்த்தமுள்ள வியஞ்சனம் எனப் பெயர் பெறும். இவ்வாறு ஓரோர் சுட்டுயிரும் ஓரோர் வியஞ்சனமுஞ் சேர்ந்து வருகின்றன வாகிய தமிழ்த் தலையடிகள் பின்வருவன.

அகரவாதி அடிகள் - அண்மைப்பொருள்

அஃக், அட், அண், அத், அப், அம், அய், அர், அல், அவ், அழ், அள், அற், அன்

உதரவாதி அடிகள்–சேய்மைப்பொருளும் மறைந்திருக்கும் (கண்ணுக்கு எட்டாத) பொருளும்

உக், உட், உண், உத், உப், உம், உய், உர், உல், உவ், உழ், உள், உற், உன்.

இகரவாதி அடிகள் கீழுறுதற் பொருள்

இக், இட், இண், இம், இய், இர், இல், இழ், இள், இற் இன்,

எகரவாதி அடிகள் மேலுறுதற் பொருள்

எக், எட், எண், எத், எய், எர், எழ், எற், என்.''
(மேற்படி நூல்—சொற்பிறப்புக் கட்டளைகள் பக். XXV-XXVI)

என அவர் வரையறுக்கும் தலைமையான அடிச்சொற்கள்

| | | |
|---|---|---|
| அகரத்தில் | - | 14 |
| உகரத்தில் | - | 14 |
| இகரத்தில் | - | 11 |
| எகரத்தில் | - | 9 |
| ஆக மொத்தம் | — | 48 |

இத் தலைமை அடிச் சொற்களைக் கொண்டுத் தமிழ்ச் சொற்கள் பெருகும் முறையைப் பின்வருமாறு விளக்குகின்றார்.

1. சொற்பிறப்புக் கட்டளைகள்—8
2. ஒலித்திரிபும் உருத்திரிபும்
3. பொருள் திரிபு

## 1. சொற்பிறப்புக் கட்டளைகள் 8

1. உச்சாரண உயிர் மாற்றம் 2. வியஞ்சன மாற்றம் 3. மேலுமோர் வியஞ்சனம் வந்துறல் 4. வியஞ்சனம் இரட்டலும் மெல்லொற்று அணைதலும் 5. வலியுறுத்தும் முதனிலை மெய்ப்பேறு 6. அடிச்சொல்லை நீட்டலும் மடக்கலும் 7. அடி உயிர் வேறுபாடு 8. பிற பழஞ்சொற்களைக் கடைநிலையாய்க் கொண்டு நிற்றல்

என்னும் எட்டுக் கட்டளைகளைக் கூறி அவற்றை எடுத்துக் காட்டி விளக்குகின்றார்.

## 2. ஒலித்திரிபும் உருத்திரிபும்

'தமிழ் மொழியினுள்ளும், சிறுபான்மை பிறபாகதங்களுள்ளும் வழங்கியிருக்கும் ஒலி மாற்றுகள் மட்டும் இங்குக் காட்டப்படும்' என்று கூறி அ என்னும் ஒலி— இ, ஆ, எ, ஏ, உ, ஒ, ஓ— என்னும் ஒலிகளாக மாறுவதையும், இவ்வாறு பிற ஒலிகள் மாறுவதையும் எடுத்துக் காட்டி ஒலித்திரிபை விளக்கியுள்ளார்.

சொல்லின் உருவம் திரிகின்ற முறையை,

1. முதனிலைக் கேடு
2. இடைநிலைக் கேடு
3. கடைநிலைக் கேடு
4. தலைத்தோன்றல்
5. இடைத் தோன்றல்
6. கடைத் தோன்றல்
7. நிலை மாற்றம்
8. தடு மாற்றச் சொற்பிரிவு
9. இனந்தழுவல்
10. ஒப்புமைச் சொல்லாக்கம்.

என்னும் தலைப்புகளில் எடுத்துக் காட்டி விளக்கியுள்ளார்.

## 3. பொருட்டிரிபு

சொற்கள் காலச் செல்விலே உருவத்தில் மட்டும் அன்று, பொருளிலும் விகற்பம் அடைகின்றன. இதுதான் பொருட்டிரிபு எனப்படும் என விளக்கி, அதற்குரியனவாக ஒன்பது கட்டளைகளை எடுத்துரைக்கின்றார். அவை:

1) சிறப்பியல்பு சுட்டலும் தனித்தொன்றிற்குப் பொருந்து தலும்

2) சார்பு பற்றி விரிதல்

3) இனந்தழுவல்

4) இயைபுடைமை அல்லது உருவகம்

5) ஆகுபெயர்

6) உயர்வுநவிற்சியும் தாழ்வுநவிற்சியும்

7) எதிர்நிலை

8) இழிவடைதலும் ஏற்றம் பெறலும்

9) இடக்கரடக்கல், மங்கலம், இடுகுறியாக்கம்

இவ்வாறு தமிழ் அடிச் சொற்கள் பற்றிய கட்டளைகளும் விளக்கங்களும் அவர் இயற்றிய அகரமுதலியின் முன்னுரை (பக். XXV—XXXiii) யில் விளக்கப்படுகின்றன.

ஞானப்பிரகாசரின் மொழியாய்வையும் அவர் எடுத்துரைக்கும் கொள்கையையும் 'அடிச்சொற் கொள்கை' என்று கூறலாம். இவர்தம் ஆய்வு பற்றிப் பாவாணர் பின்வருமாறு குறிப்பிடுகின்றார்.

''யாழ்ப்பாண ஞானப் பிரகாச அடிகளின் 'சொற்பிறப்பு ஒப்பியல் தமிழ் அகராதி' முதன் மடலத்தில் ஒருசில பகுதிகளோடு நின்றுவிட்டமையாலும், அதிற் கையாளப்பட்ட நெறிமுறைகள் பெரிதும் வேறுபட்டுள்ளமையாலும், அது '**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி**'க்குப் பயன்படவில்லை'' (செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி முதன்மடல முன்னுரை பக். 6)

கரந்தைத் தமிழ்ச் சங்கத் திங்களிதழாகிய 'தமிழ்ப் பொழில்' துணர் 10 மலர் 2 (பவ. வைகாசி) இல் 'இலக்கியம்' 'இலக்கணம்' என்னுந் தலைப்பில் பாவாணர் ஒரு கட்டுரை வரைந்திருந்தார்.

அதே திங்களிதழ் துணர் 10 மலர் 5 (பவ. ஆவணி) இல் ஞானப்பிரகாசர் 'இலக்கணமும் இலக்கியமும்' என்னுந் தலைப்பில் ஒரு கட்டுரை வரைந்தார். அக்கட்டுரையின் இறுதியில், ''தமிழ்ப் பொழில்'' பத்திரிகையில் எழுதிய பண்டிதர் ஒருவர் இலக்கண இலக்கியச் சொற்களைச் சுட்டி நன்றாக ஆராய்ந்து வரைந்திருந்தார். ஆயின் அன்னவர் இச் சொற்களின் தலையடி வரைக்கும் துருவிச் செல்லாது விட்டமை பற்றி யாம் இவ்

வுரையை வெளியிட்டனம் என அறிக'' என்று முடித்திருந்தார். இங்கு இவரால் குறிப்பிடப் பெற்ற 'பண்டிதர்' பாவாணரே என்பது போதரும். அடிகளார் தம் கொள்கையைப் பாவாணர் ஆராய்ச்சிக்கு உரைகல்லாகக் கொண்டுப் பார்த்தார் என்பதையும் அறியலாம்.

## ஞானப் பிரகாசர் மொழியாராய்ச்சியின் சில சிறப்புக் கூறுகள்

1) தமிழ்ச் சொற்களை அடிச் சொற்கள் என்னும் அடிப்படையில் முதலில் ஆராய்ந்ததும், சொற்பிறப்பியல் அகரமுதலியின் ஒரு பகுதியை முதலில் தொகுத்ததும்

2) சொற்பிறப்பு நெறிமுறைகளை வகுத்துக் கொண்டமை

3) இந்தோ ஐரோப்பிய மொழிகளுக்கும் சுமேரிய மொழிக்கும் முந்தியது தமிழ் என்னும் முடிவுக்கு வந்தமை.

## ஞானப் பிரகாசர் மொழியாராய்ச்சியில் காணும் சில குறைபாடுகள்

1) குமரிக்கண்டக் கொள்கை பற்றியோ, தமிழர் பிறந்தகம் பற்றியோ தமிழின் பிறப்புப் பற்றியோ எங்கும் சுட்டாமை.

2) இற்றை மொழி நூலார் 'முன்னத் திரவிடமொழி' (Proto-Dravidian Language) என்று இல்லாத ஒன்றைக் கற்பித்துக் கூறுதல்போல, ஞானப்பிரகாச அடிகளாரும் உலக மூலமொழி என ஒன்றைக் கற்பித்தல்.

3) அவர் கூறும் அடிச் சொற்கள் பலவும் செயற்கையானவையாவும், அவ்வடிச் சொற்களின் மூலவடிவங்கள் சில தமிழிலக்கண மரபிற்கு ஏலாதவையாயும் உள்ளமை. அவற்றுட் சில:

அ) அ, உ, இ, எ என மூலச் சுட்டொலிகளாகக் கூறியுள்ளார். ஆயின் எ தமிழில் வினாவாகுமேயன்றிச் சுட்டென யாண்டும் கூறப்படவில்லை.

ஆ) அட், அத், அவ் என்பன போன்ற பல அடிச்சொற்கள் வடமொழிக்குக் கூறப்படும் 'தாது'க்களைப் போலவும், தமிழின் ஈற்றெழுத்திலக்கண விதிகளுக்கு மாறானவையாயும் இருத்தல்.

இ) அர், அழ் முதலான பல அடிச்சொற்கள் 'ர, ழ தனிச் குறில் அணையா' என்னும் தமிழ் இலக்கண நெறிக்கு மாறுபட்டவையாய் இருத்தல்.

ஈ) இழ் + உ = இழு
இழ் + இ = இழி
என அவர் எடுத்துக் காட்டுபவை,
பொன் + இ = பொன்னி
கண் + இ = கண்ணி

எனத் தனிக்குறிலை யொட்டி வந்த மெய், உயிருக்கு முன் இரட்டிக்கும் என்னும் தமிழிலக்கணப் பொதுச் சொல்லாக்க விதிக்கு மாறுபட்டுள்ளமை.

4) மொழித் தோற்றம் பற்றிய உருசோவின் ஒப்பந்தக் கொள்கை (Contract Theory)க்கு நெருக்கமானதாக இவர்தம் அடிச் சொற்கொள்கை இருத்தல்.

5) ஒரு மூலமொழியில் இடுகுறிச் சொல் இராது என்பது வலியுறுத்தப் பெறாமலும், தொல்காப்பியர் கூறிய 'எல்லாச் சொல்லும் பொருள்குறித்தனவே' என்னும் விதிக்கு மாறாகவும் 'இடுகுறியாக்கம்' என்னும் சொல்லாக்கப் பொருட்டிரிவு நெறியை வகுத்தல்.

மறைமலையடிகளார் பாவாணர்க்கு 1949 இல் வழங்கிய சான்றிதழில்,

"அப்போது யாழ்ப்பாணம் திருத்தந்தை ஞானப்பிரகாசர் தாம் எழுதிய மொழியியல் ஆராய்ச்சி நூலை எமக்கு அனுப்பி வைத்தார். அது ஓரளவு எமக்கு மனநிறைவு அளித்தது" [வேர்ச்சொற் கட்டுரைகள் 1973 பக். 14 மறைமலையடிகள் சான்றிதழின் தமிழாக்கம்] என்று கூறியவாறு, ஞானப்பிரகாச அடிகளின் மொழியியல் ஆராய்ச்சி மிக நுணுக்கமாய்ச் செய்யப்பட்டதாயும், நெறிமுறைகளுடன் அமைந்ததாயும் இருப்பினும் பல்வேறு குறைகளையுடைதாய் ஓரளவே மனநிறைவளிப்பது என்பதையும், பாவாணர் சுட்டியவாறு வேறுபட்ட நெறிமுறைகளையுடையது என்பதையும் அறியலாம்.

## 4. திரு. எம். சுந்தரம்

8. 7.1978 ஆம் நாளைய பிளிட்சு (Blitz) என்னும் கிழமையிதழில் பிரதாப் நகத்தா என்பவர் சமற்கிருதமே உலக மொழிகளுக்குத் தாய் என்னும் கருத்தை விளக்கிய ஒரு கட்டுரை வெளியானது. இக்கட்டுரையை மறுத்துத் திரு. எம். சுந்தரம் என்

ப்பார் எழுதிய கட்டுரை 5.8.78 ஆம் நாளைய பிளிட்சு இதழில் வெளியானது. அக்கட்டுரைச் செய்தியின் சுருக்கம் வருமாறு:

''மாந்தன் பிறந்ததிலிருந்து அவனுடைய நாகரிக வளர்ச்சிப் போக்கில் இந்தோ ஐரோப்பிய மொழிகள் மிக அண்மைக் காலத்தின என்பதை எல்லா மொழியியலாரும் ஒப்புகின்றனர். இந்திய மாந்தவியல் நூலார் மாந்தன் பிறந்தகமாகப் பனிமலையின் சுவாலிகக் கொடுமுடிகளைக் கூறினாலும், ஆப்பிரிக்காவே மாந்தனின் பிறந்தகமாக அனைவராலும் ஏற்கபட்டுள்ளது. பிற்காணும் முறைகளுக்கு நிறைவாக அமைந்த மொழியே உலக முதன்மாந்தனின் மொழியாக வொல்லும்.

1) அது உலகெங்கும் பரவியிருத்தல் வேண்டும்,

2) முதன்மாந்தன் தோன்றிய ஆப்பிரிக்க நாட்டுப் பகுதிகளுக்கும் பொருந்துவதாக இருத்தல் வேண்டும்.

3) முதன் மாந்தனின் தெய்வ வழிபாட்டை அம்மொழியில் தேடிக்காணுமாறு இருத்தல் வேண்டும்.

4) தொன்மையான பழங்கதை உருவகச் செய்திகளை அம்மொழியில் தேடிக் காணுமாறு இருத்தல் வேண்டும்.

5) உலகின் பல்வேறிடங்களிலுமுள்ள குக்குலங்கள், இடங்கள், ஆகியவற்றின் பெயர்கள் அம்மொழியில் பொருள் விளக்கமுடையவையாய் இருத்தல் வேண்டும்.

6) தொன்மையான சீனமொழிக்கும் ஏனைய மொழிக்கும் உள்ள உறவை விளக்குவதாக அம்முதன் மொழி இருத்தல் வேண்டும்.

7) வேறுபட்ட எழுத்துமுறைகள் எவ்வாறு உருவாயின என்பதைச் சுட்ட வேண்டும்.

8) ஒலிகளின் வளர்ச்சி மொழியமைப்பில் மாந்தன் உருவாக்கும் சீர்திருத்தம், முதலானவற்றின் திரிபாக்கத்தை விளக்குவதாக அம்மொழி இருத்தல் வேண்டும்.

இவற்றை நிறைவு செய்வதாகச் சமற்கிருதம் இல்லையென்றும், தமிழே இவற்றை நிறைவு செய்வதாக உள்ளதென்றும் கூறித் தமிழே உலக முதன்மொழி என்றும், ஆரியன் என்னும் சொல்லே 'அரி' என்னும் அறுவடையைக் குறிக்கும் சொல்லிலிருந்து தோன்றியதென்றும் சமற்கிருதமென்பது சீர்திருத்தம் செய்யப்பட்ட தமிழே யென்றும் கூறித் திரு. எம். சுந்தரம் தம் மறுப்புக் கட்டுரையைமுடித்திருந்தார்.

உலக முதன் மொழிக்கு இருக்கவேண்டிய தகுதிகளாகச் சிலவற்றை அவர் சுட்டிக்காட்டியும் அவை தமிழுக்கு உரியவையாயுள்ளன என்றும் கூறி வேறு ஒருவகையில் தமிழ் உலக முதன்மொழி என நிறுவ முயன்ற திரு. சுந்தரம் என்பார் இது பற்றிய விளக்கமான வேறு கட்டுரையோ நூலோ எழுதியுள்ளாரா என்பது தெரியவில்லை.

## 5. அமர்நாத சட்டர்சியும், விசுவநாதகைரேயும்

தென்மொழி சுவடி 21 ஓலை 9 ஆடவைத் (சூன்—சூலை 85) திங்களிதழில், 'தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் இந்தப் பணியைச் செய்தாலென்ன?' என்னும் தலைப்பில் கோவையிலிருந்து திரு. சதாசிவம் எழுதிய சிறப்பு மடலில் வங்காளத்தைச்சேர்ந்த திரு. அமர்நாத சட்டர்சியும் மகாராட்டிரத்தைச் சேர்ந்த திரு. விசுவநாதகைரே என்பாரும் முறையே தமிழ் உலக மொழிகளுக்கெல்லாம் தாய் என்றும், மராட்டிய மாநிலத்தில் தமிழே வழங்கியது என்றும் தத்தம் நூல்களில் எழுதியுள்ளதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. அம்மடல் பின்வருமாறு:

"பெருமதிப்பிற்குரிய பெருஞ்சித்திரனார் அவர்களுக்கு, பேரன்புடையீர் வணக்கம். நெடு நாட்களுக்கு முன்பு வங்க நாட்டு மொழியியலறிஞரான அமர்நாத் சட்டர்சி என்பவர் தமிழ் மொழிதான் உலக மொழிகளுக்கெல்லாம் தாய் என்பதைத் தமது ஆராய்ச்சியின் வாயிலாக நிறுவிக்காட்டி முனைவர் (டாக்டர்) பட்டம் பெற்றுள்ளார். அவரது இவ்வாராய்ச்சிக் கட்டுரையை அக்கால அரசு வெளியிட்டுள்ளதாம்! தமிழ்ப் பகைவர் அதை அப்படியே இருட்டடிப்புச் செய்துவிட்டனர். அமர்நாத் அவர்களது இவ் வாராய்ச்சி பற்றி நான் மட்டும் எனது தமிழ் என்ற நூலில் குறிப்பிட்டுள்ளேன். இதுபற்றி வேறு எந்தத் தமிழ் அறிஞரும் எங்கும் குறிப்பிடக் காணோம். எனவே இது பற்றித் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு. சுப்பிரமணியம் அவர்களுக்கு எழுதினேன். அவர் அமர்நாத் அவர்களது ஆராய்ச்சி பற்றி அனைவரும் அறிந்தது தான் என்றும், அவரது ஆராய்ச்சி நூல் கிடைத்தவுடன் இதுபற்றி எனக்குத் தெரிவிப்பதாகவும் எழுதியிருந்தார்.

அமர்நாத் அவர்களது ஆராய்ச்சி பற்றி அனைவரும் அறிந்ததே என்று சொல்லுகிறீர்கள். ஆனால் இதுபற்றித் தமிழறிஞர்களுக்கே ஏதும் தெரியவில்லை. இதுபற்றிக் கலை இலக்கியத்தில் எதுவுமில்லை. மற்றும் தமிழறிஞர்களான

முனைவர் மு. வ., கா. அப்பாத்துரையார், பாவாணர் போன்றவர்கள் கூட இதுபற்றி எல்லாம் எதுவும் சொல்லக் காணோமே. அஃது ஏன் என்று கேட்டிருந்தேன். அதற்கு இன்றுவரை அவரிடமிருந்து விடை ஏதுமில்லை. எவ்வளவு கடிதம் எழுதினாலும் இதற்கு விடையும் அந்த ஆராய்ச்சி நூல் கிடைத்ததா என்ற விளக்கமும் எழுத மறுத்து வருகிறார்.

அடுத்தது வரலாறு காணாத பழங்காலத்தில் இன்றைய மராட்டிய மாநிலம் முழுவதிலும் தமிழே வழங்கி வந்துள்ளது என்பதற்கான சான்றுகளை முதன் முறையாகக் கண்டுபிடித்துத் 'திராவிட மாராட்டியர்' என்ற ஆய்வு நூலை மராட்டியில் எழுதியுள்ளார் விசுவநாத கைரே என்பவர். இதையும் தமிழ்ப் பல்கலைக் கழகம் தமிழில் மொழி பெயர்த்து வெளியிட வேண்டும் எனவும் தமிழ்ப்பல்கலைக் கழகத் துணை வேந்தரைக் கேட்டிருந்தேன். இதற்கும் இன்றுவரை அவரிடமிருந்து கடிதம் இல்லை.

துணைவேந்தர், முனைவர் அமர்நாத் அவர்களது ஆய்வு நூலை வெளியிட அஞ்சுகிறார் போலிருக்கின்றது. எனவே எப்படியும் அந்த நூலைத் தேடிக் கண்டு பிடித்து அதனை வெளியிட ஆவன செய்யும்படித் தங்களை வேண்டிக் கேட்டுக் கொள்கின்றேன்.

தங்கள்,
சதாசிவம், கோயமுத்தூர்—2.

திரு. சதாசிவம் மடல் வழியல்லாமல், அவர் குறிப்பிட்ட திரு. அமர்நாத் சட்டர்சியின் ஆய்வு நூல் பற்றியும், திரு. விசுவநாத கைரேயின் 'திராவிடமராட்டியர் நூல் பற்றியும் அறியக் கூட வில்லையாதலால் அந்நூற் செய்திகளைப் பற்றி யாதும் கூற இயலவில்லை.

## 6. திரு. இரா. வேங்கட கிருட்டினர்:

பொறியியலறிஞர் திரு. இரா. வேங்கடகிருட்டினர் எழுதிய 'தமிழே முதன் மொழி' என்னும் நூல் நவம்பர் 1984 இல் வெளி வந்துள்ளது. இந்நூல் தமிழ்—ஆங்கில மூலச்சொற்களின் அடிப் படையில் ஒப்பாய்வு செய்து தமிழே முதன்மொழி என நிறுவும் நோக்கத்துடன் எழுதப்பட்டுள்ளது.

''பழம் பெரு நாகரிகங்கள் அனைத்தினும் பழமையானது சிந்துவெளி நாகரிகம். அது, திராவிட (அ) தமிழ்மொழி என்பதை ஒரு பக்கம் எண்ணிப் பாருங்கள்; மற்ற நாகரிகமான சுமேரியர் வழியில் வந்ததே ஆங்கிலம் என்பதை மறுபக்கம் எண்ணிப் பாருங்கள். மூத்த மொழி, உலகமொழி இரண்டையும் ஒப்பீட்டு ஆராய்வதில் உள்ள உட்கருத்து இதுவே.

''வெவ்வேறு இனமொழிகள் என நாம் எண்ணிக் கொண்டிருக்கும் ஆங்கிலத்தையும் தமிழையும் ஒப்புவமை செய்து பார்ப்பதிலே மாபெரும் உண்மை புலப்பட வழிபிறக்கும்.

''இதுகாறும் வடமொழியே ஆங்கில (அ) ஐரோப்பிய மொழிகளுடன் ஒப்புவமை செய்யப்பட்டது. என்றாலும் அவர்களால், மொழியின் முதல் வரலாற்றை உணர முடியவில்லை.

''தமிழ் ஆங்கிலம் இரண்டுமே உலகமுதல் மொழியைக் கண்டுபிடிக்க உதவும் மொழிகள். உலகம் முழுவதும் இன்று உள்ள மொழிகளின் சொற்கள் பல ஆங்கிலத்தில் உள்ளன. அவைகளைத் தமிழ்ச் சொற்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் தெளிவு பிறக்கிறது'' (தமிழே முதன் மொழி பக். 61—62) என்று தமிழ் ஆங்கிலச் சொல் ஒப்பாய்வு முறையைத் தாம் மேற்கொண்டதற்கான கரணியத்தை விளக்குகின்றார்.

ஒரே மொழி எவ்வாறு பல்வேறு மொழிகளாய் மாறியது என்பதைப் பின்வருமாறு விளக்குகின்றார்.

''இதே போன்றுதான் (மாந்தன் இடம் விட்டுஇடம் சென்றபொழுது மொழியையும் தன்னோடு கொண்டு சென்றது) முதல் மொழி, உலகம் முழுதும் பரவியது. பல மொழிகளாய் மாறியது. ஆனால், உலக மொழிகளின் எழுத்து ஒற்றுமையும், ஒலி ஒற்றுமையும், சொற்பொருள் ஒற்றுமையும் அவை ஒரே மொழியின் குழந்தைகள் என்பதை உறுதிப்படுத்துகின்றன''

(மேற்படி நூல் பக். 53)

''கொச்சைத் தமிழ் பேசிய தமிழர், தாய்நாட்டை விட்டுப் பிழைப்புத்தேடி, வெளிநாடு சென்றனர். அங்கே ஆண்டுகள் பல ஆயின. கொச்சைத் தமிழே, பின்னர் எழுத்து வடிவம் பெற்றுப் புதுமொழி யாயிற்று; ஸ, ஜ, ஹ, க்ஷ முதலியன தோன்றின''

(மேற்படி நூல் பக் 54)

''முதல் மொழியில் ஒரேவகை க, ச, த, ப, மட்டுமே உண்டு. இதனை ஆங்கில எழுத்து ஆராய்ச்சியின் போது படித்தோம், ஒரே ஒலியுடைய நான்கு வகை எழுத்துகளை முதல் மனிதர் தோற்றி இருக்கவே முடியாது. அது இயற்கையே அல்ல. பேச்சு மொழி எழுத்து வடிவம் பெற்றபொழுது உருவானவையே, இந்த நான்கு வகைக் க, ச, த, ப எழுத்துகளாகும். எனவே, தமிழ் எழுத்தே முதலில் தோன்றியது என உணரலாம். சிலமொழிகள் இரண்டு மூன்று வகைக் க, ச, த, ப, வே உண்டு ஆங்கிலத்தில் f, p, b, மூன்றுபகரம், d, t, என இருவகைத் தகரம், c, g, j, s, என

நான்கு வகைச் சகரம் c, k. g, q, என்ற ககரம் போன்ற எழுத்துகளே உண்டு. இவற்றில் c—g—க ஒலியே வழக்கில் பெரும் பகுதி வழங்கி வருகின்றன. எனவே, அவரவர் தேவைக்கு ஏற்றபடி வல்லினத்தைப் பெருக்கிக் கொண்டனர். முதன்மொழியில் ஒரே ஓர் ஓசைக்கு ஒரே ஓர் எழுத்தே உண்டு.''

''தமிழி ழ, ல, ள என்று மூன்றும், ண, ன, ந, என மூன்றும், ர, ற, என இரண்டும் உள்ளனவே; இவை முதல் மொழி எழுத்தா என ஐயுறலாம்; அல்ல. முதல் மொழியில் ஒருவகை ல, ன, ர எழுத்தே உண்டு. பின்னரே இவை பெருகின'' என்று மொழிகள் பரவியமையையும் ஒன்றி லிருந்து பலவாகவே எழுத்துகள் பெருகியமையையும் அதனாலேயே தமிழுக்குப் பிற்பட்ட 'வர்க்க' எழுத்துகள் உள்ளன'' என்றும் கூறுகின்றார். (மேற்படி நூல் பக். 54—55)

முதன் மொழியிலிருந்து பேச்சுமொழி அல்லது கொச்சை மொழியாகத் திரிந்து அதுவே வெவ்வேறு மொழிகள் உருவாதற்குக் காரணமாகி மீண்டும் மீண்டும் பேச்சுமொழி எழுத்து மொழியாகிப் பல்வேறு மொழிகள் உருவாயின என்றும் விளக்குகின்றார்.

''முதன்மொழி எழுத்துமொழி, பேச்சு மொழி என்று இரு கூறாகப் பிரிந்தது. இன்றும் எந்த மொழியிலும் இந்த இரு கூறுகள் உண்டு. பேச்சு மொழி மீண்டும் தனிமொழியாயிற்று. எனவே, தூய எழுத்து மொழித் தமிழ் ஒரு பக்கமும் பேச்சு மொழியான கொச்சைத் தமிழ் மறுபக்கமும் பிரிந்தன. பேச்சு மொழியாயினும் அவற்றின் வேர் தூய தமிழே என உணரல் வேண்டும்.

''கொச்சைத் தமிழாகப் பிரிந்த மொழிகளில் மிகப் பழமையானவை சுமேரிய, எகிப்து மொழிகளாகும். பின்னர் வடமொழி, கிரேக்கம், இலத்தீன் என்று சிறப்பான வளம் பெற்ற மொழிகள் தோன்றின. கிரேக்கம், இலத்தீன், வடமொழி யாவும் கொச்சைத் தமிழ் என்பதால், அவை மக்கள்வழக்கில் நிற்காமல் மறைந்தன. கொச்சைத் தமிழிலும் மீண்டும் எழுத்து மொழி, பேச்சுமொழி எனப் பல்வேறு மொழிகள் இணைந்தன. அவைகளே இன்றைய ஆங்கிலம், ஃபிரஞ்சு, ஜெர்மன், மற்றும் அராபி, உருது, இந்திய மொழிகளாகும். தூயதமிழ் தனித்து வாழ்ந்து, இறுதியில் வடமொழியின் கலப்பால் தெலுங்கு, மலையாள, கன்னட மொழிகள் பிறந்தன. தூய தமிழும் செந்தமிழ் என்று பின்னர் மாறியது. இது பழந்தமிழிலிருந்து பிறந்தது.''

(மேற்படி நூல் பக். 370—71)

என்று மீண்டும் தம் கொள்கையை விளக்கி, இதற்குச் சான்றாக மூன்று காரணியங்களைக் காட்டுகின்றார்,

1) தமிழில் மட்டும் ஜ, ஸ, ஹ, ஷ, க்ஷ ஒலிகளுடன் கூடிய எழுத்தும், சொல்லும் இல்லாமை. ஏனைய மொழிகளில் உள்ளமை.

2) இன்றும் கல்லாமக்கள் சளியை ஜளி என்றும் இழுவை இஸு, இஷு என்றும் கொச்சையாக்குவதை எடுத்துக் காட்டி இவ்வாறு ஜ, ஸ முதலிய ஒலிகளும் கொச்சைப் பேச்சில் அன்று புகுந்தன.

3] உலக மொழிகளின் பெயர்கள் தமிழாக உள்ளன.

ஆகிய இம் மூன்று சான்றுகளையும் காட்டுவதுடன் (மேற்படி நூல் பக் 371-73) மூன்றாவது சான்றிற்கு, கிரேக்கு, இலத்தீன், சமற்கிருதம், ஃபிரஞ்சு, சீனம், முதலான சொற்கள் எல்லாம் தமிழ் மூலத்தின என்றும் கூறியுள்ளார்.

தமிழ்—ஆங்கிலச் சொல் ஒப்பாய்வுக்கு அவர் சில விதிமுறை களை வகுக்குங்கால்,

''ஆங்கில வேர்ச் சொல்லிலிருந்து தமிழ்ச் சொற்களைக் கண்டு பிடிக்கப் பல விதிமுறைகளை நாம் உருவாக்கியுள்ளோம். அவற்றை நாம் பின்னர் ஆங்காங்கே உரைப்போம்; எனினும் பொதுவான விதிமுறைகளை இங்குக் குறிப்பிடுவோம்.'' என்று கூறி, அறுபத்து மூன்று விதிகளை வகுத்துக் கொள்கின்றார்.

அத்தகைய விதி முறைகளுடன் A முதல் Z வரையுள்ள ஆங்கில நெடுங்கணக்கும் அவற்றை முதலாகக் கொண்ட சில சொற்களையும், ஆங்கில அகரமுதலிகள் வேர் தெரியாதன எனக் குறிப்பிடும் சொற்களைத் 'தாயில்லாச் சொற்கள்' என்னும் பகுதி எடுத்துரைத்து அவற்றிற்குத் தாய் தமிழே எனக் காட்டியும், மருத்துவச் சொற்கள், வடமொழிச் சொற்கள், உணவு, உடை, உறைவிடம் குறித்த (ஆங்கிலச்) சொற்கள், எண்களைக் குறிக்கும் சொற்கள்; மரம், செடி, கொடிகளைக் குறிக்கும் சில சொற்கள், கோள்களின் பெயர்ச் சொற்கள், ஒன்பான் மணி களைக் குறிக்கும் சொற்கள், வீடு (இல்லம்) பற்றிய சொற்கள், தொழில் பற்றிய சொற்கள், ஆகியவற்றைச் சிறப்புச் சொற்கள் என்னும் தலைப்பில் அவை தமிழ் மூலத்தின எனக் காட்டியும் அந்நூலை முடிக்கின்றார்.

எனின் . டமொழிச் சொற்கள் என்னும் பகுதியில் தக்கணம் (தக்ஷக்ஷணம்) தமிழ்ச் சொல்லே எனக் காட்ட விரும்பினாலும், அவர் வகுத்துக் கொண்ட விதிமுறைகள் அவர்க்கு உதவாமல், ''இப்படித்தான் சொல் மாறும் என வரையறுக்க முடியாத

சொற்பெருக்கம் ஏற்படும் என்பதை இச்சொல் காட்டும்'' என அவரே கையை விரித்துவிடுகின்றார். 'உத்தரம்', 'தக்கணம்' எம்மொழிச் சொற்கள்? எனப் பாவாணர் வரைந்த கட்டுரையை (மதுரை எழுத்தாளர் மன்றம் 16 ஆம் ஆண்டுவிழாச் சிறப்பு மலர் 1974) வேங்கட கிருட்டினனார் அறியாததாலும் அல்லது அறிந்தும் அதைக் கொள்ள விரும்பாமல் பாவாணர் கூறியவற்றிற்கு வேறாகத் தனித்தடம் அமைத்துக் கொண்டு தாம் ஆராய விரும்பியதாலும், இவர் இவ்வாறு தடுமாறுகின்ற இடங்கள் பல உள்ளன என்பதை அறியலாம்.

''தமிழர் எப்பொழுதும் காப்பு முறையிலேயே (Defensive வாழ்கிறார்கள்; தாக்கு முறையைப் (offensive) பின்பற்றினால் தான் அவர்கள் உயரமுடியும். தமிழில் நாம் முன்னமே அதனை ஆராய்ந்து எழுதிவிட்டால், பின்னர் வடமொழி ஆராய்ச்சி எடுபடாது'' என்று இவரே கூறுகின்றவாறு (மேற்படி நூல் பக். 411-12) இது ஒரு தாக்குமுறை (offensive) நூல் என்பதையும், இந்நூலில் இவர் காட்டும் சொல்லாய்வில் ஐம்பது விழுக்காட்டளவில் வீம்பாகவும், இட்டுக்காட்டியதாகவும், போலியாராய்ச்சியாகவும் பொய்த்துப் போய்விட்டாலும் எஞ்சியவை 'உலக முதன் மொழி தமிழ்' என்னுங் கொள்கைக்கு அரணாகிக் கட்டியங் கூறும் என்பதில் ஐயமில்லை.

வேங்கட கிருட்டினரின் 'தமிழே முதன்மொழி' என்னுமிந் நூலில் ஒரு புதிய கருதுகோளும் (Hypothesis) முன்மொழியப் பட்டுள்ளது. அறிவியல் முன்னேற்றத்தால் மாந்தன் திங்களுக்கும் செவ்வாய்க்கும் செல்வது மட்டுமன்றி, வேறு கோள்களிலும் உயிர்கள் வாழலாம் என்றும் கூறப்படுகின்றது. வேறு கோள்களில் உயிர்களும் உயிர்களின் வளர்ச்சியான மாந்தனும் வாழ்ந்தால் அங்கும் ஒரு மொழி இருக்கவேண்டுமல்லவா? அம்மொழியும் தமிழாகவே இருக்கமுடியும் என்பதுதான் வேங்கடகிருட்டினர் முன்வைக்கும் கருதுகோள் ஆகும்.

"தமிழ்மொழி இயற்கையான மொழி என்பதால், நம்பூவுலகு போல வேறு வெளியுலகு இருப்பின், அங்கும் தமிழ்மொழியே இருக்க முடியும் என்று நாம் அழுத்தமாகக் கூறலாம். அறிவியல் இந்தக் கூற்றை வலியுறுத்தும் நாள் விரைவில் வரும். (மேற்படி நூல் பக். 389)

இக் கருதுகோள் அறிவியல் உண்மையாகுமா? 'சமற்கிருதம் தேவ உலகத்தின் மொழி' என்பது போல ஒரு தொன்மக் (Myth) கருத்தாகி விடுமா? என்பதை எதிர்காலம்தான் உணர்த்த வேண்டும்.

பாவாணரின் ஆராய்ச்சி, தனித்தலைப்பில் கூறப்படுகின்றது.

# பாவாணர் கூறும் உலக முதன்மொழிக் கொள்கையும் முதன் மொழித் தோற்ற வளர்ச்சி நிலைகளும்

விலங்கிலிருந்து வளர்ந்த மாந்தன்-அல்லது பாவாணர் கருது கின்றவாறு, மாந்தனாகவே படைக்கப்பட்டு விலங்காண்டியாக வாழ்ந்த மாந்தன், மொழியைப் படைத்துக்கொள்ள வேண்டிய தேவை ஏன் ஏற்பட்டது? விலங்குகளைப் போலவே அவன் வாழாது விலங்குகளால் இயலாத ஒன்றாகிய மொழிப் படைப்பை அவன் எவ்வாறு கண்டான்? இவ்வினாக்களுக்கு விடையாக இரண்டு அடிப்படைக் கரணியங்களைச் சுட்டலாம். ஒன்று, மாந்தனுக்கு மட்டும் இயல்பாக அமைந்துவிட்ட உடற் கூறு. இரண்டாவது, மாந்தனின் உழைப்பு முயற்சி. பேச்சுக்கு ஏற்றவாறு மாந்தனின் நாக்கும் தொண்டைக் கட்டும் பிறவும் அமைந்துள்ள உடற்கூறு நிலை மாந்தனைப் பேசத் தூண்டியது. இரண்டாவதாகிய உழைப்புக் கரணியத்தைப் பற்றிப் பிர டெரிக்கு எங்கேல்சு பின்வருமாறு கூறுகின்றார்.

"உழைப்பிலிருந்து, உழைப்போடு மொழி தோன்றியது என்னும் விளக்கம் விலங்குகளுடன் ஒப்புநோக்குங்கால் நிறுவப் படுகின்றது. மிகவும் வளர்ச்சியடைந்த விலங்குகளுக்கிடையே யும் அவற்றிற்கிடையே கருத்தறிவித்துக்கொள்ளும் தேவை மிகக் குறைவாகவும், அத்தேவையும் நாமடங்கிப் பேசுவதன் வழி யாகவே நிறைவேற வேண்டிய தேவையாகவும் இல்லை."
(Dialectics of Nature, 1974 ஆம் ஆண்டுப் பதிப்பு பக்கம் 173)

"முதலில் உழைப்பு; அதன் பின்னர் அதோடு கூடவே பேச்சு. இந்த இரண்டும் மாந்தக் குரங்கின் மூளை படிப்படியாக மாந்த மூளையாக வளர்வதற்கு ஊக்குவிப்பனவாக அமைந்தன" (மேற் படி நூல் பக். 174)

மொழித்தோற்றத் தேவையைக் குறித்து எங்கேல்சு கூறும் உழைப்புக் காரணம் பாவாணர்க்கு ஏற்புடையதாகவும்,

பாவாணராலும் எடுத்தியம்பப் பெறுவதாகவும் உள்ளமையைக் காணலாம். அத்தகைய இரண்டு செய்திகளைச் சுட்டிக் காட்டுதல் நன்றாம்.

1. ''மாந்தன் நிலைகள், தொழிற்படி, முறையே உண்ணும் மாந்தன் (Man the Eater), உழைக்கும் மாந்தன் (Man the Worker) எண்ணும் மாந்தன் (Man the Thinker) புதுப்புனை மாந்தன் (Man the Inventer) என நான்கு. அவற்றுள் இடைமூன்றும் திராவிடர் அடைந்தவை; இறுதியது ஆரியரது.''

(ஒப்பியன் மொழிநூல் பக். 268)

என்று பாவாணர் கூறியுள்ளார். உண்ண மட்டும் அறிந்த மாந்தன் விலங்கு மாந்தனே; உழைக்கவும் எண்ணவும் அறிந்தவனே நாகரிக வளர்ச்சிகளுக்கு அடிப்படையான மொழியை உண்டாக்கும் மாந்தனாவான். ஆகையால் உழைப்புக் காரணம் பாவாணராலும் கூறப்பட்டமையை அறியலாம்.

2. மொழித்தோற்றத்தின் முந்து நிலையாக, உணர்வொலி ஒப்பொலி, குறியொலி, வாய்ச் செய்கைஒலி, குழவி வளர்ப்பொலி, ஆகியவற்றிற்குப் பாவாணர் எடுத்துக் காட்டும் ஒலிகளிற் பலவும் உழைப்பின் அடிப்படையாகத் தோன்றுபவையே என்பதையும் அறியலாம்.

பொதுவுடைமை அறிஞரான எங்கேல்சு கூறும் மொழித் தோற்றத்திற்கான உழைப்புக் கரணியம் பாவாணர் கூறும் மொழித் தோற்ற நிலைகளுக்கும் பொருந்துவதாயுள்ளது என்பதை இதனால் அறியலாம். உழைப்பு, மாந்தன் மொழியைப் படைத்துக் கொள்ள முதன்மையான ஒரு தூண்டுகோலாக அமைந்ததேயன்றி முழுமையான ஒற்றைக் கரணியமாய் இருந்திருக்க இயலாது. மாந்தனின் முற்செலவும், சுட்டும், மொழியின் அடுத்த கட்ட வளர்ச்சிக்குரிய காரணங்களாகப் பாவாணர் காட்டுகின்றார். பாவாணர் எழுதிய முதல் மொழியாராய்ச்சி நூல் ஒப்பியன் மொழிநூல் (1940) ஆகும். அந்நூலில் உலக முதன்மொழிக் கொள்கை என்னும் தலைப்பில்,

1. மாந்தன் தோன்றியது குமரிநாடாயிருக்கலாம் என்று கூறி அதற்கான பத்துக் கரணியங்களை எடுத்துரைத்து விளக்குகின்றார். விவிலியத்தில் பழைய ஏற்பாட்டிற் காணும்முதல்வேதத் (Genesis)தில் மாந்தன் படைப்பை யூதர்வரலாற்றோடு இணைத்துக் கூறியிருப்பது தவறு

என்னும் கருத்துடன், யூதர் முதல் மக்கள் வகுப்பா ரல்லர் என்பதற்கான ஏழு கரணியங்களைச் சுட்டிக் காட்டுவதுடன், முதல் வேதத்தை எழுதிய, "மோசே உலக சரித்திரமறிந்தவரல்லர். அவர் அக்காலத்து மக்களின் அறிவுநிலைக் கேற்றபடி, பழமை முறையிற் படைப்பைப் பற்றிக் கூறினார்"

(ஒப்பியன் மொழிநூல் பக். 356) என்று கூறியும்,

2. தமிழ் உலக முதற் பெருமொழியாயிருக்கலாம் எனக் கூறி அதற்கான சான்றுகளும் காரணங்களுமாகப் பதினைந்து செய்திகளைக் கூறியும்

3. தமிழோடு பிற மொழிகள் ஒவ்வாமைக்கு எட்டுக் காரணியங்களைக் கூறியும்,

4. வடமொழி உலக முதன்மொழியாக முடியாதென் பதற்கு ஐந்து கரணியங்களை விளக்கியும்,

"இங்குக் கூறியவற்றால், வடமொழிஉலகமுதன் மொழியாவ தினும், ஒட்டகம் ஊசியின் காதில் நுழைவது எளிதாயிருக்கு மென்க' என்று விவிலிய உவமையைக் கூறியும்

(மேற்படி நூலில் பக். 353–365) முடித்துள்ளார்.

இவை, எத்தகைய அடிப்படையோடும் சான்றுகளோடும் தமிழே உலக முதன்மொழி என்னும் கொள்கையைத் தம் முதல் மொழியாராய்ச்சி நூலில் முன் வைத்தார் என்பதைக் காட்டு கின்றன.

தமிழே உலக முதன்மொழி என்னும் அடிப்படைக் கொள்கை யுடன், அவ்வுலக முதன்மொழி எவ்வாறுதோன்றி வளர்ந்தது என்பதையும் அந்நூலில் (பக். 275 முதல் 349 வரை) விளக்கி யுள்ளார்.

அவர்தம் அகவையும் அறிவும் ஆராய்ச்சியும் முதிர முதிர அவர்தம் கொள்கை விளக்கம் பெற்றும் வலுவடைந்தும் உறுதிப் பட்டும் வந்துள்ளது.

அதன் பின்னர் அவர் எழுதிய அரிய ஆராய்ச்சி நூலான 'முதல்தாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கம்' (1949-இல் எழுதி 1953 இல் அச்சேறியதாகத் தெரிகின்றது) வெளிவந்தது. அதன் முகவுரையில் "அம் மூல மொழிகளுள் முதன்மையானது தமிழே என்றும், அது தோன்றிய இடம் மாந்தன் பிறந்தக மாகிய குமரி நாடே என்றும், பத்தாண்டிற்கு முன்னரே வெளி

யிட்டேன். அதை மெய்ப்பிக்கும் வகையில், முதலாவது இந்நூல் வெளிவருகின்றது'' என்று கூறியுள்ளார்.

அடுத்தது, அவரால் 1960 இல் எழுதி முடிக்கப் பெற்று வெளியிடுவாரின்றி அரிராம் சேட்டு நினைவுவிழாக் குழுவின் கொடையால் 1966 இல் அச்சேறியது 'The primary classical language of the world' என்னும் ஆங்கில நூல்.

அதன் பின்னது, செட்டிகுளம் பாவாணர் நூல் வெளியீட்டுக் குழுவினரின் முயற்சியாலும் நன்கொடையாலும் 1967 ஆம் ஆண்டு வெளியான 'தமிழ் வரலாறு' என்னும் நூல்.

இம் முந்நூல்களும் பாவாணர் தம் முதன்மொழியின் அல்லது தமிழின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் தமிழிலும் ஆங்கிலத்திலும் எடுத்துரைக்கும் தலைசிறந்த நூல்களாகும். பாவாணர் அவர்கள் தம் வாழ்நாளுக்குள் முடிக்கக் கருதியிருந்த மூன்றுநூல்களான செ. சொ. பி. அகரமுதலி, 'The Lemurian language and its ramification' தம் வாழ்க்கை வரலாறு ஆகியவை எழுதி முடிக்கப்பொறாமலேயே பாவாணர் மறைந்தார்.

முற்குறித்த முந்நூல்களை அடிப்படையாய்க்கொண்டு அவர் கூறும் தமிழ்த் தோற்றமும் வளர்ச்சியும் பற்றிய உண்மைகளைக் காணலாம்.

குமரிநாட்டு மாந்தர் மொழியின்றி இருந்த நிலை தோராயமாகக் கி. மு. 5,00,000 ஆண்டுகளிலிருந்து 1,00,000 ஆண்டுகள் வரை என்றும் இக்கால கட்டத்தில் மாந்தன் மொழியும் மொழியுணர்ச்சியுமின்றி இயற்கையான உணர்ச்சியொலிகளையும் விளியொலிகளையுமே உடையவனாய், பெரும்பாலும் சைகைகளால் தன் கருத்தை வெளிப்படுத்தி வந்தான் என்றும், மொழியற்ற நிலையில் மாந்தனின் கருத்தும் எண்ணமும் உருவலிப்பாகவே (Imagination) இருந்தன என்றும், மொழித்தோற்றம் நிகழாத காலத்தின் நிலையையும், தோராயமான ஆண்டுகளையும் குறிப்பிடுகின்றார்.

தோரா. கி. மு. 1,00,000 ஆண்டுகளிலிருந்து 50, 000 ஆண்டுகள் வரை மாந்தனின் ஒலித்தொகுதி இயற்கை மொழி அளவிற்கு (Natural language) வளர்ந்தன என்றும். இந்நிலை முழைத்தல் மொழி நிலை (Inarticulate speech) என்றும், அத்தகைய ஒலிகள் ஏழு நிலையின என்றும் கூறுகின்றார். அவை,

1. உணர்ச்சி ஒலிகள் (Emotional sounds)

மாந்தன், தன் உள்ளத்துத் தோன்றிய இன்ப துன்ப உணர்வு களைத் தன்னையுமறியாமல் உடன் வெளிப்படுத்தும் ஒலிகள் உணர்ச்சியொலிகள்.

மகிழ்ச்சியைக் குறிக்க ஆ, ஊ, ஏ, ஐ, ஆய், ஓ, என்பன
நோவைக் குறிக்க ஆ, ஈ, ஊ என்பன
வியப்பைக் குறிக்க ஆ, ஆஆ(அவா)—ஆகா, ஏ, ஐ,ஓ,
இழிவைக் குறிக்க ஊ, பூ என்பன
இரக்கத்தைக் குறிக்க ஆ, ஆஆ—ஆவா என்பன
தெளிவைக் குறிக்க ஓ, ஓஓ — ஓவோ — ஓகோ என்பன

2. விளியொலிகள் (Vocative sounds)

பிறரை விளிக்கும் ஒலிகள் விளியொலிகள். அவை: ஏ, ஏய், ஓ, ஏலா, எல்லா என்பன.

3. ஒப்பொலிகள் (Imitative sounds)

இருதிணைப் பொருள்களும் இயற்கையாகவும் செயற்கை யாகவும் பிறப்பிக்கும் ஒலிகளை ஒத்தொலிக்கும் ஒலிக்குறிப்புகள் ஒப்பொலிகள். அவை,

கூ (கூவு) கா கா (காகம்) உர் (உரறு) ஊள் (ஊளை) சரசர (சாரை) கீர் (கீரி) என்பன என்றும், கலகல, கிண், கிணீர், முதலான ஒலிக்குறிப்புச் சொற்களும் ஒப்பொலிகளே என்றும் பிற்காலத்தே ஓக்களி, உமட்டு, குறட்டை, சப்புதுப்பு முதலான சொற்கள் தோன்றியமையும் ஒலிக்குறிப்பினாலேயே என்றும், வாயொலியின்றி வாய்வழியும் மூக்கு வழியும் செவிப்புலனாகும் காற்றுமட்டும் வெளிவரும் செயல்கட்கும் ஒப்பொலி முறையில் சொற்கள் தோன்றியுள்ளன என்றும் கூறியுள்ளார். அவை:

ஆ - ஆவி; ஊ - ஊது; மூசு - மூச்சு முதலியன. ஒலிக்குறிப்பு கள் இத்துணையவென்றும் இத்தகையவென்றும் அறியப்படா என்றும் ஒரேயொலி வெவ் வாறு எண்ணிறந்தனபல்திறத்தன வேறு செவிக்கு வெவ்வேறு வகையாய்க் கேட்பதால் ஒரு ஒலிக் குறிப்பு வெவ்வேறு வடிவிலும் அமையலாம் என்றும், சில ஒலிக் குறிப்புகள் சொல்லாகுமென்றும் சில சொற்களைப் பிறப்பிக்கு மென்றும், சில ஒலிக்குறிப்பாகவே நின்று விடுமென்றும் வேறு சில விளக்கங்களையும் கூறுகின்றார்.

4. குறிப்பொலிகள் (Symbolic sounds)

வழக்கப்படி, சில கருத்துக்களைப் பிறர்க்குத் தெரியும் வகை யில் குறிக்கும் ஒலிகள் குறிப்பொலிகள். அவை:

எழுத முடிவன: சீ, பூ போன்றவை.
எழுத முடியாதன: மொச்சட்டம் (மொச்சக் கொட்டு
தல்) முற்குதல் (ducking) வீளை
(சீழ்க்கை) போன்றவை.

## 5. வாய்ச் செய்கை ஒலிகள் (Oral Action-Sounds)

மாந்தன் இயற்கையாகவும் செயற்கையாகவும் தன் வாயினாற் செய்யும் சில செய்கைகளும் சைகைகளும் ஒவ்வோர் ஒலியைப் பிறப்பித்தற்கேற்ற வாய்வடிவை அமைத்து, அவ்வொலிகளின் வாயிலாய் அச் செயல்களைக் குறிக்கும் சொற்களைப் பிறப்பித்திருக்கின்றன. அச் சொற்கட்கு மூலமான அவ்வொலிகள் வாய்ச் செய்கை ஒலிகளாம். அவை:

ஆ — அ — அங்காத்தல்
அவ் — கவ் — வவ் — அவ்வு — கவ்வு — வவ்வு
ஈ — இளி (சிரித்தல்)

## 6. குழவி வளர்ப்பொலிகள் (Nursery sounds)

குழவி வளர்ப்பில் குழவிகள் இயல்பாக ஒலிக்கும் ஒலிகளினின்று தாய்மார் சில சொற்களை அமைத்துக் கொள்வதுண்டு. அத்தகைய ஒலிகள் குழவி வளர்ப்பொலிகள். அவை மிகச் சிலவே.

(எ-டு) இங்கு — இங்கா — பால்

குழவிவளர்ப்பொலிகளும் உள்ளிய (Voluntary) ஒலி, உள்ளா (Involuntary) ஒலி என இருவகைப்படும் என்றும், இத்தகைய ஒலிகள் பல ஆப்பிரிக்க மொழிகளும் ஆத்திரேலிய மொழிகளும் போன்ற திருந்தா மொழிகளில் சொல்லாக வழங்குகின்றன என்றும் கூறியுள்ளார்.

## 7. சுட்டொலிகள் (Deictic sounds)

சுட்டிக்காட்டும் ஒலிகள் சுட்டொலிகள். சேய்மையைச் சுட்டுதற்கு ஆகாரமும் அண்மையைச் சுட்டுதற்கு ஈகாரமும், முன்மையைச் சுட்டுதற்கு ஊகாரமும் சுட்டொலிகளாயின சுட்டொலிகள் குறித்துப் பாவணர் தரும் சில விளக்கங்களாவன:

1. இச்சுட்டொலிகளின் தோற்றமே தமிழ்க் கருநிலை.
2. இவையே முந்தித் தோன்றிய உயிர்கள்.
3. முதற்கண் சூவிடச் சுட்டு கைச்சைகையால் மட்டும் நிகழ்ந்தது. பின்பு கைச் சைகையோடு கூடிய வாய்ச்

சைகையினால் நிகழ்ந்தது. அதன் பின் வாய்ச் சைகை யினால் நிகழ்ந்தது.

4. இவை வாய்ச் சைகையொலிகளாயினும் சிறப்பு நோக்கி வேறு பிரிக்கப் பெற்றன.

5. இவை வாய்ச் சைகை ஒலிகளாயிருப்பதனால் அவை தமிழில் எக்கரணியத்தை முன்னிட்டும் இடம் மாறி ஒலிப்பதில்லை. இதனால், தமிழொடு சிறிதும் பெரிதும் தொடர்புள்ள பிறமொழிச் சுட்டுச் சொற்கட்கெல்லாம் தமிழ்ச் சொற்களே மூலமென்பதைத் தெற்றெனத் தெரிந்து கொள்ளலாம்.

இதுவரை கூறப் பெற்றவற்றுள், உணர்ச்சி ஒலிகளும் குறிப்பு ஒலிகளும் மொழி வளர்ச்சிக்குப் பெருந்துணை செய்யாச் சிறுபான்மையின என்றும், குழவி வளர்ப்பொலிகள், வாய்ச் செய்கை ஒலிகள், ஒப்பொலிகள் ஆகியன முறையே ஒன்றி னொன்று இவ்வகையிற் சிறந்தவை என்றும் கூறியுள்ளார்.

இத்தகைய இயற்கை நிலையைக் கடந்து மொழி வளர்ச்சி பெற்ற நிலை செயற்கை நிலையென்றும் இச்செயற்கை நிலையே தமிழ்த் தோற்றமென்றும் பாவாணர் கூறுவதுடன் அதன் வளர்ச்சி நிலைகளைப் பின்வருமாறு சுட்டியுள்ளார்.

''மூவகைச் சுட்டொலிகளினின்றும் சொற்கள் தோன்றியதே தமிழ்த் தோற்றமாம். இது செயற்கை மொழி. (Artificia language) அல்லது இழைத்தல் மொழி (Articulate speech) எனப்படும்'' (தமிழ் வரலாறு பக். 58) எனத் தொடங்கி இவ் வளர்ச்சிக்கான காலகட்டம் தோரா. கி. மு. 50000 ஆண்டு களென்று கூறி, சுட்டடிச் சொல்லாக்கத்தை விளக்குகின்றார்.

சுட்டடிச் சொல்லாக்கத்தின் விளக்கமும் விதியும் எடுத்துக் காட்டுமாக வே 'முதல் தாய்மொழி' நூல் அமைந்துள்ளது' அதன் சுருக்கம் 'தமிழ் வரலாற்'றில் கூறப் பெற்றுள்ளது.

''முச்சுட்டுக்களுள் சேய்மைச் சுட்டினின்று சேய்மைக் கருத்துத் தவிர வேறொன்றும் பிறத்தற் கிடமில்லை; அண்மைச் சுட்டினின்று, அண்மை, பின்மை, இழிகை முதலிய ஒருசில கருத்துக்களே பிறக்கின்றன. ஆயின், முன்மைச் சுட்டினின்றோ, தோன்றல் (முன் வருதல்), முன்மை, முற்செல்லல், நெருங்கல் பொருந்தல், வளைதல், துளைத்தல், துருவல் ஆகிய எண்பெருங் கருத்துக்களும், இவற்றிற்கு இடைப்பட்டனவும் இவற்றிற் கிளைத்தனவுமான எத்துணையோ நுண்கருத்துக்களும் பிறக்

கின்றன. இவற்றை யெல்லாம் என் முதற்றாய் மொழியுட் கண்டுகொள்க. இங்கு எண்பெருங் கருத்துக்களே இன்றியமையாத அளவு விளக்கப் பெறும்.''

''தோன்றல் என்பது, தாயினின்று குழவியும் மரத்தினின்று துளிரும் தோன்றுவது போன்ற இயற்கைத் தோன்றலும்; வீட்டினின்று மாந்தனும் வளையினின்று எலியும் தோன்றுவது போன்ற செயற்கைத் தோன்றலும், ஆக இருவகைப்படும். தோன்றுதல் முன்வருதலாதலின், தோன்றற் கருத்திலேயே, தற்கிழமை, பிறிதின் கிழமை ஆகிய இருவகை முன்மைக் கருத்தும் அடங்கியுள்ளன. முன்கிளையும் முன்கையும் போன்றவை தற்கிழமை முன்மை, முன்பொறையும் (முன்பாரமும்) முன் தூதனும் போன்றவை பிறிதின்கிழமை முன்மை.

''தோன்றியபின் உடனேயோ காலஞ்சென்றோ, ஓர் இடம் நோக்கிச் செலவு அல்லது பலதிசையும் படர்ச்சி ஏற்படுகின்றது. இயற்கையான செலவெல்லாம் முன்னோக்கியதேயாதலின், தோன்றலும் செலவும், முறையே முன்வருகையும் முற்செலவுமே யாகும். இவ்விரு பொருட்கும் அடிப்படையான முன்மைக் கருத்தை ஊகாரச் சுட்டே உணர்த்துகின்றது. ஊகாரத்தை அல்லது உகரத்தை ஒலிக்கும்போது, இதழ் குவிந்து முன்னிடத்தைச் சுட்டுவதை அல்லது நோக்குவதைக் காண்க. சேம்பரார் ஆங்கிலச் சொற்பிறப்பியல் அகரமுதலியில் (Chamber's Etymological Dictionary) Move என்னும் சொற்கு மொழிப் பொருட்கரணியம் இதழ் முன்னோக்கிக் குவிந்தொலித்தல் என்று குறித்திருத்தலைக் கூர்ந்து நோக்குக.

''முற்செல்லச் செல்ல சேரவேண்டிய இடத்திற்கு நெருக்கம் ஏற்படுகின்றது. சேர்ந்தபின் பொருந்தல் நேர்கின்றது. இடைவழியிற் சுவரும் கல்லும், மலையும் போலத் தடை ஏற்படின், வளைய அல்லது பக்கமாகத் திரும்ப நேர்கின்றது. தடுத்த பொருளையும் இடத்தையும் துளைக்க முடியுமாயின், எலி சுவரையும் மாந்தன் மலையையும் துளைத்தல் நேர்கின்றது. துளைத்து மறுபுறங்காணின் அதுவே துருவல். அதன்பின் தோன்றல் முதலிய பழைய நிலைமைகளே மீண்டும் நிகழும். மண்ணில் வேர் இறங்குதலும், மரத்தில் ஆணி பதிதலும் பொத்தகத்திற் புழு அரித்தலும் போன்ற செயல்களாயின் வளைதலின்றியே துளைத்தலும் துருவலும் நிகழும்.

''இருதிணையுயிரிகளின் வாழ்க்கையையும் நோக்கினால், அவற்றின் செயல்களெல்லாம் இவ்வெண்வகைக் கருத்து வட்டத்

திற்குள்ளேயே அமைகின்றன. இவற்றைக் கூர்ந்து கவனித்த பண்டைத் தமிழர், தம் நுண்மாண் நுழைபுலத்தினால், இது போலுள்ள தமிழ்ச் சொற்றொகுதியுள் ஏறத்தாழ முக்காற் பங்கை ஊகாரச் சுட்டடியாகவே தோற்றுவித்திருக்கின்றனர்'' (தமிழ் வரலாறு பக். 60-61) என்னும் விளக்கத்தைத் தெளிவுறுத்தி உகரச் சுட்டடிச் சொற்களைக் காட்டியுள்ளார்.

உகரச் சுட்டுவேர் தனித்தும் மொழிமுதல் எழுத்துகளாகிய க, ச, த, ந, ப, ம ஆகியவற்றுடன் சேர்ந்தும் வரும் என்றும் உயிருகரம் முதலாக வருவது முதலடி என்றும் உயிர்மெய்யுகரம் முதலாக வருவது வழியடி என்றும், உயிர் உகரமும் அதைத் தொடர்ந்து வரும் மெய்யும் பலவாறு திரிந்தும் வரும் என்று கூறி, முற்கூறிய எண்வகைக் கருத்துவளர்ச்சிகளையும் அவற்றின் அடிப்படையில் சொற்கள் தோன்றுவதையும் காட்டுகின்றார்

1. தோன்றுதல் (முன்வருதல்)

உ — உல் — உர் — உரு
உரு: — உருத்தல் — தோன்றுதல்
உரு: — (அரு) — அரும்பு — தோன்றுதல்
குரு — குருத்தல் — தோன்றுதல்
குருத்து — தோன்றும் இளவோலை
குரு — கரு — சூல்

உரு, குரு என்னும் முதலடியும் வழியடியும் எவ்வாறு தோன்றுதற் பொருளில் வந்தன எனக் காட்டும் பாவாணர், உகரம் சகரத்துடன் சேர்ந்து சுரு என வருவதற்கு எடுத்துக் காட்டேதும் காட்டாமல் விட்டு வைத்துள்ளார். இவ்வாறு விடுபட்டதற்கான விளக்கத்தையும் கூறியுள்ளார்.

''குமரிக்கண்ட முழுக்கினாலும், முதலிரு கழக விலக்கிய முழுதும் கடைக்கழக விலக்கியப் பெரும்பகுதியும் அழிந்து போனமையாலும் நீண்ட காலமாகத் தமிழர் தமிழைப் பேணாமையாலும், ஆயிரக்கணக்கான தென் சொற்கள் இறந்துபட்டன. அதனாலேயே, பல முதலடிச் சொற்கட்கும் வழியடிச் சொற்கட்கும் எடுத்துக்காட்ட இயலவில்லை யென்றறிக''
(தமிழ் வரலாறு பக். 64)

எனினும் அவர்தம் கூற்றை மெய்ப்பிக்கும் வகையில் 'சுரு' என்னும் வழியடிச் சொல் அதே வடிவத்தில் தொடங்குதல் என்னும் பொருளில் வரும் வினைச் சொல்லாக இந்தியில் உள்ளமையையும், அறியலாம்.

துரு : துரு — துருத்து என்பது இன்று முன்தள்ளுதலைக் குறிக்கும்.
நுரு : நுரு — பிஞ்சு. நுரு — நொரு — இளங்கதிர், பிஞ்சு
புரு : புரு — குழந்தை புரு (பிரு) — பிருகு — முற்றாப் பனங்கிழங்கு. பிருகு—பிருக்கு. சிறுபிஞ்சுகளைப் பிஞ்சும் பிருக்கும் என்பது உலக வழக்கு.

முரு : முரு —முருகு — இளமை, இளமையான முருகன்.
முருகு — முருகன். முரு — முருந்து — குருத்து, தளிர்.
முரு — முறி — தளிர். மளிர்தல் — துளிர்த்தல்.
முரு — மரு — மருவு. மருவுதல் — தோன்றுதல்.

இவ்வாறே குல், சுல், துல், நுல். புல், முல் என்னும் வழியடிகளுக்கு எடுத்துக்காட்டும். குகு, சுகு, துகு, நுகு, புகு, முகு என்பவற்றில் குகு, சுகு, துகு என்பவை தவிர ஏனையவற்றிற்கான எடுத்துக்காட்டும் முதற் பெருங் கருத்தாகிய தோன்றுதலுக்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளன.

**2.** முன்மை:

ஊங்கு: — முன்பு
உம்மை — முற்பிறப்பு
குனை — கூரிய முன்பக்கம்
நுனி — முனை
நுனி — நுதி — முன்,
நுதி — துதி — முன் துதிக்கை — யானையின் முன்னுள்ள அல்லது கூரிய நுனியுள்ள கை.
முன் — முனி முன் — முனை — முன்பக்கம்
முகு — முகம் — முன்பக்கம்
முகம் — முகர் — முகரை — முகம் — முகன் — முகனை — மோனை

முகம் என்னும் சொல் முன்மைக் கருத்தையும், தோன்றற் கருத்தையும் இணைத்துக் காட்டுதல் காண்க. இச்சொல் வடமொழியில் Mukha என்று திரியும்.

இவ்வாறு இரண்டாவது பெருங்கருத்தாகிய முன்மைக் கருத்துச் சொற்கள் உகரச் சுட்டடியாகப் பிறந்தன என்று காட்டுகின்றார்.

**3.** முன் செல்லுதல் (செல்லுதல்)

உகைதல் — செல்லுதல் உகைத்தல் — செலுத்துதல்
உகை — அகை. அகைத்தல் — செலுத்துதல்
உதைத்தல் — செலுத்துதல்.

உந்துதல் — செலுத்துதல்
உய்தல் — செல்லுதல்; தப்பிச் செல்லுதல். உய்த்தல் — செலுத்துதல்

உய் — ஒய் — ஒய்தல் — செலுத்துதல்.
உய் — இய் — இயல் — இயலுதல் — செல்லுதல்.
இய — ஏ — ஏகு — செல்.
(சுல்) — சல் — செல்.

சுல் என்பது வழக்கு வீழ்ந்த வழியடியாகவும், அதிலிருந்து தோன்றிய சல் என்பது இந்தியில் உள்ளமையும் காட்டப் பெறுகின்றன.

செல்லுதல் பொருளில் உகரச் சுட்டடிகளாக இன்னும் பல சொற்களும் Push, shoot, usher, urge, duct, duke, Thrust முதலான ஆங்கிலச் சொற்களின் உகரவடிவமும் ஒப்பு நோக்காகத் தரப்பட்டுள்ளன.

4. நெருங்குதல், செறிதல், கூடுதல்

உள், குள், சுள், நுள், முள் ஆகிய வழக்கு வீழ்ந்த முதலடி வழியடிச் சொற்களின் பிறப்பினவாகப் பின்வருஞ் சொற்கள் காட்டப்பட்டுள்ளன.

(உள்) — அள் அள்ளுதல் — நெருங்குதல். செறிதல்
அள் — அண் — அண்ணுதல் — நெருங்குதல்.
(குள்) — (குட்டு) — கிட்டு — கிட்டுதல் — நெருங்குதல்
(சுள்) — (செள்) — செறு செறுத்தல் — செறிதல்.
செறு — செறி
துல் — துன். துன்னுதல் — நெருங்குதல்
துன் — துன்று — துன்றுதல் — நெருங்குதல்.
(நுள்) — (நெள்) — நெரு — நெருங்கு.
முல் — முள் — முரு — மரு — மருவு — மருவுதல் — கிட்டுதல்.
முல் — மல் — மலி — மலிதல் — நெருங்குதல். நிறைதல், மிகுதல்.
(முள்) — (மள்) — மண்டு — மண்டுதல் — நெருங்குதல், கூடுதல்.
மண்டு — மண்டகம் — மக்கள் கூடும் காரைக் கூடம்.
மண்டகம் — மண்டபம் — (வ) மண்டப.

இவ்வாறு உகரச் சுட்டடிச் சொற்கள் நெருங்குதல் கருத்தினவாகத் தோன்றியமை காட்டப்பட்டுள்ளது.

5. பொருந்துதல், கூடுதல், ஒத்தல்:

உல் — உ
உத்தல் — பொருந்துதல்
உத்தி — விளையாட்டில் இருவர் சேர்ந்து வரும் சேர்க்கை. அறிவிற்குப் பொருத்தமான இலக்கண நெறிமுறை,
உல் — ஒல் — ஒல்லுதல் — பொருந்துதல்.
உல் — ஒல் — ஒன் — ஒன்னுதல் பொருந்துதல்.
ஒன் — ஒன்று — ஒன்றுதல் — பொருந்துதல்.
ஒல் — (ஒள்) — ஒண் — ஒண்ணுதல் — பொருந்துதல்.
ஒல் — ஒ. ஒத்தல் — பொருந்துதல்.
(குள்) — குழு — குழுவு — குழு — குழுமல் — கூட்டம்.
(குள்) — (கூள்) — கூண்டு — கூடு. — கூட்டம்.
(சுள்) — செள் — செரு — சேர்.
(நுள்) — நள் — நண் — நண்பு — நள் — நட்பு.
புல் — பொல் — பொரு — பொருந்து — பொருத்து — பொத்து — பொட்டு
பொல் — போல் — போலுதல்.
புல் — புள் (புண்) — புணர். (புண்) — பூண் — பூட்டு.
புல் — (புர்) — புரை. புரைதல் — ஒத்தல்.
முல் — முள் — முள்கு — முள்குதல் — தழுவுதல்.
முல் — மல் — மன் — மன்னுதல் — பொருந்துதல்.
மன் — மன்று — மன்றம் — மன் — மனை.

இவ்வாறு உகரச் சுட்டடிச் சொற்கள் ஐந்தாவது பெருங் கருத்தாகிய பொருந்துதல், கூடுதல், ஒத்தல் ஆகிய கருத்தினவாகத் தோன்றியுள்ளமை காட்டப் பெற்றுள்ளது.

6. வளைதல்

உல் — உலா — உலவு — உலாவு.
குல் — குலா — குலவு.
குல் — குள் — கொள் — கோள் — கோண் — கோடு — கோட்டம்
சுல் — சுலா — சுலவு
துல் (தில்) திர் — திரும். திருமுதல் — வளைதல், சாய்தல். மீளுதல்.
திரும் — திரும்பு.
(நுள்) — நெள் — நெளி — நெற்றி.
புல் — புரு — புரி. புரு— புருவம். புரிதல் — வளைதல்.
முல் — முரு — முருகு — வளைந்த காதணி.

முரு — மறு — முற்று — முற்றுதல். சூழ்தல், முற்றுகை இடுதல்.

இவ்வாறு உகரச் சுட்டடிச் சொற்கள் வளைதற்கருத்தின வாகத் தோன்றியுள்ளமை காட்டப் பெற்றன. அன்றியும், roll, curl, coil, whirl, swirl, twirl முதலான ஆங்கிலச் சொற்களின் மூலமாகவும் தமிழ் அடிச்சொற்கள் உள்ளமையும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

7. துளைத்தல்

உள் — உளு — துளைக்கும் புழு.
உள் — உழு — உழுதல்.
குள் — குழி — குழை — குடை — குடைதல்
குழி — கொழு — கொழுது — தோது — தோதுதல் — குடைதல்

கொழு — நிலத்தைத் துளைக்கும் ஏரூசி.
குள் — குளி — குளித்தல் — உட்புகுதல் — முழுகுதல், நீராடல்
சுள் — சுர — சுரை—உட்டுளை.
துல் ... துன் ... எலிவளை
துல் ... துள் ... துளை.
துள் ... தொள் ... தொள்ளை ... தொளை.
தொளை ... தோள் ... தோண்டு.
தொள் ... தொடு ... தொடுதல் ... தோண்டுதல்.
நுள் ... நொள் ... நொள்ளை ... குழிவு.
நுள் ... நுழை ... நூழை — துளை, வாயில்.
புல் ... உட்டுளை.
புல் ... புள் ... புழு ... துளைக்கும் சிற்றுயிர்.
புள் ... பொள் ... பொளி ... பொறி.
பொள்ளல் ... துளை, துளைத்தல்
பொளித்தல் ... துளைத்தல், வெட்டுதல், கிழித்தல்.
பொறித்தல் ... குழித்தெழுதுதல்
முள் ... (முழு) ... முழை ... குகை.
முழை ... மூழை ... அகப்பை.
முழுகு — முழுங்கு — முங்கு. முழுங்கு ... விழுங்கு.
முள் — மொள் — மொண்டை — மொந்தை.

என்றிவ்வாறு உகரச் சுட்டடிச் சொற்கள் துளைத்தற் கருத்தினவாகக் காட்டப் பெற்றுள்ளன.

8. துருவுதல்

உள் ... உரு ... உருவு — உருவுதல் — கைக்குள் ஒன்று துருவு மாறு இழுத்தல்.
குள் ... (குரு) கோர் — கோ. கோர்வை.... கோவை.
கோர்த்தல்— நூல் ஊசிக்காதிலும் பாசித்துளையிலும் துருவச் செய்தல்.
சுள் ... சுரு ... சுருங்கை — நிலத்தின் கீழ்த் துருவிச் செல்லும் வழி.
சுரு ... சுருவு ... சுருவம் — உணவுக் கலத்துள் துருவும் அகப்பை.
துள் ... துரு. துருவு.
தூர் ... தூரி ... நீர் துருவிச் செல்லும் மீன்பொறி.
தூர் ... தோர் ... தோரணம்.
புள் ... புழு ... புகு ... புகுது — புகுரு ... பூர் ... பூர்தல் — உட்புகுதல்
பூர் ... பூரான். மண்ணிற்குள் புகும் நச்சுப் பூச்சி.
முல் ... மூலம் ... வாயில் (Means)

எனத் துருவுதல் கருத்தின் அடிப்படையில் உகரச் சுட்டடிகள் தோற்றுவித்த சொற்கள் சுட்டிக்காட்டப்பட்டன.

இவ்வாறு தமிழ் வரலாற்றில் எண்வகைக் கருத்தினவாக உகரச் சுட்டடிகள் வளர்ந்தமையைச் சுருக்கமாகக் காட்டியுள்ளமையோடு, 'முதல் தாய் மொழி'யில் விரிவாகவும், சற்று வேறுபடவும் காட்டியுள்ளார். வேறுபடக் காட்டியுள்ளமை 'பாவாணரின் முதன்மொழி ஆய்வு வளர்ச்சி நிலைகள்' என்னும் பகுதியில் சுட்டிக் காட்டப் பெறும்.

மொழித் தோற்றத்திலும் அதன் வளர்ச்சியிலும் உகரச் சுட்டே பெரும் பங்கை யுடையதென்றும், அகர, இகரச்சுட்டுக் களின் பங்கு மிகச் சிறிதேயென்றும் பாவாணர் கருதியமையால், 'தமிழ் வரலாறு' நூலில் அகர இகரச் சுட்டுகளின் சொல் வளர்ச்சியைச் சுட்டிக்காட்டவில்லை. ஆயின் 'முதல் தாய் மொழி' நூலில் அவை விளக்கம் பெற்றுள்ளன.

## இகரச் சுட்டு

1. அண்மையியல் சுட்டாகவும்,
2. பின்மையியல் சுட்டாகவும்,
   பின்மையியலில் (1) கால இடப் பின்மைக் கருத்து (2) மறுநிலைக் கருத்து (3) முதுகுக் கருத்து (4) மேற்புறக்

கருத்து (5) வெளிப்புறக் கருத்து (6) பின்னிடற் கருத்து ஆகிய அறுவகைக் கருத்துச் சொற்களை உருவாக்கியும்,

3. இழுத்தலியலிற் சுட்டாகவும்,
இழுத்தலியற் சுட்டு (1) இழுப்பு (2) இழுப்பு நோய் (3) எழுதுதல் ஆகிய மூவகைக் கருத்துச் சொற்களை உருவாக்கியும் இவ்வளவிலேயே இகரச் சுட்டு மொழித் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் பயன்பட்டதென்றும் காட்டுகின்றார்.

அவ்வாறே அகரச் சுட்டு, சேய்மைச்சுட்டு ஒன்றின் அடிப் படையில் சில சொற்களையே தோற்றுவித்தன என்றும், அகரச் சுட்டினின்றும் சேய்மையல்லாத வேறெக்கருத்தும் பற்றிய சொற்கள் தோன்றியில என்றும் கூறியுள்ளார்.

இச் சுட்டொலிகள் வளர்ந்த காலம், இயற்கை மொழி நிலைக்கும், திருந்தியமொழி நிலைக்கும் இடைப்பட்ட காலம் என்பது பாவாணர் கருத்தாதலைப் பின்வரும் பகுதி உணர்த்தும்.

''மொழிவரலாற்றில், முதன்மையாய்க் கவனிக்க வேண்டிய மூன்று காலங்கள் உள. அவை சைகைக் காலம், குறிப்பொலிக் காலம், சுட்டொலிக்காலம் என்பன.

''விலங்கும் பறவையும் போல உணர்வொலிகளை மட்டுங் கொண்டு, அவற்றால் உணர்த்த முடியாத பிற கருத்துக்களை எல்லாம் சைகைகளைக் கொண்டே உணர்த்திய காலம், சைகைக் காலம் ஆகும். இச் சைகை முறையைச் சைகைமொழி (Gesture language) என்பர். சிறுபான்மைச் சைகைகளைத் துணைக் கொண்டு, உணர்வொலி முதலிய ஐவகைக் குறிப் பொலிகளையுங் கையாண்ட காலம் குறிப்பொலிக் காலமாகும். இக் குறிப்பொலி மொழியை இயற்கை மொழி (Natural language) என்பர். குறிப்பொலிகளுடன் சுட்டொலிகளை யும் கையாண்டு, அவற்றினின்று பல்லாயிரக் கணக்கான சொற் களைத் திரித்துக் கொண்ட காலம், சுட்டொலிக் காலமாகும். சுட்டொலிகள் தோன்றிய பின்னரே மொழி வளர்ச்சியடையத் தொடங்கிற்று. இது போலுள்ள தமிழ்ச் சொற்களில் நூற்றுக்குத் தொண்ணூறு விழுக்காடு சுட்டொலியடிச் சொற்களே. உண்மையில் சுட்டொலியடிச் சொற்றொகுதியே மொழியெனி னும் இழுக்காகாது. சுட்டொலிகள் தோன்றிய பின் சொல் வளர்ச்சியடைந்த மொழியைப் பலுக்குமொழி (Articulate Speech) என்பர். இதுவே மொழியெனச் சிறப்பித்துச்

சொல்லப்படுவது. ஆகவே சுட்டொலித் தோற்றம், முற்கால மொழியாகிய திருந்தா மொழிக்கும் பிற்கால மொழியாகிய திருந்திய மொழிக்கும் இடைப் பட்ட எல்லைக் கோடாகும்''

(முதல் தாய்மொழி பக். 17)

கி. மு. 50,000 ஆண்டுகளுக்குமுன் நிகழ்ந்த இத்தகைய மொழி வளர்ச்சியின் அடுத்த நிலை மொழியின் உரைநடையாக்க மென்றும், அவ்வுரைநடையாக்கம், கிளவியாக்கம், சொற்றொடராக்கம், என்னும் இரண்டு நிலையில் நடைபெற்றதெனவும் பாவாணர் கூறியுள்ளார்.

1. கிளவியாக்கம் என்னும் தலைப்பில் சொற்றிரிவு முறைகள், பொருள் திரிவு முறைகள் என இரண்டு வகையான நெறிமுறைகள் கூறப்படுகின்றன.

சொற்றரிவு நிகழவேண்டியதன் தேவையைப் பாவாணர் பின்வருமாறு உணர்த்துகின்றார்.

''மாந்தன் நாகரிகம் வளர வளரக் கருத்துக்கள் பல்குகின்றன. அடிப்படைக் கருத்துக்களினின்று வேறுபட்ட கருத்துக்கள் கிளைக்கும்போது, முன்னவற்றைக் குறிக்கும் சொற்கள் பல்வேறு வகையில் திரிபடைகின்றன. அல்லாக்கால் பலபொருளொரு சொல்லும் (Polysemy) பல்சொல்லொரு வடிவும் (Homonymy) மிக்குப் பொருள் மயக்கு ஏற்படும். அதைத் தடுக்கச் சொல் வடிவை மாற்ற வேண்டியுளது. சுள் என்னும் அடி பொருந்தற் பொருளிற் செள் என்று திரியாவிடின் சுடுதலையும் உறைத்தலையும் குறிக்குஞ் சொல்லோடு அதை மயக்க நேரும். செள் என்னும் வடிவினின்றே செண்டு, செண்டை செடி, செண்ணு, செரு, செறு, செறி, செற்றை, செழி, சேர் முதலிய சொற்கள் பிறந்துள்ளன. நுள் என்பது நெருங்கற் பொருளில் நள் என்று திரியாவிடின், கிள்ளுதலைக் குறிக்கும் சொல்லொடு அதை மயக்க நேரும். மேலும், ஆயிரக்கணக்கான கருத்துக்கட்கு வெவ்வேறு சொல்லும் சொல்வடிவும் வேண்டியிருப்பதால், வேர்ச் சொல்லும் அடிச் சொல்லும் பல்வேறு திரிபு கொண்டாலொழிய மொழி வளர்ச்சிக்கிடமில்லை.''

இவ்வடிப்படையில் முதலாவதாகச் சொற்கள் திரியும் முறைகளாகப் பதினேழு நெறிமுறைகளை எடுத்துரைக்கின்றார். அவை,

1. அறுவகைத் திரிபு (வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், தொகுத்தல், விரித்தல் என்பன)
2. முக்குறை (முதற்குறை, இடைக்குறை, கடைக்குறை என்பன)

3. மும்மிகை (முதன்மிகை, இடைமிகை, கடைமிகை என்பன)
4. பல்வேறு உயிர்த்திரிபு,
5. பல்வேறு மெய்த்திரிபு
6. பல்வகை ஈறுகள்.
7. வலியிரட்டல்.
8. போலி.
9. மூவகைச் சொற்கிடக்கை (தனிச்சொல், கூட்டுச் சொல், தொடர்ச் சொல் என்பன)
10. பொருட்கேற்ற ஒலியமைப்பு
11. மரூஉ.
12. முன்னொட்டுக்களும் அடைகளும்.
13. பின்னொட்டுக்களும் ஈறுகளும்.
14. புணர்ச்சி
15. ஓரியலமைப்பு.
16. ஒப்புமையமைப்பு
17. நானிலக் கருப்பொருட் சொற்கள் என்பன.

இவற்றின் விளக்கத்தையும் எடுத்துக்காட்டுகளையும் தமிழ் வரலாறு நூலில் (பக்கம் 70-100 வரை காணலாம்.

நானிலக் கருப்பொருட்களைப் பற்றிக் கூறுங்கால், ''தமிழ் ஐந்திணை மக்கட்கும் பொதுவாயிருக்கும் இஃதொன்றே தமிழரெல்லாம் ஓரினமென்றும், தொன்று தொட்டுத் தென்னாட்டிலேயே வாழ்ந்து வருபவரென்றும், தொழில் தழுவாது பிறப்பொடு தொடர்பற்ற ஆரியக் குலப்பிரிவினையால் தூய மாபெருந் தமிழினம் சின்னபின்னமாகச் சிதைவுண்டதென்றும், தெரிவிக்கப் போதிய சான்றாம்.'' (தமிழ் வரலாறு பக்கம் 100) என்று பாவாணர் தெளிவுறுத்துகின்றார்.

இரண்டாவதாகிய பொருட்டிரிவு முறைகள் (Semantic Changes) நான்கு வகையின என்றும், அவை,

1. உவமையாகு பெயர்,
2. மூவகைத் தகுதி வழக்கு (இடக்கரடக்கல், மங்கலம், குழூஉக்குறி என்பன)
3. ஓரினப்படுத்தலும் வேறினப் படுத்தலும்,
4. ஐவகைப் பொருள் திரிவு (வேறுபாடு, விரிபு, வரையறை சிறப்பக்கை, பொதுப்பிக்கை என்பன)

இவற்றின் விளக்கமும் எடுத்துக்காட்டுக்களும் தமிழ் வரலாறு நூலுள் (பக். 100-105) காணத்தக்கன.

இவ்வாறு கூறப்பட்ட நெறிமுறைகளின் அடிப்படையில் சொற்கள் பல்கிப் பெருகிய நிலையை அடுத்துக் கி. மு. 25000 ஆண்டளவில் சொற்றொடராக்கம் நிகழ்ந்ததென்றும், கி. மு. 15,000 ஆண்டளவில் செய்யுள் நடை தோன்றியதென்றும், கி. மு. 12000 ஆண்டளவில் படவெழுத்து, கருத்தெழுத்து, அசையெழுத்து, ஒலியெழுத்து என்னும் நால்வகை எழுத்து முறைகள் ஒன்றன் பின் ஒன்றாய்த் தோன்றினவென்றும், எழுதப் பெற்ற இலக்கியம் கி.மு. 11,000 ஆண்டளவிலும், இலக்கணம் கி. மு. 10,000 ஆண்டளவிலும் தோன்றின என்றும் பாவாணர் வரையறை செய்துள்ளார்.

உயிர் எழுத்துக்கள் தோன்றிய வகையாக,

1. அங்காத்தல் — அ, ஆ
2. சுட்டல் — ஆ, ஊ
3. மோனைத்திரிபு இ — எ, உ — ஒ
4. உணர்ச்சியொலி — ஐ
5. வாய்ச் செய்கை — அவ் — ஔ
6. குறுக்கம் — ஆ — அ, ஏ — எ.
7. ஒப்பொலி — ஊ (கூ) என்றும்,

மெய்யெழுத்துக்கள் தோன்றிய வகையாக,

1. ஒப்பொலி — க் (காக்கா) ண் (கிண்)
2. வாய்ச் செய்கை — வ் (அவ்) ம் (அம்)
3. இனத்தோன்றல் — ங் (ங்க), ன் (ன்ற)
4. புணர்ச்சி — ஞ் (பூ + சோலை — பூஞ்சோலை)
5. திரிபு — ந் (பொரும் — பொருந்) ர் (ல் — ர்)
6. முதிர்ச்சி — ழ் (ள — ழ) — ற் (ர — ற)
7. இயற்கை — த், ப் என்றும் கூறப்பட்டுள்ளன.

உயிரும் மெய்யும் தனித்தனியே ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றவில்லையென்றும் இருவகையும் ஒவ்வொன்றாய் அல்லது ஒன்றும் பலவுமாய் மாறிமாறியே தோன்றின என்றும்,

மெல்லினத்துள் மகரம் ஒன்றே தனித்துத் தோன்றியதென்றும் ஏனைய வல்லின மெய்யுடன் இணைந்தே தோன்றின வென்றும், யகரம் தோன்றுமுன் ஈகார இகரமும், வகரம் தோன்றுமுன் ஊகார உகரமும் தோன்றியிருத்தல் வேண்டுமென்றும், ள, ழ, ற, ன ஆகிய மெய்யெழுத்துகள் தோன்றுமுன் எல்லா உயிர்

எழுத்துகளும் தோன்றியிருக்கலாம் என்றும், உயிரும் மெய்யும் தோன்றிய முறையாகக் கூறப்பட்டது தோராய (உத்தேச) முறையே யென்றும், எழுத்துகளின் தோற்றம் பற்றிய சில குறிப்புகளைப் பாவாணர் தருகின்றார்.

இவையேயன்றித் தமிழ் இலக்கணக் கூறுகளின் தோற்றமும் சிறப்பும் விளக்கமுமாகத் தமிழ் வரலாறு நூலில் விரிவாகக் கூறியுள்ளார்.

இதுகாறுங் கூறிய செய்திகள் அனைத்தும், பாவாணரின் முதல் தாய்மொழி, தமிழ் வரலாறு The Primary Classical language of the world, ஆகிய முந்நூல்களிலும் காணப்படும் ஆராய்ச்சி முடிபுகளின் தொகுப்பே யாகும்.

## முதன் மொழித் திரிபு

பாவாணர் ஆராய்ச்சியின் தனிச்சிறப்புக் கூறுகளுள் ஒன்று உலக முதன் மொழியாகிய தமிழ் எவ்வாறு திரிந்து பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு மொழிகளாய் மாறியது என்று காட்டுவதாகும். பாவாணர் தவிர வேறு யாரும் இவ்வாறு காட்டியதில்லை என்பதும் போதரும்.

கி. மு. 20,000 ஆண்டுகளுக்கு முன்பிருந்து குமரிக்கண்ட முதன்மொழியாகிய தமிழ் திரியத் தொடங்கியது என்பதையும், அதற்குரிய கரணியங்களையும் பின்வருமாறு கூறுகின்றார்.

"குமரிக் கண்ட மாந்தர், தமிழின் ஐவகைச் சொன்னிலைக் காலத்திலும், மக்கட் பெருக்கம், இயற்கை விளைவுக் குறைவு, பஞ்சம், கொள்ளை, போர், பகை, வேற்றிட விருப்பு, துணிசெயல் வேட்கை, வணிகம், கடல்கோள் முதலிய பல்வேறு கரணியங்களால், கிழக்கும் வடகிழக்கும் வடக்கும் வடமேற்கும்! மேற்குமாகக் கூட்டங் கூட்டமாய்ப் பிரிந்து போயினர். வடகிழக்குச் சென்ற துரேனியர் (சித்தியர்) அசைநிலைக் காலத்திலும் புணர் நிலைக் காலத்திலும் வடமேற்கில் சென்ற ஆரியர் பகுசொன்னிலைக் காலத்திலும் பிரிந்து போனதாகத் தெரிகின்றது. நேர் வடக்குச் சென்றவர் தமிழின் முன்னிலைக் காலத்திலும் பின்னிலைக் காலத்திலும் பிரிந்தவராதலின் அவர் சென்றவிடமெல்லாம், பலவூர்ப் பெயர்கள் இன்றும் தமிழ்ச் சொல்லாயும் அவற்றின் திரிபாயுமிருப்பதுடன், அவர் மொழிகளும் தமிழொடு சிறிதும் பெரிதும் தொடர்புடையனவாயிருக்கின்றன.

(தமிழ் மொழி வரலாறு பக். 245, 246)

இக்கூற்றுக்குச் சான்றாகத் தெலுங்கநாட்டில் உள்ளசிற்றூர் (சித்தூர்) நெல்லூர் குண்டூர், ஒருகல் அல்லது ஓராங்கல்

(Warangal), ஒட்டரத்தில் (ஒரிசா) உள்ள கட்கம் (Cuttack) பம்பாயைச் சேர்ந்த வேளூர், வேளூரகம்) (Eliora), வேளாபுரம் (Velapur) வேள்கம், வேள், கிராமம், (Belgaum) வேள்பட்டி (Belhutti), பம்பாய் மண்டலத்திற்கு இருந்த பெயராகிய வேள் புலம், குச்சரத்தின் துவாரகை, உத்தர மண்டலத்தில் உள்ள மதுரை, பீகாரில் உள்ள பாதிரிப் புலியூர் (பாடலிபுரம்) வங்காளத்தில் உள்ள காளிகோட்டம் (Calcutta) ஆகிய இடப்பெயர்களைக் கூறுவதோடு ஊர், புரம், புரி என்னும் தமிழிடப் பெயர்கள் திரிந்தும் திரியாதும் இன்றும் வடநாட்டிற் பல இடங்களில் வழங்குவதையும் சுட்டிக் காட்டியுள்ளார். பாவாணர் காட்டியுள்ள இடப் பெயர்கள் அவர்தம் ஆய்வு முடிவுக்குச் சான்றாகுமாறு காட்டிய சிலவேயாதலால் இவ் இடப்பெயர் ஆய்வே ஒரு தனி ஆய்வாகச் செய்தற்குரியது என்பது நினைத்தற்குரியது.

இடப்பெயர்களைப் போலக் குலப் பெயர்களும் இத்தகைய சான்றாவதையும் பாவாணர் சுட்டுகின்றார். வாணியன் பணியா ஆனதும் எட்டி (செட்டி)—சேட்டு ஆனதும், சிபி கதிரவமரபினனாகக் கூறப் பெறுதலும் அவர் காட்டுவனவே. இவையேயன்றிப் பொதுவர் (இடையர்) யாதவ் என்றும் (Jadav) என்றும் மாறியது போலக் குலப் பெயர்கள் பலவும் இவ்வகை ஆய்வினால் எடுத்துக் காட்டத் தக்கனவாகும்.

"தமிழர் வடக்கே செல்லச் செல்ல தட்ப வெப்பநிலை மாற்றம் சோம்பல், புலவரின்மை, தமிழ்ப் புரவலரின்மை, புதிய சுற்றுச் சார்பு, தாய்நாட்டோடு தொடர்பின்மை முதலிய கரணியங்களால், தமிழ் திரிந்து கொடுந்தமிழ் எனப்பட்டது" என்றும், "கொடுந்தமிழ்ச் சொற்கள் பொதுவாய், பொருள் திரிந்த சொல், வடிவு திரிந்த சொல், ஒலி திரிந்த சொல், செந்தமிழில் வழக்கற்ற சொல், புதுச் சொல் என ஐவகைப் படும்" என்றும் கூறி (தமிழ் வரலாறு பக். 248) அவற்றிற்கான எடுத்துக் காட்டைத் தருவதுடன், "இவற்றைத் தமிழில் வழக்கற்றுத் தெலுங்கிற் புதுச் சொற்போல் தோன்றுவனவற்றிற்கெல்லாம் வேர்ச்சொல் குமரிநாட்டில் வழங்கின, என்று கொள்ளவும் இடமுண்டு" (தமிழ் வரலாறு பக் 249) என்றும் கூறியுள்ளார்.)

தமிழினின்றும் திரிந்த திரவிட மொழிகளை 1. வடதிரவிடம் அல்லது முன்னிலைத் திரவிடம் 2. நடுத்திராவிடம் அல்லது இடைத் திரவிடம் (3) தென் திரவிடம் அல்லது பின்திரவிடம் என மூவகையாகப் பிரிக்கின்றார், அம்மூவகைத் திரவிட மொழிகள் இவை இவை என்றும் காட்டுகின்றார்.

"விந்திய மலைக்கு வடக்கிலுள்ள இந்தி, வங்கம் முதலிய மொழிகளை வடதிரவிடம் அல்லது முன் திரவிடம் என்றும், அம்மலையை அடுத்த மராத்தி, குசராத்தி முதலிய மொழிகளை நடுத்திரவிடம் அல்லது இடைத் திரவிடம் என்றும், அவற்றிற்குத் தெற்கிலுள்ள தெலுங்கு கன்னடம் முதலிய மொழிகளைத் தென்திரவிடம் அல்லது பின் திரவிடம் என்றும் கொள்ளினும் பொருந்தும்" (தமிழ் வரலாறு பக். 251) என்று கூறுவதோடு, மராத்தியும் குசராத்தியும் ஒரு காலத்தில் ஐந்திரவிட (பஞ்ச திரவிட) மொழிகளுள் அடக்கிக் கூறப்பட்டமையையும் சுட்டு கின்றார்.

மூவகைத் திரவிடமொழித் திரிபுகளைப் பாவாணர் பின் வருமாறு விளக்குகின்றார்.

"முதற்காலத்தில் நெடில்களே தமிழில் வழங்கின, பின்பு, அவற்றில் குறில்கள் தோன்றின. ஏகார ஓகாரங்கள் பிந்தித் தோன்றிய நெடில்களாதலின், அவற்றின் குறில்களும் பிந்தியே தோன்றியுள்ளன. எகர ஒகரக் குறில் வரிகட்கு மிகைக் குறி யிருப்பதே இதற்குப் போதிய சான்றாகும். இவ்விரு குறில்களும் தோன்று முன்னரே, ஒரு சார்த் தமிழர் விந்திய மலையடுத்தும் அதற்கப்பாலும் குடியேறியிருந்திருக்கின்றனர். அவர் மொழியே பின்பு சூரசேனி, மாகதி, மகாராட்டிரம் முதலிய பிராகிருதங் களாகப் பிரிந்து போயிருக்கின்றது. அப்பிராகிருதங்களின் திரிபே, இந்தி, வங்கம், மராத்தி, குசராத்தி முதலிய இற்றை மொழிகள். இவற்றில் எகர ஒகர குறில்கள் இல்லை. ஆயின் இவற்றின் அடிப்படைச் சொற்கள் தமிழாயிருப்பதுடன், தொட ரமைப்பிலும் இவை தமிழையே முற்றும் ஒத்திருக்கின்றன. இவற்றிலுள்ள எண்களும் ஒருமை பன்மையென்னும் இரண்டே, இந்தியில் ஆண் பெண் என்னும் இருபாலே உள. இம்மொழி களில் வழங்கும் மரபுத் தொடர்களையும் பழமொழிகளை யும் நோக்கின், இவற்றைப் பேசும் மக்களின் முன்னோர் திரவிட ராயிருத்தல் வேண்டும் என்னும் முடிவிற்கே வரமுடியும்" (தமிழ் வரலாறு பக். 250)

தமிழர் அறிய, திரவிடமாகத்திரிந்த மொழிகளுள் முதலில் திரிந்தது தெலுங்கே என்றும் அது திரிந்த காலம் ஏறத்தாழக் கி.மு . 1500 என்றும் கூறுவதோடு, இடத்தால் தமிழ் வழங்கு மிடத்திற்கு முறையே அண்மையிலும் சேய்மையிலும் உள்ள திரவிட மொழிகளான தெலுங்கு மொழியிலிருந்தும் பிராகுவீ மொழிகளிலிருந்தும் மூவிடப் பெயர்கள் முதலான பல சொற்களை எடுத்துக் காட்டியும் தமிழுடன் ஒப்பிட்டுக் காட்டியும் தமிழின் தாய்மையை நிறுவுகின்றார்.

நடுத்திரவிட மொழிகளில் மராத்தி மொழியிலிருந்து எழுபத்தொன்பது சொற்களையும் மூவிடப் பெயர்களையும் தமிழுடன் ஒப்பிட்டும், மராத்திச் சொற்றொடர் சொன்முறைப் போக்கில் தமிழ்ச் சொற்றொடர்போன்றே இருப்பதையும் ஒப்பு நோக்காக எடுத்துக்காட்டி நடுத்திரவிடத்திற்கும் தமிழ் மொழிக்கும் உள்ள தொடர்பைக் காட்டுகின்றார்.

வடதிரவிட மொழிகளுள் இந்தியிலிருந்து நூற்றைம்பதுக்கும் மேலான பலவகைச் சொற்களையும், மூவிடப் பெயர்களையும், வேற்றுமைகளையும், குறிப்புச் சொற்களையும், பாலுணர்த்தும் ஈறுகள், பல்வேறு வகையான வினைச் சொற்களையும் சொற்றொடர் அமைதிகளையும், மரபுத்தொடர்களையும் பழமொழிகளையும்எடுத்துக்காட்டி இந்திக்கும் இந்தியின் மூலமொழிக்கும் தாயாக விளங்குவது தமிழே என்பதைஐயுறவுக்கும் இடமின்றி விளக்கிக்காட்டுகின்றார்.

வடதிரவிடத் திரிபே ஆரியக் கருநிலைக்கு இடமாய் உள்ளது என்பதைத் தமிழ், இந்தி மேலையாரியமொழிகள் ஆகிய மூவகை ஒப்பு நோக்குடனும் கிரையர்சனின் அரைத்திரவிட நடைமொழிகள் என்னும் பகுதியில் கூறிய செய்தியையும் எடுத்துக்காட்டி வடதிரவிட மொழிகள் ஆரியமாய் மாறியமையையும் சுட்டிக் காட்டுகின்றார்.

மேலை ஆசிய மொழிகளாகவும், ஆப்பிரிக்க மொழிகளாகவும், பண்டைத் தமிழ் திரிபுற்ற கரணியத்தைப் பாவாணர் பின்வருமாறு விளக்குகின்றார்.

"வடதிரவிடத்தை பேசிய வட நாவல மக்கள், வடமேற்காகச் சென்று மேலையாசியாவிற் சுமேரிய நாகரிகத்தைப் பரப்பியும் நண்ணிலக் கடற்கரை நாடுகளில் வாழ்ந்து ஆரிய நாகரிகத்திற்கு அடிகோலியும், பல்வேறு நாட்டினங்களாய்ப் பிரிந்து போயினர் என்பது, மொகெஞ்சோதரோ—அரப்பா நாகரிகத்திற்கும் சுமேரிய நாகரிகத்திற்குமுள்ள ஒற்றுமையாலும், நண்ணிலக் கடற்கரை நாட்டு மக்களின் பழக்க வழக்கங்கட்குமுள்ள ஒப்புமையாலும், மேலையாசிய மொழிகளிலும் வடஆப்பிரிக்க மொழிகளிலும் ஐரோப்பிய மொழிகளிலும் வழங்கும் தமிழ்ச் சொற்களாலும், அறியப்படும்.

"வடமேலையாப்பிரிக்காவைச் சேர்ந்த கானா மொழியிலும் வா, போ, தூக்கு முதலிய தமிழ்ச் சொற்கள் அடிப்படைச் சொற்களாய் அமைந்திருப்பது, மிகக் கவனிக்கத் தக்கதாம்" (தமிழ் வரலாறு பக். 271-72) என்று கூறி, கூ, கூவு, பிளிறு

எல்ல, எல்லா, இதோ, ஆன் (அங்கு) சப்பு, அம்மா, அப்பா, தாதை, மகன், குழவி, குருளை, குட்டி, குழந்தை, சிறுக்கன், பையன், தாலாட்டு, உதள், புல்லம், பூசை, கொத்தி, ஏழகம், களவன், சுறவு, நாகம், எல்லாம், ஏர், தாங்கல், பார், மெது, புகை, மைந்து, படி (உடம்பு) குரல், புதல், அல்-அன் இல் (எதிர் மறை முன்னொட்டும் இடைநிலையும்) அண் (மேல்) உம்பர், துருவ, அஃகு, இட்டு, எட்டு முதலான பல தமிழ்ச் சொற்கள் மேலையாரிய மொழிகளில் திரிபுற்றுக் காணுவதை எடுத்துக் காட்டியுள்ளார்.

The Primary Classical Language of the world—என்னும் ஆங்கில நூலில் தமிழர் அல்லது திரவிடரின் மேற்குத் திசைப் பரவல் (பக். 220–223) என்னும் தலைப்பில் பேரா.வி.ஆர். இராமசந்திரரின் The Orgin and Spread of Tamils என்னும் நூலிலிருந்து மேற்கோள் காட்டியபின், "திரவிடமொழிகளின் தோற்றத்தைப் பற்றித் திரு. இலாகோவரயின் முடிவு உண்மை யின் மறுமுனையினதாக இருப்பினும், 'திரவிடர் தோற்றமும் மேற்கும்' என்னும் அவர்தம் நூலில் தென்னிந்தியாவுக்கும் பண்டை மேலை நாடுகளுக்கும் இருந்த தொடர்புக்கான மொழி யியற் சான்றுகள் காட்டப்பட்டுள்ளன. (The Primary classical Language of the world பக்.223) என்று கூறியுள்ளார். அதே நூலில் மேலையாரிய உருவாக்கம் சொற்றொகுதி ஒப்புமை (Formation of west Aryan Glossarial Affinity) என்னும் பகுதி யில் தமிழுக்கு முதன்மைத் தன்மையுடன் நெருக்கமான மேலை யாரியச் சொற்களாக நானூற்று எழுபத்தைந்து சொற்களும் இரண்டாம் தன்மை நெருக்கமான சொற்களாக எண்பத்து மூன்று சொற்களும் மூன்றாம் தன்மை நெருக்கமான சொற் களாக முப்பத்து மூன்று சொற்களும் அவற்றின் மேலையாரிய வடிவங்களும். தமிழ் ஒலிக்குறிப்புச் சொற்கள் மேலையாரியத் தில் முழுச் சொற்களாக உள்ளமை, துணை வினைகள், விளி, இடைச்சொல், குறிப்பொலிச்சொல், முன்னொட்டு, பின்னொட்டு, இடைநிலை சுட்டு, முதலானவையும் பாவாணரால் எடுத்துக்காட்டி விளக்கப்பட்டுள்ளன. (The Primary classical Language of the world பக்.224—284.)

மூல முதன்மொழியிலிருந்து பிரிந்து பரவுங்கால் எந்த அளவில் பிரிந்து நிற்கிறது என்பதைக் கணிப்பதற்கும், மூல மொழித் தொடர்பை அறிதற்கும் பாவாணர் தரும் விளக்கம் வருமாறு,

''ஒரு பெருந்தாய்மொழி இயற்கையாகப் பரவும் போது, ஆயிரங் கல் தொலைவிற்கொருமுறை அதன் பழஞ் சொற்றொகுதியில் ஏறத்தாழ மூன்றிலொரு பங்கை இழக்கின்றது. அதோடு புதுச் சொற்களும் புதிய சொல்லமைதிகளும் இலக்கண அமைதிகளும் புகுகின்றன. இவ்வுண்மையை அடிப்படையாக வைத்து, ஒரு மொழி தன் மூல மொழியினின்று எவ்வளவு தொலைவு விலகியுள்ளதென்றோ, எத்துணைத் திரிந்துள்ளதென்றோ. கணிக்கவியலும். இதுவே சொன்மாற்றத் தொலைவு கணிப்பாம் [Glotto-Telemetry]

''ஐரோப்பிய ஆரிய மொழிகள் தமிழினின்று பேரளவே திரிந்துள்ளதற்கு, அவை விலகிச் சென்றுள்ள சேய்மை அளவே கரணியமாம். ஆயினும், இன்றும் அவற்றின் முன்னொட்டுக்களும் பின்னொட்டுக்களும் பெரும்பாலும் தமிழ்ச் சொற்களாகவே யுள்ளன. ''எ-டு கும்-கும்மல் -L. Cumulus, கும்-L.Cum

இக் கும் என்னும் சொல்லே, Com, Con, Col, Cor, Co என்று ஆங்கிலத்திலும் Sym, Syn, Syl என்று கிரேக்கத்திலும் ஸம் என்று வடமொழியிலும் திரிந்து ஆயிரக்கணக்கான சொற்களைத் தோற்றுவித்துள்ளது. தமிழ்க்கூறு ஆரியச் சொல்லமைப்பிற் கலந்துள்ளதென்பதற்கு, இஃதொன்றே போதிய சான்றாகும்.'' (தமிழ் வரலாறு பக். 273-74)

இது மட்டுமன்றி, தமிழில் உள்ள அம்மா என்னுஞ் சொல், அதே வரிவடிவில் அல்லது திரிந்த வடிவில், மலையாளம், தெலுங்கு, கன்னடம், எருகலம். நாய்கி, கைக்காடி, குறவம், கொரகம், துளுவம், குடகு, படவம், கோதம், இருளம், துடவம், கோண்டி, குரும்பம், பாளி, பிராகுவி, சிங்களம், இந்தி, சிந்தி, வங்காளம், மணிபுரி, Greek, Old High German, old Saxon, English, Finnish, Sanskrit, OstyaK, Hungarian, Hebrew, Mordvin, Turkish, Malayan, Tibetan, Arabic, Russian, Italian, Swahili, Portugese, Rumanian, French, Polish, Yiddish. Japanese, Koracha, Icelandic, Chinese ஆகிய நாற்பத்தெட்டு மொழிகளிலும்,

அவ்வாறே அப்பன் என்னுஞ்சொல், மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளுவம், பிராகிருதம், கொங்கணி, சிங்களம் Aramic, Chaldian. Syrian, Hebrew, NTGK, Greek, Latin English, Sum-Oceanian, Malenesian, Polynesian, Mon-Khemer, Munda. Sumarian, Akkadian. Egyptian ஆகிய இருபத்து மூன்று மொழிகளிலும் உள்ளன என்று செந்தமிழ்ச் சொற்பிறப்

பியல் அகரமுதலியின் முதன்மடல முதற்பகுதியில் காட்டியிருப் பதே, தமிழ உலக மொழிகளுக்கு அம்மையும் அப்பனுமாக உள்ளது என்பதைக் காட்டும்.

இவையேயன்றி உலக மொழிகளில் வழங்கும் சிலதுறைச் சொற்களுக்குத் தமிழிலேயே மூலங்காண முடியுமென்னும் கருத் துடன், ''கலங்கள் முதன் முதல் தமிழகத்திலேயே செய்யப் பட்டன. அதனால், பல கடல் துறைச் சொற்களும் கலத்துறைச் சொற்களும் மேலையாரியத்திலும் கீழையாரியத்திலும் தமிழாயி ருக்கின்றன'' (பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும்பக். 125) என்று கூறி; அவ்விருதுறைச் சொற்களையும் எடுத்து விளக்கியுள் ளார்.

பாவாணர் வரைந்த முதற்கட்டுரை 'மொழியாராய்ச்சி' என்பது. அக் கட்டுரை செந்தமிழ்ச் செல்வி [சிலம்பு 9 பரல் 6-சூன்-சூலை 1981] இல் வெளிவந்தது. அக்கட்டுரை வெளிவரு முன் அதைப்பற்றிய சில செய்திகளைப் பாவாணர் அவர்கள் திரு. வ. சுப்பையா அவர்களுக்கு வரைந்த இரு மடல்களில் காண லாம். 5.7.31இல் எழுதிய அட்டையில், 'ஆங்கிலஞ் சென்ற தமிழ்ச் சொற்கள் 500க்கு மேல். அவற்றுக்கெல்லாம் விதிகள் முதற்றாய் மொழி [The classica Prima]யிற் காணப்படும்'' ''Bandy-பண்டி, Cash-காசு, Bat-மட்டை, Portia-பூவரசு Moringa-முருங்கை என்ற சொற்களையும் சேர்த்துக் கொள்க'' என்றும் 16.7.1931 இல் எழுதிய மடலில், ''ஆங்கிலத் தமிழ்ச் சொற்களை வெளியிட் டீர்களா? இல்லையா? வெளியிடாவிட்டால் வெகு பத்திரமா யிருக்கட்டும்'' ''அச்சிடு மட்டும் என் கைப்படிகள் பிறர்க்குத் தெரியாதிருக்கட்டும்'' என்றும் எழுதியுள்ளார். அக்கட்டுரையில்

''எல்லாக் கிளைகட்கும் மூலமான ஓர் அடிமரம் இருப்பது போல எல்லா மொழிகட்கும் மூலமான ஒரு தாய்மொழியு மிருத்தல் வேண்டும். உலகத்திலுள்ள மக்களெல்லாம் ஒரு தாய் வழியினராதலின் அவர் வழங்கும்மொழிகளும் ஒரு தாய் வயிற்று வழியிலாதல் வேண்டும்.

''உலகத்தின் மக்கள் முதன் முதல் தோன்றினவிடம் கி. மு. 2000 ஆண்டுகட்கு முன் இந்துமகா சமுத்திரத்தில் அமிழ்ந்து போனதும் தலைச் சங்கமிருந்ததுமான குமரி நாடே. ஆத்திரேலியா, தென்னிந்தியா, தென்னாப்பிரிக்கா என்ற மூன்றும் ஆதியில் நிலத்தாலிசைந்திருந்தனவென்று மேனாட்டுப் பண்டிதர்கள் கண்ட உண்மையே இதற்குப் போதிய சான்றாம். ஆகவே, மக்கள் முதன் முதற் பேசிய மொழி தமிழே யாதல் வேண்டும்.

''எல்லா மொழிகளும் இயற்கை செயற்கையென இருபாலா யடங்கும். இவற்றுள் தமிழ் ஒன்றுமே இயற்கை; ஏனையவெல் லாம் செயற்கை. ஆதலான் தமிழ் இயன்மொழி (Primitive Language) என்றும் ஏனைய திரிமொழி (Derivative Languages) என்றும் கூறப்படும். எல்லா மொழிகட்குமுள்ள பெரும்பாற் சொற்களைப் பகுதிப் பொருளுடன் இயற்கை வடிவில் வழங்குவது தமிழேயென்று மொழி நூலால் (Philology) விளங்குகின்றது. அவற்றுள் ஆங்கிலம் (English) கிரேக்கு (Greek) லத்தீன் (Latin) என்ற மும்மொழிகளிலும் சென்று வழங்கும் தென் சொற்கள் ஆயிரக் கணக்கின வென்பதை ஐநூற்றுக்கு மேற்பட்டவற்றால் வெள்ளிடை மலை போல் தெள்ளிதிற் காட்டுதும்'' என்று கூறி, Abba—அப்பன் என்பது முதல் Zenith — சென்னி என்பது வரை அறுநூற்றிரண்டு சொற்களை எடுத்துக் காட்டியுள்ளார். (புலவர் மணி இரா. இளங்குமரனார் அவர்கள் இக்கட்டுரைச் சொற்களின் எண்ணிக்கை 598 என்று 'தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்' (பக். 125) என்னும் நூலில் குறித்துள்ளார்கள். தமிழ்ச் சொற்களின் அடிப்படையில் யான் கணக்கிட்ட எண்ணிக்கை 602 ஆகும்.) அதைத் தொடர்ந்து வடமொழிச் சென்ற தென் சொற்கள் என்றும் பிற தலைப்புகளிலும் பாவாணர் வரைந்த நூற்றுக்கணக்கான கட்டுரைகளில் இக் கருத்தை வலியுறுத்தியுள்ளார்.

பேரா. தெ. பொ. மீ. தமிழுக்கதிகாரியா? என்னும் தலைப்பில் தென்மொழி (3:1 பிப். 65)யில் கட்டுரைத் தொடர் வரைந்தார். அதில், ''சுதேசமித்திரன் (தன்னாட்டு நண்பன்) என்னும் நாளிதழ் தொடர்பில் சென்ற விளக்கணி தீபாவளி விழா வன்று வெளிவந்த சிறப்புமலரை அண்மையில் தற்செயலாகப் பார்க்கநேர்ந்தது. அதில், 'தமிழில் பிறமொழிச் சொற்கள்' என்றொருகட்டுரை பேரா. தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரால் வரையப் பட்டுளது. எனக்கு ஏற்கனவே அவர்தம் ஆரியச் சார்பும் தமிழறிவுத் திறமும் தெரியுமேனும் அக்கட்டுரையைக் கண்ட வுடன், இதுதானா இத்தகைய கட்டுரை வெளிவரற்கேற்ற சமையம் என்னும் வினா என் உள்ளத்தெழுந்து வருத்தியது'' என்று தொடங்கி, தெ. பொ. மீ. அவர்களுடைய கட்டுரைக் கருத்தை மறுத்தும் கன்னல் சுருங்கை ஓரை முதலான சொற்கள் தமிழே என்றும் அவை கிரேக்கத்திற் சென்று பரவினவென்றும் ஆய்ந்து காட்டியுள்ளார். அவை மட்டுமன்றிக் கிரேக்கத்தில் நூற்றுக்கணக்கான வேறு சொற்களும் தமிழாயுள்ளன என்று கூறி 173 சொற்களை எடுத்துக் காட்டியுள்ளார் (வண்ணனை மொழி நூலின் வழுவியல் பக். 59-63). இவ்வாறே தமிழ்ப்

பொழிவில், இல்க்கணம் இலக்கணம், உத்தரம் தக்கணம், முதலான சொற்கள் தமிழே யென்றும் வரைந்தார். பிற இதழ்களிலும் இத்தகைய மறுப்புக் கட்டுரைகள் பலவற்றைப் பாவாணர் எழுதித் தமிழ்ச் சொற்கள் பிற மொழிகளில் சென்று பரவியுள்ளமையை எடுத்துக் காட்டியுள்ளார். புறநானூற்றுச் சொற்பொழிவுகள் (1944) என்னும் நூலில் புறநானூறும் மொழியும் என்னும் சொற்பொழிவுக் கட்டுரையில் மேலையாரியம் சென்ற புறநானூற்றுச் சொற்கள் 81 என்றும் அவர் எடுத்துக்காட்டியுள்ளார். அதே ஆண்டில் அவர் எழுதிய திரவிடத்தாய் என்னும் நூலில் மலையாளம், கன்னடம், தெலுங்கு, துளு ஆகிய திரவிட மொழிகளுக்குத் தமிழே தாய் என்பதையும் ஐயுறவிற்கிடமின்றி நிறுவியுள்ளார். தென்மொழி இதழில் (1:7) வடமொழி வரலாற்றுச் சுருக்கம், சமற்கிருத வாக்கம் (சொற்கள்) சமற்கிருதவாக்கம் (எழுத்து) ஆகிய தொடர் கட்டுரையிலும் பின்னர் வெளியான வடமொழி வரலாறு (1967) நூலிலும் வடமொழி எவ்வாறு தமிழுக்குக் கடன்பட்டுள்ளது என்பதையும், வேதமொழி, மேலையாரியத் திற்கினமானதும் திரிபானது மென்றும், அம்மை, இரும்பு, உகை, நாவாய், பொறு, வலி முதலாயின மேலையாரியத் தமிழ்ச் சொற்கள் என்றும், ஆணி, கடு, சுவணம் முதலாயின வேதத் தமிழ்ச் சொற்கள் என்றும், மீன், முகம் முதலாயின சமற்கிருதத் தமிழ்ச் சொற்கள் என்றும், வடமொழியின் இலக்கணக் கூறுகளிற் பல தமிழிற்குரியவை யென்றும், வடமொழிச் சொற்றொகுதியில் ஐந்திலிரு பகுதி தமிழ் என்றும் முடிவு செய்கின்றார்.

வேதத்திற் காணும் தமிழ்ச் சொற்களாக நூற்றி முப்பத்தைந்து சொற்களையும், ஆரிய மொழிகள் மேற்கிலிருந்து கிழக்காகப் பரவியபோது அடைந்த படிமுறை மாற்றத்தைக் காட்டும் வகையில் முப்பத்தொன்பது தமிழ்ச் சொற்களையும் அவை முறையே தியூத்தானியம், இலத்தீனம், கிரேக்கம், சமற்கிருதம் ஆகிய மொழிகளில் அடைந்த மாற்றத்தையும் The Primary Classical Language of the World (பக். 286-291) என்னும் நூலில் எடுத்துரைத்துள்ளார்.

செந்தமிழ்ச் செல்வி 52:1 முதல் 54:5 வரை தமிழின் தலைமையை நாட்டும் தனிச் சொற்கள் என்னும் கட்டுரைத் தொடரில், உம்பர், உய், உருளை, அரத்தம், கண், காந்து, காலம், கும்மல், அத்தி, எல்லா, கலித்தல், மகன், மன், தெய்வம், புகா, பள்ளி, பாதம், புரி, பொறு, பகு, பேசு, திரும்பு ஆகிய 22 சொற்களையும், 54:3, 54:11 இதழ்களில்

தமிழின் தலைமையை நாட்டும் தொகுதிச் சொற்கள் என்னும் கட்டுரைத் தொடரில் பூனை, சுள் ஆகிய இரு சொற்களையும் பாவாணர் ஆராய்ந்தெழுதித் தமிழின் தலைமையையும், தமிழ்ச் சொற்கள் பிறமொழிகளில் சென்று பரவியுள்ளமையும் காட்டியுள்ளார்.

பாவாணர் தம்முடைய மொழியாராய்ச்சி நூலான ஒப்பியன் மொழி நூலின் முகவுரையில், ''இந்நூல் திரவிடம், துரேனியம், ஆரியம், சேமியம், ஆத்திரேலியம் ஆப்பிரிக்க அமெரிக்க முது மொழிகள் என ஐந்து மடலங்களாகத் தொடர்வது. அவற்றுள் இப் புத்தகம் முதன்மடல முதற்பாகம் தமிழைப் பற்றிக் கூறுவது. இரண்டாம் பாகம், பிற திரவிட மொழிகளைப் பற்றிக் கூறும். இவை தமிழில் வெளிவந்தபின் ஆங்கிலத்திலும் வெளிவரும்'' (ஒப்பியன் மொழி நூல். பக். 11) என்று கூறியதற்கேற்ப, தமிழின் உலக முதன்மையையும், அதிலிருந்து முகிழ்த்தும் கிளைத்தும் படர்ந்தும் உள்ளவையே பிறமொழிகள் என்னும் உண்மையையும் நிலைநாட்டுவதே தம் வாணாள் ஆராய்ச்சியாகத் திட்டமிட்டிருந்தார் என்பது புலனாகும்.

இவற்றைத் திரட்டியும் தொகுத்தும் வகுத்தும் ஒப்பிட்டும் ஆராய்ச்சி நடத்துதற்குத் தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகத்தில் தனித் துறையை நிறுவினால் அன்றி இச்சிறு பொழிவு நூலில் அவையனைத்தையும் காட்டவியலாது. எனவே சில செய்திகள் மட்டுமே சுருக்கமாகக் கூறப்பெற்றன. அவ்வாறே அடுத்துக் கூறப்பெறும் ஒப்பாய்வும், பாவாணர் மொழியாராய்ச்சி வளர்ச்சியும், தமிழின் முதன்மையை நிலைநாட்டத் துணையாகும் பிற சான்றுகளும் தனித்தனி ஆராய்ச்சியாக மேற்கொள்ளப் படுதற்குரியவெனினும், பொழிவு நூலின் முழுமையைக் கருதிச் சுருக்கமாகவேனும் சில செய்திகளைக் கூறுதல் இன்றியமையாததாகின்றது.

# சா. உலக முதன்மொழி ஆராய்ச்சிகள் பற்றிய ஒப்பீடு

1) மாகறல் கார்த்திகேயனாரும் பாவாணரும் வேங்கட கிருட்டினரும் தமிழே உலக முதன்மொழியென்றும், ஞானப் பிரகாச அடிகளார் தமிழ் உலக முதன்மொழியினின்று தோன்றி யதென்றும் முடிவு கொண்டார்களென்பதும், அதற்கு வெவ்வேறு வகையான ஆய்வு முறைகளைக் கையாண்டனர் என்பதும் முன்னர்க் கூறப்பட்டன, இவர்கள் தம் ஆராய்ச்சிகளுக்குள் காணப்படும் ஒற்றுமை வேற்றுமைகளிற் சிலவற்றை ஒப்பீட்டு முறையிற் காணலாம்.

மாகறலார் மொழியின் கூறுகளை இயற்கையானவை. செயற்கையானவையென்றும், இயற்கை ஒலிகள், செயற்கை ஒலிகள் என இரு திறத்தான எழுத்துக்கள் என்றும் வடமொழி முதலான மேலையாரிய மொழிகள் மொழிமுதல் எழுத்து, மெய்ம் மயக்கம், மொழியிறுதி எழுத்துக்கள் என்னும் இலக்கண வரையறைகள் இல்லாதவையாதலால் அவை செயற்கையானவையென்றும், மலையாளம் இயற்கைத் தன்மை மிகுந்ததென்றும், தெலுங்கு செயற்கைத் தன்மை குறைந்த தென்றும் தமிழொன்றே இயற்கையாகவும் செயற்கையாகவும் ரம்பிய முழுமுதல் மொழியென்றும் சில முடிவுகளைக் கண்டார். தமிழர் தோன்றிய குமரிக் கண்டத்தைப் பற்றிய மேற்கோள்களை எடுத்துரைத்து அவற்றை அவர் ஏற்றார் என்பதும் முன்னர்க் கூறப்பட்டது.

பாவாணரும் குமரிக்கண்டக் கொள்கையை ஏற்றார். பிறர் ஆய்வு முடிவுகளை மேற்கோள் காட்டியதுடன் அமை யாது, குமரிக்கண்டமே மாந்தன் பிறந்தகம் என்பதற்கும் தமிழரும் தமிழும் தோன்றிய இடம் குமரிக்கண்டமே என்ப தற்கும் தாமாக எண்ணிபாராய்ந்து கண்ட இருபதுக்கு மேற் பட்ட கரணியங்காட்டினமையும் முன்னர்க் கூறப்பட்டது. அதுமட்டுமன்றி, தம் சொல்லாய்வுப் போக்கில், இறந்துபட்ட

சொல் வடிவங்களை அறிந்து ஆங்காங்கே அவற்றைக் குறித்ததுடன், ''இறந்துபட்ட சொற்களெல்லாம் பிறைக்கோட்டுள் இடப்பட்டுள. ஒரு பொறியறிஞன் ஒரு பொறியில்லாத உறுப்பைக் கண்டு கொள்வது போன்றே, ஒரு மொழியறிஞனும் அம்மொழியில் இறந்துபட்ட சொற்களிற் சிலவற்றை அவற்றோடு தொடர்புள்ள பிற சொற்களின் துணைகொண்டு அறிய வியலும் என்க'' என்று கூறியமையையும் அறியலாம். எனவே, மாகறலார் குமரிக்கண்டக் கொள்கையை ஓர் அடிப்படையுண்மை என்று பிறர் ஆராய்ச்சியால் ஏற்றார் என்பதையும் பாவாணரும் அவ்வாறு ஏற்றது மட்டுமன்றித் தம் ஆராய்ச்சியாலும் அக்கொள்கையை வலுப்படுத்தினார் என்பதையும் காணலாம்.

மாகறலார் இயற்கை ஒலிகள் செயற்கை ஒலிகள் என்று தமிழ் எழுத்துகளைப் பிரித்தமையைப் போலப் பாவாணர் பிரிக்கவில்லை; சில ஒலிகள் முன்னர்த் தோன்றியவை சில பின்னர்த் தோன்றியவை என்று மட்டுமே கொள்கிறார்.

மொழியின் இயற்கைக் கூறு செயற்கை கூறு என்று மாகறலார் கூறியுள்ளதைப் போன்று, மொழியின் இயற்கை நிலை, செயற்கை நிலை என்று இரு நிலைகளைப் பாவாணரும் கூறுகின்றார்.

மொழி முதல் எழுத்து, மெய்ம்மயக்கம், மொழியிறுதி எழுத்து ஆகிய இலக்கண அமைப்பை மட்டும் கொண்டு தமிழின் இயற்கைக் கூறு என்றும், இயற்கைக் கூறுகளுக்கிடையே செயற்கைக் கூறுகளும் நாப்பயிற்சி முதலான முதிர்ச்சி கருதிச் சேர்க்கப்பட்டன என்றும் மாகறலார் கருதினார். பாவாணரோ இத்தகைய நிலை யாது என்று எதையும் கூறாமல், மாந்தன் மொழியற்ற நிலைக்கும் மொழி வளர்ச்சியுற்ற நிலைக்கும் இடையே இயல்பாகத் தோன்றிய மொழிகளையே இயற்கை மொழி (Inarticulate speech) என்று கூறியுள்ளார். எனவே, இயற்கை செயற்கைஎன இருவரும் குறித்த வெல்லாம் சொல்லொப்புமையேயன்றிப் பொருளொப்புமையின் பாற்பட்டவல்ல என்பதைத் தெளிவாக அறியலாம்.

இயற்கை ஓசையாகச் 'சு' என்னும் ஒலியையும், இயற்கைப் பொருளாகக் கதிரவனையும் கருதிய தமிழர் 'சுல்' என்னும் அடிச் சொல்லையும், கதிரவனின் பண்புகளையும், குறிஞ்சிக் கருப்பொருளான மூங்கிலையும் அடிப்படையாகக் கொண்டு சொற்களைப் பெருக்கிக் கொண்டனர் என்பது மாகறலார் கண்ட முடிபு.

பாவாணர் காட்டும் மொழிவளர்ச்சி நிலைகளும் வேர்ச்சொல்லின் அடிப்படைகளும் முற்றிலும் வேறாக உள்ளன என்பதை அவர்கள் தம் நூல்களைச் சிறிது ஊன்றிக்கற்ற அளவிலேயே அறியலாம்.

முதலில் தோன்றிய கல்வி இசையே என்று மாக்றலார் கூறினார். ஆனால் பாவாணரோ,

''முந்தியல் மாந்தர் மொழி எல்லாம் இசைப்பாட்டாகவே தோன்றின என்பது எசுப் பெர்சன் கருத்து. அது தவறாம். உணர்ச்சி விஞ்சிய காதல், இன்பம் வெற்றி, மகிழ்ச்சி, துன்பம், முதலிய மன நிலைகளிலேயே முந்தியல் மாந்தர் — அவருள்ளும் இசைவுணர்ச்சியும் மொழியாற்றலும் மிக்கவரே — இசை மொழி வாயிலாய்த் தம் கருத்தை வெளியிட்டனர். இக்காலத்தும் இன்ப துன்ப வுணர்ச்சி விஞ்சியபோது, தத்தம் அறிவு நிலைக்கேற்ப இசைப்பாட்டாகவும் செய்யுளாகவும் தம் கருத்தைச் சிலர் வெளியிடுதல் காண்க. மேலும் பொருளும் ஒழுங்கு மற்ற ஒருசில இசையொலித் தொகுதிகளினின்று வெவ்வேறு பொருளும் இலக்கணவொழுங்குமுள்ள பெயர் வினையிடைச் சொற்களும், மூவிடப் பெயர்களும் அவற்றின் திரிபான இருதிணை ஐம்பால் மூவிட ஈறுகளும் வேற்றுமை உருபுகளும் காலவிடை நிலைகளும், பிறவும், அமைந்தனவென்றல் உத்திக்குப் பொருந்தாத கூற்றாம்.

''உரை, செய்யுள் (அல்லது பாட்டு) என்னும் இருவகை மொழி நடையுள் முதலில் தோன்றியது முன்னதே. அதுவும் தனித்தனிச் சொல்லாகவே தோன்றிற்று. ஆகவே, சொல்லே மொழியலகாம் (Unit of Speech)'' என்று ஆட்டோ எசுப்பர் சனின் பாட்டொலிக் கொள்கை (MusicalTheory)யை மறுப்பதுடன், மாகறலாரையும் மறுத்துரைத்தமை யறியலாம். (தமிழ் வரலாறு. பக் : 58)

சொல் முதன்மையிலும் இருவரும் வேறு துருவங்களாக நின்று வேறுபடுகின்றனர் என்பதை அவர்தம் கூற்றுகளாலேயே அறியலாம்.

''கண் முதலிய பொறிகளாலும் மனத்தாலும் அறியப்படும் பெயரே முதற்சொல்லாம். அப்பெயரினின்றே வினைகள் பிறந்தன. இடைச் சொல்லும், உரிச்சொல்லும், அவ்விரண்டனது சார்பிற்றோன்றும்'' (மொழிநூல் பக் 111) இது மாகறலார் கருத்து.

''முதற்காலத்தில் இலக்கண வகைச் சொல் பெயர், வினை, இடை என மூன்றாகவே இருந்தன. இதுவே எல்லா மொழிக்கும் பொதுவான அறிவியன் முறைப் பாகுபாடாம்.

''இலக்கணவகைச் சொல் மூன்றும் இயல்பாகத் தோன்றிய முறை, பொதுவாக நோக்கின், இடை, வினை, பெயர் என்பதாகும்.

''உணர்ச்சியொலிகளும் விளியொலிகளும் குறிப்பொலிகளும் மாந்தன் வாயில் முந்தித் தோன்றியவையாகும். இவை இடைச் சொல் என்பது தெளிவு. சப்பு, துப்பு, விக்கு, முக்கு, விம்மு, தும்மு, இசி, சிரி முதலிய முந்தியற் சொற்கள் வினையாகத் தோன்றிப் பின்பு பெயருமாயின.

''சில இடைச் சொற்கள் வினையாகிப் பின்பு பெயரா கின்றன'' (தமிழ் வரலாறு பக். 130)

இது பாவாணர் கருத்து.

மாகறலார், பாவாணர் ஆகிய இருவரும் குமரிக்கண்டக் கொள்கையையும், எல்லாச் சொல்லும் பொருள் குறித்தனவே என்னும் இலக்கண நூன்முடிபையும், உலக முதன்மொழி என்னும் முடிவையும் ஏற்றவர்கள் என்னும் ஒற்றுமை தவிரச் சிறந்த வேறு ஒற்றுமையை இருவர்தம் ஆராய்ச்சிப் போக்கிலும் காணமுடியவில்லை என்பது போதரும்.

ஆய்வுமுறையில் இத்தகைய அடிப்படை வேறுபாடிருந்தும், மாகறலார்க்குக் காலத்தால் பிந்தியவரான பாவாணர், முன்ன வரைப் பற்றித் தம் நூல்களில் குறை நிறையாக ஏதும் கூறாது விட்டமைக்கு ஒத்த முடிவையுடைய மாகறலாரை மறுப்பதன் மூலம் அவர்தம் முடிவையும் மறுப்பதாகத் தமிழ்ப் பகைவரால் திரித்துத் தமிழ்க்குடியை இரண்டு படுத்த முடியும் என்பதாலும் அதனால் தம் கையால் தம் கண்ணைக்குத்திக் கொண்டது போலவும், தம் அணியை எதிர்த்துப் பந்து வீசுவதைப் (Putting Same Side goal) போலவும் ஆகுமென்று கருதியே மாகறலாரை எவ்விடத்தும் அவர்தம் பெயரைக் கூறி மறுக்காமல், தம் ஆராய்ச்சியிற் கண்ட முடிவுகளை மட்டுமே வலியுறுத்தி அமைந் தார் போலும் என்று கருத வேண்டியுள்ளது. இங்குக் கூறியது ஞானப்பிரகாசர் — பாவாணர் ஆராய்ச்சி ஒப்பீட்டுக்கும் ஏற்ற அளவு பொருந்தும்.

2. ஞானப்பிரகாச அடிகளார் 1938-இல் வெளியிட்ட சொற்பிறப்பு — ஒப்பியல் தமிழ் அகராதியிலும் தமிழ்ப் பொழி வில் வெளியான சில கட்டுரைகளிலும் காணப்படும் அவர்தம் மொழியியல் ஆராய்ச்சி முறையும் முடிபும் முன்னர்க் கூறப் பெற்றன. அடிகளார் அ, உ, இ, எ என்னும் நான்கு சுட்டுக்

களுடன் ''விளக்குகின்றவை எனும் அர்த்தமுள்ள வியஞ்சனங்கள்'' சேர்ந்து அடிச் சொற்களாகின்றன என்றும், அவ்வாறு தோன்றும் தமிழ்த் தலையடிகள் 48 என்றும் கூறினார்.

பாவாணரும் சுட்டெழுத்தையும், அடிச் சொற்களையும் ஒப்பினார். பாவாணர் சுட்டெழுத்துகளாக ஆ, ஈ, ஊ, ஓ என நான்கென்றும், ஓ உயரச் சுட்டென்றும் ஓ — ஊ என மாறி உயர்வுக் கருத்தைக் குறிக்குமென்றும் தம் ஒப்பியன் மொழி நூலிற் (பக். 277) கூறினாலும், அடுத்து வந்த பின்னூல்களிலும் கட்டுரைகளிலும், சுட்டெழுத்துக்களை அ, இ, உ, என மூன்றென்றே கூறினார். அடிகளார் தலையடிகள் என்று 48 என்பதைக் கூறினார். பாவாணர் முதலடி வழியடி என அடிச் சொற்களை இரண்டாகப் பிரித்தார். உகரத்தை முதலாகக் கொண்டதை முதலடி எனவும் பிற உயிர் மெய்களை முதலாகக் கொண்டதை வழியடி எனவும் வேறுபடுத்தினார். அதன்படி உல் என்பது முதலடி; குல் என்பது வழியடி. இவ்விருவகை அடிச் சொற்களையும் பெருவேர்ச் சொல் என்றும் அவற்றிலிருந்து தோன்றிக் கிளைத்தவை சிறுவேர்ச்சொல் என்றும் கண்டார். அவற்றின் எண்ணிக்கையையும் பின்வரும் அவர்தம் கூற்றால் அறியலாம். ''வேர்ச்சொற்கள் சிறுவேரும் பெருவேரும் என இருவகைய. அவற்றுள் முன்னவை பன்னூற்றுக் கணக்கின பின்னவை ஒரு நூற்றிற்குட்பட்டவை. இவ்வுண்மை என் கடந்த அரை நூற்றாண்டு மொழியாராய்ச்சியிற் கண்டது'' (வேர்ச் சொற் கட்டுரைகள் முகவுரை பக். 11)

அடிகளார் கூறிய சுட்டெழுத்துகள் பின்வரும் பொருண்மைய

அ — அண்மை; உ — சேய்மை; இ — கீழுறல்; எ — மேலுறல்

பாவாணர் கூறும் சுட்டெழுத்துகளின் பொருண்மை பின் வருமாறு.

அ—சேய்மைச் சுட்டு

இ—அண்மைச் சுட்டு; அண்மை, பின்மை, இழுத்தல் ஆகிய பொருளன.

உ—முதன்மைச் சுட்டு,

தோன்றுதல், முன்மை, முன்செல்லல், நெருங்குதல் பொருந்துதல், வளைதல், துளைத்தல், துருவுதல் ஆகிய எண் பொருளன.

சுட்டெழுத்துகளின் பண்டைய வடிவம் நெடிலே என்றும் அவை குறுகிக் குறிலாயின என்றும் பாவாணர் கூறினார். ஆயின்

ஞானப்பிரகாச அடிகளார் இவ்வாறு கூறாமையினால் குறிலையே முந்திய வடிவாகக் கொண்டார் என்பதை அறியலாம். தவிர அவற்றின் பொருளாக இருவரும் கொண்டவை எத்தகைய பெருத்த வேறுபாட்டினைக் குறித்தன என்பதையும் அறியலாம்.

இதுபற்றிய முகாமையான ஒரு வேறுபாடும் உண்டு. அ, உ, இ, எ, சுட்டுகள் முறையே அண்மை சேய்மை கீழுறல் மேலுறல் ஆகிய பொருளை எவ்வாறு குறித்தன என்பது பற்றி ஞானப் பிரகாச அடிகளார் ஏதுங் கூறவில்லை. ஆயின், பாவாணரோ 'அ' அங்காத்தலாலும் 'உ' இதழ் குவிவாலும் 'இ' பக்கவாட்டிற் செல்லுதலாலும் முறையே சேய்மை முன்மை அண்மையிடங் குறித்தன என விளக்கியுள்ளார். தமிழ் இலக்கண நூல் அ, இ, உ இவற்றின் பிறப்பைக் கூறுகின்றனவேயன்றி அத்தகை இதழ் அசைவால் அவ்விடங்களைச் சுட்டின என்று கூறவில்லை. எனவே அ இ உ அவ்வப் பொருளில் சுட்டாதலை உத்திக்குப் பொருந்துமாறு விளக்கியவர் பாவாணர் என்பதை உணர்தல் வேண்டும்.

அடிகளார் குறித்த அடிச் சொற்களிற் சிலவும், அவர் கூறும் சொல்லாக்க நெறிமுறைகளிற் சிலவும் தமிழ் இலக்கண நெறிகளுக்கு மாறுபாடாக அமைந்துள்ளமை முன்னரே சுட்டப் பட்டது. பாவாணர் கூறியவற்றில் இத்தகைய குறைபாடுகளைக் காண முடியவில்லை.

இருவரும் கூறியுள்ள சொல்லாக்க நெறிமுறைகளும், பெருத்த பல வேறுபாடுடையவை. அவற்றுள் ஒன்று, அடிகளார் 'இடுகுறியாக்கம்' என்பதை ஒப்புதலும் ஒரு நெறியாகச் சொல்லுதலும், பாவாணர் இடுகுறியை ஒப்பாமையும் நெறியாகக் குறியாமையும் ஆம்.

''தமிழ் அடிகள் உள்ளபடி மக்களுள் இயல்பாய் எழுந்த ஒரு ஆதிப் பாஷையோடு பிணைப்புண்டனவாய்க் கிடத்தல் எமது ஆராய்ச்சியால் இப்போது வெளிப்பட்டிருக்கிறது'' (தமிழ்ச் சொற்பிறப்பு-ஒப்பியல் அகராதி பக். XXI) என்று அடிகளார் கூறுவதனால், தமிழை அவர் முதன் மொழியாகக் காண வில்லை என்பதைக் காட்டும். தவிர, பாவாணர் கூறும் இயற்கை மொழிநிலை செயற்கை மொழிநிலை என்னும் முதன்மொழித் தோற்ற நிலைகளும், அதன் திரிபு நிலைகளும், திரிந்ததற்கான கரணியங்களும், குமரிக்கண்டக் கொள்கையும் பிறவும் அடிகளாராற் சிறிதும் கூறப்படாதவையாகத் தோன்றுகின்றன.

இவற்றால் ஓர் உண்மையை அறிந்து கொள்ளலாம். மாகறலார் முதன் முதலில் மொழிநூலை எழுதினார் என்னும் பெரு

மையுடையவராயினும், ஞானப்பிரகாச அடிகளார் முதன் முதலில் சொற்பிறப்பியல்-ஒப்பியல் அகரமுதலியைத் தொகுத்தவர் என்னும் பெருமையுடையவர் ஆயினும், இவ்விருவரும் உண்மையாகப் பாவாணர் ஆய்வுக்கு முன்னோடியாக இருந்திலர் என்பதையும், அவர்கள் தம் நூல்களும் ஆய்வுமுறைகளும் பாவாணர் தம் உண்மையாய்வுத் தடத்திலிருந்து விலகாதவாறு எச்சரிப்பவையாய் மட்டுமே அமைந்தன என்பதுமே அவ்வுண்மையாம்.

3. பொறியியலறிஞர் வேங்கட கிருட்டினர் 'தமிழே முதன் மொழி' என்னும் நூலில் தமிழ்-ஆங்கிலச்சொல் ஒப்பாய்வின் மூலம் தமிழே முதன்மொழி என்னும் முடிவுக்கு வந்துள்ளமையும், அவர்தம் ஆய்வுபற்றிய விளக்கமும் முன்னர்க் கூறப்பட்டன.

வேங்கட கிருட்டினர் மேற்கொண்ட ஒப்பாய்வு, பாவாணரின் முதற்கட்டுரையாகிய 'மொழியாராய்ச்சி'யில் 1931-ஆம் ஆண்டிலேயே மேற்கொள்ளப்பட்டு, அறுநூற்றிரண்டு ஆங்கிலம் முதலான இந்தோ ஐரோப்பியச் சொற்கள் தமிழிலிருந்து சென்றவையாகக் காட்டப்பட்டன. அவற்றிற்கான விதிகள் முதற்றாய்மொழி (The Classical prima) நூலில் கூறப்பெறும் என்று அக்கட்டுரையில் அவர் கூறியதும் முன்னர் எடுத்துக் காட்டப் பெற்றது. அவ்வாறே பாவாணரின் (The primary Classical Language of the world) என்னும் நூலில் (பக். 224 284) முத்தர ஒப்புச் சொற்களாக அறுநூற்றுக்கு மேற்பட்ட சொற்களும், வேறுபல இலக்கணக் கூறுகளும் அவரால் எடுத்துரைக்கப்பட்டன. எனவே வேங்கடகிருட்டினருக்கு அரை நூற்றாண்டுக்கு முன்பே பாவாணரால் அத்தகைய ஆராய்ச்சியும் முடிவும் மேற்கொள்ளப்பெற்றன என்பதை அறியலாம். அது மட்டுமன்றி, வேங்கட கிருட்டினர் பெரும்பாலும் ஆங்கில-தமிழ் ஒப்பாய்வாகவே நின்றுவிட, பாவாணரின் ஆய்வோ ஆங்கில மூல மொழியையும், அம்மொழிக்குடும்பத்தையும் உள்ளடக்கியது என்பதை அறியலாம்.

வேங்கட கிருட்டினர், எழுத்து மொழி பேச்சுமொழியாக மாறியபோது பேச்சுமொழி வேறொரு மொழியைத் தோற்றுவிக்கிறது என்னும் கொள்கையும் பாவாணரால் எடுத்துரைக்கப் பெற்றதே. செந்தமிழ் கொடுந்தமிழாகவும், கொடுந்தமிழிலிருந்து திரவிடமொழிகள் தோன்றியமையும் பாவாணர் கூறுவதே.

"ஒருகாலத்தில் கொடுந்தமிழ் என்றிருந்த திசைமொழிகள் (Regional Dialects) பிற்காலத்தில் திரவிடம் என்னும் கிளை

மொழிகளாகத் திரிந்துவிட்டன. (தமிழ் வரலாறு பக். 250) இது பாவாணர் கூற்றாகும்.

தமிழுக்கு நெருக்கமாக ஆங்கிலம் உள்ளமை பற்றிப் பாவாணர் கூறுவதாவது;

''ஆரியக் குடும்பத்தைச் சேர்ந்த ஐரோப்பிய மொழிகளுள் வடமேற்கோடியில் வழங்கிவரும் தியூத்தானிய (Teutomic) மொழிகள், சிறப்பாக ஆங்கில சாகசனியம் (Anglo-Saxon), தமிழுக்கு மிக நெருங்கியிருக்கின்றன. அந்நெருக்கத்தைக் காட்டும் சான்றுகள் வருமாறு:

1. விழுத்தம் பெரும்பாலும் முதலசையில் விழும்:
2. தனிக்குறிலையடுத்த மெய் உயிரொடு புணரின் இரட்டல்
3. இருமையெண் இன்மை
4. வினைகள் துவ்வீறொத்த ஈற்றால் இறந்தகாலங் காட்டல் (எ-டு) (Walked, Told, Bwont)
5. திய்யொத்த முன்னிலையொருமையீறு பண்டையாங் கில வழக்கிலிருந்தமை. (எ-டு) - நீ யிருத்தி - ThouArt.
6. சில அடிப்படைச் சொற்கள் ஆங்கிலத்திற்கும் தமிழுக் கும் பொதுவாயிருத்தல்.
7. ஆரியத்திலுள்ள தமிழ்ச் சொற்களைப் பொதுவாக ஆங்கிலமே தமிழுக்கு நெருங்கிய வடிவிற்காட்டல்''

(தமிழ் வரலாறு பக். 272)

இவற்றால் வேங்கடகிருட்டினர் தாமே ஆராய்ந்தார் என்பதன்றி, அதுவே முதலாய்வு ஆகாது என்றும் அவர்தம் ஆய்வு இன்னும் முறையாக அமைய வேண்டும் என்பதும் புலனாம். அவர் காட்டுகின்ற சொல்வடிவங்களை அவர்தம் பிற்றையாராய்ச்சியால் அவரே மாற்றிக் கொள்ளலாம். அதற் கிடமுள்ளது, ஆயின் முடிவு வேறுபடுமேயன்றி மாறாது. பாவாணர் கூறுகின்றவாறு ஆயிரங்கல் சேய்மையால் மூல மொழியின் மூன்றிலொரு பங்குச் சொல் அச்சேய் (மை) மொழி யில் அழிந்து படுகின்றதென்பதையும், புதுச் சொல் தோன்றுதல் இயல்பு என்பதையும், ஆங்கிலம் உலகப் பெரு மொழிகளிலிருந்து பலவாறாகக் கடன் சொற்களைப் பெற்றுள்ளதென்பதையும் வேங்கடகிருட்டினர் நினைவிற்கொள்வாராயின் ஆங்கிலச்

சொற்களனைத்திற்கும் தமிழ் மூலம் கற்பிக்கும் எண்ணத்தை விடுத்து உண்மை மூலத்தை மட்டும் காட்ட முற்படுவார்.

வேங்கட கிருட்டினர் — பாவாணர் ஆய்வுகளைப் பொறுத்த மட்டில், பாவாணர் மேற்கொண்ட முழுமையாய்வின் ஒரு கூறு வேங்கட கிருட்டினரால் மேற்கொள்ளப்பட்டுள்ளது என்பதை அறியலாம்.

# எ. பாவாணரின் முதன்மொழி ஆய்வு வளர்ச்சி

பாவாணர் எழுதியது ஒரு கட்டுரையாயின் பீற்குறிப் பென்றும், உரையாயின் உரையெச்சமென்றும், நூலாயின் பிற்சேர்ப்பென்றும், அவற்றை எழுதி முடித்த காலத் திற்குள்ளேயே தாம் வளர்ந்த நிலையைக் காட்டுபவர். கட்டுரையை எழுதி அனுப்பிவிட்டு, அது செந்தமிழ்ச் செல்வி (9:6) இதழில் வெளியிடுதற்கு முன்பாகவே, ''Bandy — பண்டி, Cash — காசு, Bat — மட்டை, Portia— பூவரசு, Moringa — முருங்கை என்ற சொற்களையும் சேர்த்துக் கொள்க'' என்று மடல் எழுதியமை முன்னரும் காட்டப்பட்டது. (அச்சாகிய கட்டுரையில் இச் சொற்கள் உரிய இடத்தில் சேர்க்கப் பட்டுள்ளன) முதற் கட்டுரையிலேயே இந்த வளர்ச்சி நிலையைக் காணலாம். முழுமையான அரை நூற்றாண்டு ஆராய்ச்சி செய்த பாவாணரின் முதற் கட்டுரைக்கும் முடிவுக் கட்டுரைக்கும் பொருளொன்றே -யாயினும் உரைக்கும் முறையில் அமைந்த வளர்ச்சியைப் புலவர் மணி இரா. இளங்குமரனார் தன் 'தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள்' நூலில் (பக். 122-129) நன்கு விளக்கியுள்ளார்கள்.

உலக முதன் மொழி தமிழ் என்பதை நிலைநாட்டப் பாவாணர் தம் கட்டுரையில் அறுநூற்றிரண்டு சொற்களை எடுத்துக் காட்டியதைப் போல — அதே நோக்கத்துடன் 1966இல் வெளியான The Primary Classical Language of the World என்னும் ஆங்கில நூலில், ஏறத்தாழ அதே அளவான எண்ணிக்கையுடைய சொற்களை எடுத்துக் காட்டியுள்ளார். முதற் கட்டுரையில் காட்டப்பெற்ற சொற்களுக்கும் இந்நூலில் காட்டப் பெற்ற சொற்களுக்கும் நிறைய வேறுபாடுண்டு.

கட்டுரையில் காட்டப் பெற்ற சொற்களையே ஆங்கில நூலிற் காட்டுங்கால் முதன்மைத் தன்மையான நெருக்கம், இரண்டாம் தன்மையான நெருக்கம், மூன்றாம் தன்மையான

நெருக்கம் எனப் பிரித்துக் கொண்டமையும், கட்டுரைச் சொற் களிற் சிலவற்றை நூலிற் காட்டாது விட்டமையும், நூலில் காட்டப் பெற்றுள்ளவற்றில் புதிய சொற்களைச் சேர்த்துள்ள மையும், இலக்கணத் தொடர்பான சொற்களையும் நூலில் எடுத்துக் காட்டியுள்ளமையும் பாவாணர் தம் மொழியாராய்ச்சி யின் வளர்ச்சியைக் காட்டுவன.

கலை, உலகம், கற்பு முதலானவை வடசொற்கள் என்று தேர்வு உரை நூலாசிரியர்கள் குறிப்பிட்டனராதலால் அவற்றை ஆராயத் தொடங்கிய பாவாணர், தமிழ்ச் சொற்களுக்கு இணை யான சில இலத்தின் கிரேக்கச் சொற்களைத் தம் ஆய்வுச் செல விற் கண்டு வியந்து, கால்டுவெல், குண்டர்டு, எக்கேல் போன் றோரின் ஆராய்ச்சி முடிவுகளால் ஊக்கம் பெற்ற வரலாற்றைப் பாவாணரே அவர்தம் முதல் மொழியாராய்ச்சி நூலான ஒப் பியன் மொழி நூலின் முகவுரையில் கூறியுள்ளார். அந்நூலில், "தமிழ் உலக முதற்பெருமொழி யாயிருக்கலாம்" என்பதற்கான சான்றுகளையும் காரணங்களையும் காட்டியவர் (பக். 356.358) 1980 இன் இறுதி நாள்களில் அணியமானதும், பாவாணர் எழுத விரும்பிய The Lemurian Language and its ramification என்னும் ஆங்கில நூலின் சுருக்கமாக அமைந்ததும், சுழற்றச்சுச் செய்யப் பட்டதுமான நூற்படிவத்தில்,

## The Theories of the Beginnings of Language so for Propounded by Western Scholars

1. Devine Theory
2. Nature Theory
3. Contract Theory
4. Bow-wow Theory
5. Ding-dong Theory
6. Pooh-pooh Theory
7. Yo-he-ho Theory
8. Sing-song or Musical Theory
9. Gesture Theory
10. Ta-ta Theory
11. Contact Theory
12. Animal Cried Theory

All these theories are wrong and Unscientific No. 5, 6 and 9 are very trivial and Can apply only to a few words. The

last two are ridiculous in the extreme. The original Language or Articulate Speech of deictic origin, which Can be found only in Tamil *(An Epitome of the Lemurian Language and its ramification-1980 பக். 43)*

மூலமொழி அல்லது இழைத்தல் மொழி சுட்டுத் தோற்றத் தினது; அதைத் தமிழில் மட்டுமே காணமுடியும் எனத் தேற்றே காரத்தில் முடித்தமை அவர்தம் மொழியாராய்ச்சி முடிவுகள் வலுப்பட்ட ஆராய்ச்சி வளர்ச்சியைக் காட்டவல்லது.

மொழித்தோற்றங் குறித்த பாவாணர் நூல்களின் முதன்மை யானவை நான்கு. அவை 1940—1967 ஆகிய இருபத்தேழாண்டு களின் இடைப்பட்டவை.

முதலாவது 1940 இல் வெளியான ஒப்பியன் மொழிநூல்

இரண்டாவது 1949 இல் எழுதி 1953 இல் வெளியான முதல் தாய்மொழி அல்லது சுட்டாக்க விளக்கம்.

மூன்றாவது 1963 இல் எழுதி 1966இல் வெளியிடப்பட்ட The Primary Classical Language of the world என்னும் ஆங்கில நூல்.

நான்காவது 1967 இல் வெளியான தமிழ் வரலாறு.

பாவாணர் மறைதற்கு முன் எழுத விரும்பியது The Lemurian Language and its ramification என்னும் ஆங்கில நூல். அந்நூல் எழுதி வெளியிடு முன்னரே பாவாணர் மறைந்துவிட்டமையால் 1967 இல் வெளியான 'தமிழ் வரலாறு' நூலில் கூறப்பட்டவையே இறுதியானவை என்று கொள்ள வேண்டும்.

இருபத்தேழாண்டுகட்கு இடைப்பட்ட இந்நான்கு நூல் களில், மொழித்தோற்றங் குறித்துப் பாவாணர் ஆராய்ச்சியின் வளர்ச்சி வரலாற்றைக் காணலாம். அவற்றுள் மூன்று செய் திகள் மட்டும் இங்கு எடுத்துக் காட்டப்படுகின்றன.

**1. மொழித் தோற்றங் குறித்த ஒலிகள்**

ஒப்பியன் மொழி நூலில் (பக். 275.282) தமிழ்த் தோற்றம் என்னும் தலைப்பில் மூன்று வகையான ஒலிகளே சுட்டப் பட்டன. அவை:

1. கத்தொலிகள் (Cries)
2. ஒப்பொலிகள் (Imitatives)
3. வாய்ச் செய்கையொலி (Oral Gesture)

என்பன.

முதல் தாய்மொழி நூலில் அவ்வொலிகள்:

1. உணர்வொலி
2. ஒப்பொலி
3. குறிப்பொலி
4. வாய்ச் செய்கையொலி
5. குழவி வளர்ப்பொலி
6. சுட்டொலி

என ஆறாக வளர்ந்து திருந்தியுள்ளன.

The Primary classical Language of the world என்னும் ஆங்கில நூலிலும் இவ் அறுவகை ஒலிகளே கூறப் பட்டன.

எனினும் 'தமிழ் வரலாறு' நூலில், அவை:

1. உணர்ச்சியொலிகள்
2. விளியொலிகள்
3. ஒப்பொலிகள்
4. குறிப்பொலிகள்
5. வாய்ச் செய்கையொலிகள்
6. குழவி வளர்ப்பொலிகள்
7. சுட்டொலிகள் என ஏழாக விரிந்தன. இவற்றின் விளக்கங்களும் வேறுபாடும் எடுத்துக் காட்டுகளும் அவ்வந்நூலிற் காணத்தக்கன.

## 2. சுட்டெழுத்துகள்

ஒப்பியன் மொழிநூலில் (பக். 277) "வாயை விரிவாய்ங்காத்தலால் சேய்மையையும், பக்கவாரியாய்ப் நீட்டிக்கீழ்மேல் ஒடுக்கியங்காத்தலால் அண்மையும், இடைநிகர்த்ததாய்க் குவித்தங்காத்தலால் இடைமையையும் பக்கவாரியாயொடுக்கிக் கீழ் மேல் நீட்டியங்காத்தலால்உயரத்தையும் முதற்றமிழர் குறித்தொலித்ததால், முறையே ஆ, ஈ, ஊ, ஓ, என்னும் ஒலிகள் பிறத்திருக்கின்றன" என்றும்,

'ஓ' சுட்டு உயரங் குறித்தென்றும், அஃது 'ஊ' ஆக மாறுமென்றும், மாறி உயரக்கருத்தைக் குறிக்குமென்றும் அந்நூலில் கூறப்பட்டது.

ஆயின் இக்கருத்து, முதல் தாய் மொழியில் "சுட்டுக் கருத்தைத் தெரிவித்தற்குக்கையாளப் பட்டவை ஆ (அ), ஈ (இ) ஊ (உ) என்பன. இம்மூன்றையும், முறையே, சேய்மைச்சுட்

டாகவும் அண்மைச் சுட்டாகவும் முன்மைச் சுட்டாகவும் ஆண்டு வந்தனர்'' என்றும், (பக். 18)

''ஆகார ஈகாரச் சுட்டுகளை இக்கால மக்கள் முந்தியல் மாந்தர் போல் ஒலிப்பதில்லை. ஓகாரச் சுட்டு இதழ் குவிந் தொலிப்பதாதலில், அதை ஓரளவு முன்னோரொத்தொலிக் கலாம். ஆயின், அது இன்று வழக்கற்றது'' (பக்.19) என்றும் கூறியும், அதன் பின் வந்த நூல்களில் ஓகாரச் சுட்டுக் குறிக் கவும் படாமல் செம்மையாய்ப் புதைக்கப்பட்ட (Decent Burial) நிலையைக் காண்கிறோம்.

3. சுட்டெழுத்துகளின் கருத்துகள்

ஒப்பியன் மொழி நூலில் ஊகாரச் சுட்டு முன்மைக் கருத்தை யும் ஓகாரத்திலிருந்து ஊகாரமாகி உயர்ச்சிக் கருத்தையும் குறிக்கும் என்ற அளவில் கூறப்பட்டது. ஆயின் முதல் தாய் மொழியில், ஊகாரச்சுட்டின்,

1. முன்மை 2. முன்னுறல் 3. முற்செலவு 4. மேற்செலவு 5. நெருங்கல் 6. தொடுதல் 7. கூடல் 8. வளைதல் 9. துளைத்தல்

என ஒன்பது வகையான பெருங்கருத்துகளும் நூற்றுக்கணக்கான சிறு கருத்துகளும் கூறப்பட்டன.

The Primary Classical Language of the world என்னும் ஆங்கில நூலிலும் இவ்வாறே கூறப்பட்டது. ஆயின் தமிழ் வரலாறு நூலில்,

1. தோன்றல் (முன் வருதல்) 2. முன்மை 3. முற்செல்லல் 4. நெருங்கல் 5. பொருந்தல் 6. வளைதல் 7. துளைத்தல் 8. துருவல்

எனச் சற்று வேறுபட்ட எண்பெருங்கருத்துக்கள் கூறப்பட்டன. இவற்றில், முதல் தாய்மொழியில் குறித்த மேற்செலவும்,கூடலும் விலக்கப்பெற்று, அந்நூலில் சிறு கருத்தினதாகக் குறிக்கப் பெற்ற 'துருவல் துறை' இந்நூலில் பெருங் கருத்தினதாகக் கூறப் பட்டதை அறியலாம்.

இவ்வளர்ச்சி வரலாற்றை நுணுகியாராயின் தனிநூலாய் விரியும்.

# அ. தமிழின் முதன்மையை நிலைநாட்டத் துணையாகும் பிற சான்றுகள்

தமிழ் உலக முதன்மொழி என்று பாவாணரும் பிறரும் ஆராய்ந்து கூறியவற்றை உறுதிப்படுத்துமாறு பல சான்றுகள் கிடைக்கின்றன. அச் சான்றுகளைத் தேடிக் கண்டவர்கள் வெவ்வேறு முடிவிற்கு வந்தார்கள் ஆயினும், உலக முதன் மொழி, தமிழ் என்னும் இவ் ஆராய்ச்சிக்கே அச்சான்றுகளும் நம்மைச் செலுத்துகின்றன. அவற்றுட் சிலவற்றைக் கொண்டு கீழ்க்காணுமாறு வகுக்கலாம்.

1. மொழியியற் சான்றுகள்
2. நாகரிகப் பண்பாட்டுச் சான்றுகள்

**1. மொழியியற் சான்றுகள்**

அ. திரவிட மொழிகளிலிருந்துசமற்கிருதம் கொண்ட கடன் சொற்களாக முப்பது சொற்களையும், அவ்வாறு குண்டர்டு எடுத்துக் காட்டுவனவற்றுள் இருபத்து நான்கு சொற்களையும் கிட்டல் எடுத்துக்காட்டுவன வற்றுள் பதிமூன்று சொற்களையும் கால்டுவெலார் தம் ஒப்பிலக்கண நூலில் எடுத்துக் காட்டியுள்ளார். சமற் கிருதத்திற்கும் திரவிட மொழிகளுக்கும் பொதுச் சொற் களாகக் காணப்படுவன இருபத்தைந்து சொற்களையும் அவரே எடுத்துக் காட்டியுள்ளார்.

ஆ. இந்தோ ஐரோப்பியக் குடும்ப மொழிகளுக்கும் திரவிட மொழிகளுக்குமிடையே காணும் ஒற்றுமைச் சொற் களாகக் கால்டுவெலார் அதே நூலில் நூற்றி ஐந்து சொற்களை எடுத்துக்காட்டியுள்ளார்.

இ. ஈபுருமுதலான சேமிய மொழிகளுக்கும் திரவிட மொழி களுக்கும் இடையே அமைந்த ஒப்புமைச் சொற்களாக அவர் அதே நூலில் இருபத்தொன்பது சொற்களை எடுத்துக் காட்டியுள்ளார்.

ஈ. சித்திய மொழிகளுக்கும் திரவிட மொழிகளுக்கும் இடையே உள்ள ஒப்புமைச் சொற்களைக் காட்டுங்கால் சித்திய திரவிடச் சொல் வரிசையில் எண்பத்து மூன்றும் அங்கேரிய - திரவிடச் சொல்வரிசையில் முப்பதும், சீன திரவிடச் சொல்வரிசையில் எட்டும், சப்பானிய-திரவிட சொல் வரிசையில் ஏழும் அவரால் அதே நூலில் காட்டப் பட்டன. (A Comparative Grammer of the Dravidian or South Indian Family of Languages1976) (பக்.569-626)

இவ்வாறே பரோ, எமனோ, சுனிதி குமார் சட்டர்சி, இலகோவாரி ஆகிய அறிஞர் களும் தத்தம் நூல்களில் சில சொற்களை எடுத்துக் காட்டியுள்ளனர்.

உ. "ஆசியாவில் சைபீரியா நாட்டில் அக்கின் சாதியார் மொழியும் வட ஐரோப்பாவில் பின் சாதியார் மொழி யும் மீட்டியா நாட்டிலுள்ள பிஹிஷ்டன் சாசனங்களில் எழுதியுள்ள மொழியும், திராவிட சம்பந்தம் பெற்றுள் ளன. பால்டிக் கடல் முதல் மலையாளம் வரையில் திராவிட சம்பந்தமாம். திராவிடம் தொன்று தொட்டுள்ளதொன்று. ஆரியருக்கு முன் நாகரிக மடைந்தவர் திராவிடர், வடபால் மேல்பாலுள்ள ஆத்திரேலியா தேசத்தாரது மொழியுள் நான், நாம், நீ, நீங்கள், அவனென்னுஞ் சொற்கள் ஒத்துள்ளன. மலையாளம், தெலுங்கு, கன்னடம், துளுவம், குடகு, தோடம், கோட்டம், காண்டி, ஊரான் முதலிய பாஷை கள் தமிழ்ச் சிதைவு என்று சரித்திரப் புலவர் ஹண்டர் என்பவர் கூறுவர்" என்றும்,

"தென்னாட்டுத் திராவிட மொழியிலிருந்து சப்பான் மொழி தோன்றியதென்று புங்கி உத்தமர் கூறுகின்றார்" என்றும் யாழ்ப்பாணத்து நவாலியூர் கந்தையா அவர்கள் தம் 'தமிழகம் என்னும் நூலில் (பக். 49, 50) எடுத்துக்காட்டியுள்ளார். அவரே தம் தமிழர் சரித்திரம் என்னும் நூலில் (பக். 29) "கம்ஸ் கற்கா, நியூசிலாந்து, இத்தாலியிலுள்ள ரஸ்கானி முதலிய நாடுகளில் வழங்கும் மொழிகள் தமிழுக்கு உறவுடையனவாகக் காணப்படுகின்றன. சீன மொழிக் கும் தமிழுக்கும் தொடர்பு உண்டென்று சொல்லப்படு கிறது. எபிரேயம், கிரேக்கு, சமற்கிருதம் முதலிய மொழிகளில் தமிழ்ப் பதங்கள் காணப்படுகின்றன.

பழைய ஜெர்மன் காதிக், இலத்தீன் முதலிய மொழி களிலுள்ள சில சொற்கள் தமிழ்டியர்கப் பிறந்துள்ளன. சுமேரிய மொழி தமிழோடு சம்பந்தமுடையது. இந்த ஐரோப்பிய மொழிகளுக்கும் தமிழுக்கும் பழைய தொடர்பு காணப்படுகிறது. பின்லாந்தில் வழங்கும் மொழியில் பல தமிழ்ச் சொற்கள் காணப்படுகின்றன'' என்னும் இரைசு தாவீது (Rhys David) என்பார் கூறி யதை மேற்கோளாகக் காட்டியுள்ளார்.

ஊ. பிற மொழிகளில் தமிழ்ச் சொல்லாட்சி (1966) என்னும் நூலில் பேரா. கோ. இராமச்சந்திரனார் ஆங்கிலம், வடமொழி, தெலுங்கு, கன்னடம், மலையாளம், துளு இந்தி, மேலை ஆரிய மொழிகள் ஆகியவற்றுள் காணும் தமிழ்ச் சொற்கள் சிலவற்றைக் காட்டியுள்ளார்,

எ. ''உபெய்துகள் யாவர்? (சுமேரியச் சொற்களிலிருந்து உபெய்து மொழிச் சொற்களையும் இடப் பெயர்களை யும் பிரித்தெடுக்கும்) மொழியகழ்வாய்வு, உபெய்து மொழிச் சொற்கள் இருபதையும் அதே அளவு எண்ணிக் கையுடைய இடப்பெயர்களையும் தந்துள்ளது. உபெய்துச் சொற்கள் பல திரவிட மொழிச் சொற்கள் போலவும் திரவிட வேர்ச் சொற்களைப் பெற்றும் உள்ளன. தென்னிந்தியாவில் நூற்றுக்கணக்கான இடங்களின் பெயர்கள் ஊர் என்று முடிந்துள்ளன. திரவிட மொழிகளில் ஊர் என்பது குடியிருப்பு, நகர் இடம் என்பவற்றைக் குறிக்கும். மெசபொடோமியா வில்பழைய நகரங்கள் ஊர் என்னும் வேர்ச் சொல்லைப் பெற்று உருக், நிப்பூர், ஊர் என்று வழங்கப்பட்டன. (The Riddles of Three Oceans 1974) (பக். 137-38) என்றும், இவ்வாறே ஏலம் மொழிக்கும் திரவிட மொழிக்கும் உள்ள ஒற்றுமையும் (மேற்படி நூல் பக். 146) ஆத்திரேலியப் பழங்குடியினர் பேசிய மொழி திரவிடக் குடும்பத்தைச் சேர்ந்தது (மேற்படி நூல் பக். 190) என்றும், அலெக்சாண்டர் கொந்தரத் தோவு கூறியுள்ளார்.

ஏ. அறிஞர் திரு ஞானகிரியார் அவர்கள் Latin words of Tamil origin என்றும் Greek words of Tamil origin என்றும் 1981 இல் இரு நூல்களை வெளியிட்டுப் பல இலத்தீன் கிரேக்க மொழிச் சொற்கள் தமிழ் மூலத்தின என்று காட்டியுள்ளார்

ஐ. 12.9.80 ஆம் நாளைய 'இந்து' நாளிதழில், காகசியன் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேரா. சுசுமு ஓனோ என்னும் மொழியியலறிஞரும் தென்கொரியாவில் உள்ள கேமிப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேரா- மத்துபாரா என்னும் நாட்டுப்புறக் கலைவல்லாரும் சப்பானிய மொழித் தோற்றங்குறித்தும், அம்மொழித் தோற்றத்திற்குத் திரவிட மொழிகள் முகாமையான பங்கேற்றிருக்க வேண்டும் என்னும் கருதுகோளுடனும் தமிழ் நாட்டில் ஆராய்ச்சி செய்தற்கு வந்த செய்தி வந்தது. அதே இதழில் பர். சாவித்திரி விசுவநாதன் என்பார் வரைந்த கட்டுரையில், பேரா. சுசுமு ஓனோ அக்கிரேசதகே கிங்கோரா மேடா ஆகியோர் சப்பானியர் மொழிச் சொற்களும், பழந்தமிழ்ச் சொற்களும் நெருங்கிய தொடர்பு கொண்டிருத்தலைக் கண்டனர் என்றும், பேரா. சுசுமு சிபா என்னும் பண்பாட்டு ஒப்பியலாய்வறிஞர், புத்த சமயத்திற்கு முந்திய காலச் சமயச் சொற்கள் திரவிட மொழிச் சொற்களுடன் தொடர்புடையவை எனக் கண்டறிந்தார் எனவும், பேரா. உலோகேசு சந்திரா, சப்பானிய ஒலிமுறை சமற்கிருத மொழியின்ஒலிமுறையினின்றும் வேறுபட்டதாய்,தமிழிலிருந்து தோன்றியதாய் உள்ளது என்று கூறியதையும், தில்லிப் பல்கலைக் கழகத்தில் சப்பானிய மொழியைக் கற்றுத் தரும் திருவாட்டி பாலாம்பாள் தமிழ்-சப்பானிய மொழிகளின் இலக்கண ஒற்றுமையை வெளிப்படுத்தியுள்ளார் என்றும் கூறியுள்ளார். இச் செய்திகளை வெளியிட்ட மீட்போலை இதழ் "மொழிநூல் மூதறிஞர் பாவாணர் அவர்கள் தம் வாழ்நாட்பணியாக மேற்கொண்டு கூறும் தமிழியலுண்மைகள் நிலைப்படுவதும், சப்பானிய நாட்டு அறிஞர்களின் உண்மை தேடும் முயற்சியும் மகிழ்ச்சியூட்டுகின்றன" என்றும் எழுதியது. (மீட்போலை சுவடி 1 ஓலை-12நவம்பர் 1980)

ஒ. புலமை (ஏப்.81) இதழில், பர். சுசுமு ஓனோ தமிழ்-சப்பானியச் சொல்லொப்புமை என்றும், பர். சுசுமு சிபா, திரவிடமும் சப்பானியமும் என்றும் இரு கட்டுரைகள் எழுதியுள்ளனர். முதல் கட்டுரையில், பரோவும் எமனோவும் தொகுத்த திரவிட மொழிகளின் சொற்பிறப்பகரமுதலி (DED) யின் அடிப்படையில் 500 தமிழ்ச் சொற்கள் சப்பானியச் சொற்களுக்கு அடிப்படையாய் அமைந்தனவென்றும் அவை

திரியும் முறைகளையும் காட்டினார். இரண்டாம் கட்டுரையில் திரவிட சப்பானிய மொழிகளுக்கிடையே அமைந்த இலக்கண ஒற்றுமையும் உடலுறுப்புப் பெயர்கள் எண்கள், ஆகியன இரு மொழிகளிலும் பெறும் ஒற்றுமையையும் எடுத்துக் காட்டி யுள்ளனர்.

D L A News (April 81) என்னும் இதழில் பேரா. கரசிமா (Prof. Karashima) இக் கொள்கைபற்றி வரைந்த திறனாய்வுக் கட்டுரையில், இக் கொள்கையின் வன்மை மென்மைகளை எடுத்துரையாமல், இத்தகைய ஆய்வை மேற்கொள்ளுதற்குப் பேரா. ஓனோவிற்குள்ள தகுதி யைக் கேள்விக் குறியதாக்கியும், இத்தகைய ஆராய்ச் சியை அவர் விளம்பரம் தேடிக் கொள்ளாமற் செய்ய வேண்டும் என்றும் கூறினார். அடுத்த இதழில் (DLA News May 81) இது பற்றி எழுதிய பேரா சிப்மான், (Prof. Schiffman) இவ்வாய்வை வரவேற்று எழுதியதுடன் பழமையான தக்க சான்றுகளுடனும், வரலாற்று மீட்டமைப்பின் கடுமையான உத்திகளு டனும் மேற்கொள்ள வேண்டும் என்றும் எழுதினார்.

ஓ. சிந்தி மொழிக்கும் திரவிட மொழிக்கும் உள்ள ஒற்றுமை பற்றி ஆராய்ந்த பர். குலாம் அலி அல்லானா என்பார் வரைந்த சிந்திமொழியின் தொன்மை என்னும் ஆராய்ச்சிக் கட்டுரையில் சிந்தி-திரவிட மொழி யொப் புமை முடிவுகளாகக் கூறியவற்றைத் திரு. பரசுராமன் (DLA News Dec' 83) இதழில் எடுத்துக் காட்டியிருந் தார்.

ஔ. 'தென் அமெரிக்காவில் சோழர்கள்' (1976) என்னும் நூலின் ஆசிரியர் திரு. மீ. மனோகரன், பெட்டி, கோன், சுண்ணாம்பு, கட்டுமரம், அய்யர், அமைச்சர் ஆகிய சொற்கள் அமெரிக்க நாட்டுப் பழங்குடி மக்களின் மொழிகளில் உள்ளனவென்றும் அவர்களுடைய நாகரிக மாகக் குறிக்கப் பெறும் 'பெரு' என்பதே பெருமைக் குரிய தமிழ்ச் சொல்லென்றும் காட்டியுள்ளார்.

இவ்வாறிருக்க, திரு. எசு. வைத்தியநாதன் என்பார் தம் பண்டாரகர்ப்பட்ட ஆய்வுக்காக எழுதிய இடுநூலின் அடிப் படையில் எழுதிய Indo-Aryan Loan words in old Tamil என்னும் நூலில் உண்மைக்கு மாறானதும் பொய்ம்மையும் போலிமை யானதுமான சொல்லாராய்ச்சியை, சமற்கிருதம் பிறமொழிகளிற்

கடன் கொள்ளாது என்னும் (மூட) நம்பிக்கையுடன் மேற் காண்டு, பல பழந்தமிழ் மூலச் சொற்களையும் சமற்கிருதத்தி லிருந்தும் பிற ஆரிய மொழிகளிலிருந்தும் கடன் கொண்டன வாகக் காட்டியுள்ளார். கால்டுவெலார், சுனீதிகுமார் சட்டர்சி, பரோ-எமனோ ஆகியோர் தமிழிலிருந்து சமற்கிருதம் கடன் கொண்டதாகக் காட்டிய சில சொற்களையும் இவர் மறுத் துள்ளாராதலின் இவர் கூற்றிலுள்ள பொய்ம்மையை அறிந்து கொள்ளலாம். உண்மையின் எதிர்முனையிலிருந்து அவர் இந் நூலை வரைந்தாரேனும், உண்மை வெளிப்பட்டு நிலைப்படுங் கால் அப் பொய்ம்மைகளே எய்தாரை நோக்கிப் பாயும் வளைதடிகளாக (Boomrangs) மாறும் என்பதில் ஐயமில்லை. இந் நூன் முயற்சியைப் பாராட்டிப் பர். ச. அகத்தியலிங்கம் பாயிர வுரை வரைந்தாரெனின் என்னென்பது?

2. நாகரிகப் பண்பாட்டுச் சான்றுகள்

இதுகாறும் அகழ்ந்தாய்ந்துகண்ட நாகரிகங்களில் தொன்மை யானதாகப் பொருநை வெளி நாகரிகமும், அதற்குப் பிற்பட்டன வாக முறையே சிந்துவெளி, சுமேரிய, எகிப்து, முதலான நாகரிகமாக உள்ளமையும், இவற்றில் தொன்மைய இரண்டும் தமிழர் அல்லது திரவிட நாகரிகங்கள் உள்ளமையும், ஏனைய நாகரிகங்கள் அவற்றோடு ஒற்றுமையுடையனவாகவும் தொடர் புடையனவாகவும் இருத்தலும், நெடுஞ் சேய்மையினதாகிய 'பெரு' நாகரிகமும் தமிழரொடு தொடர்புடையதே எனக் கூறப் படுவதும் ஆகிய நாகரிகச் சான்றுகள் உலக முதன்மொழி தமிழ் என்பதை வலியுறுத்தும் சான்றுகளிற் சில.

அ. திபெர், தானுபே, தேமசு ஆகிய ஆற்றங்கரைப் பகுதி களில் தமிழர்கள் வாழ்ந்ததற்கான அறிகுறிகள் உள்ளன என்றும், இங்கிலாந்து நாட்டில் சிவ வழிபாடு இருந்த தென்றும், மு. சு. பூரணலிங்கனார் கூறியுள்ளார். (Tamil India பக். 19)

ஆ. ''நடு அமெரிக்கா மட்டுமன்றிப் புதிய கண்டத்தை ஐரோப்பியர் சென்றடைதற்குப் பன்னூற்றாண்டுக் காலத்திற்கு முன்பே இந்தியர்கள் உருவாக்கிய அளவற்ற கலைப் பொருட்களும் எழுத்தாவணங்களும், கோவில் களும் சிலைகளும் கொலம்பியா, பெரு, பொலிவியா ஈகுவேடர் ஆகிய நாடுகளில் காணப்படுகின்றன. இப் பண்பாடுகளை அமெரிக்கவியல் என்பர். (The Riddles of three Ocean: பக். 15) என்றும்,

"ஈரான் நாட்டுத் தைகிரிசு ஆற்றுக்குத் கிழக்கிலுள்ள குசித்தானம் முன்பு ஏலம் என அறியப் பட்டிருந்தது. ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முந்திய நாகரிகம், நகர நாடுகள், தனிச் சிறப்பான பண்பாடு, எழுத்துமுறைகள் ஆகியவற்றுடன் நிலவியது. ஏலம் பண்பாடு, மெசபடோமியப் பண்பாட்டுடன் பல்லாற்றானும் ஒத்திருக்கின்ற கூறுகளையும், தொல் லிந்தியப் பண்பாட்டுடன் இன்னும் மிகுதியான ஒப்புமையும் கொண்டிருந்தது" (மேற்படி நூல் பக். 143) என்றும் கூறிய அலெக்சாண்டர் கொந்தரத்தோவு அதற்கு முந்திய பத்தியில் மெசபடோமியரும் திரவிடரும் ஓரின மக்களாகவே இருந்திருத்தல் கூடும் என்றும், அவர்கள் மொழி திரவிட மொழியாக இருந்திருத்தல் கூடும் என்றும் கூறியுள்ளாராதலின், இந்தியர், தொல் லிந்தியர், என்று பண்டை நாகரிகத் தொடர்பாகக் குறிக்கப்படுபவர் தமிழரே என்பதை நினைவிலிறுத்திக் கொள்ளல் வேண்டும்.

இ. தென் அமெரிக்காவில் சோழர்கள் எனனும் நூலில் அதன் ஆசிரியர் திரு. மீ. மனோகரன், கொலம்பசு, அமெரிக்காவிற்குச் சென்றபோது அங்கிருந்த மக்கள் செஞ்சாயம் பூசிக் கொண்டிருந்ததை அவர்களின் உடலின் நிறம் என நம்பியும் அவர்கள் இந்தியர்கள் எனக் கருதியும் செவ்விந்தியர் எனப் பெயர் வைத்தது தவறென்றும், அவர்கள் சிவப்பருமல்லர்; இந்தியரு மல்லர்; தமிழர்களே எனக் கூறி, அவர்கள் தம் சமய நம்பிக்கைகள், வழிபாடுகள், அரசர்களின் பழக்கங்கள், திருவிழாக்கள், ஆட்சிமுறை, பண்பாடு ஆகியவற்றால் அவர்கள் சோழ வழியினர், தமிழர் என்று கூறி யுள்ளார்.

ஈ. பொருநை நாகரிகத்தை நன்கு ஆராய்ந்து 'ஆதித்த நல்லூரும் பொருநை வெளி நாகரிகமும்' என்னும் நூலெழுதிய அறிஞர் நுண்கலைச் செல்வர், சாத்தன் குளம் அ. இராகவனார் அந்நாகரிகத்தின் தொன்மை, சிறப்பு முதலானவற்றை விளக்கியுள்ளார். அந்நூலில் அவர்,

"ஆதித்த நல்லூரில் அகழ்ந்து கண்ட பண்பாடு சிந்துவெளி, உபைதியா, எல்லம், சுமேரியா, எகிப்து, கிரீட், மெக்சிகோ, பெரு முதலிய நாடுகளில் துளிர்த்-

தெழுந்த ஆரிய நாகரிகங்களுக்கெல்லாம் அடிப்படையாய் அமைந்துள்ளது. ஏன்? மூலக்கருவாக அமைந்திருக்கிறது என்று கூடக் கூறலாம். இது மிகத் தொன்மையான இரும்பு ஊழியில் (Iron Age) அரும்பிய இரும்புப் பண்பாடு (Iron Culture) ஆகும். இந்த ஆதித்த நல்லூர்ப் பண்பாட்டைக் கண்ட மக்களின் இனத்தவர்கள் சிந்துவெளி சுமேரியா, எகிப்து, கிரீட் முதலான இடங்களில் குடியேறி அரிய பெரிய பண்பாடுகளுக்கு அடிகோலியவர்கள் என்று எண்ணப்படுகிறது." (பக். 25) என்று கூறியுள்ளமையை அறியலாம். பொருநை நாகரிகத்தின் தனித்தமிழ்ப் பண்பாடு கருதியும், ஏனையவற்றின் கலப்புப் பண்பாடு கருதியும், அவற்றை ஆரிய நாகரிகம் என்று குறித்தார் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

பாவாணரின் உலகமுதன்மொழிக் கொள்கையை நிலைநாட்டுதற்குத் துணையாகும் மொழியியற் சான்றுகளும் நாகரிகப் பண்பாட்டுச் சான்றுகளும் பல விருப்பினும் அவற்றை விரிப்பது இப்பொழிவின் நோக்கமன்றாதலால் சிலவே காட்டப் பட்டன. இதுவும் தனியே ஆராய்தற்குரியது என்பது முன்னரே சுட்டப்பட்டது.

# முடிவுரை

ஐம்பதாண்டுக் காலம்; உண்ணும் போதும் உறங்கும்போதும் தம்மைப் பற்றி, தம் குடும்ப நலத்தைப் பற்றி எண்ணாமல் தமிழைப் பற்றியே எண்ணியவர், ஆராய்ந்தவர் பாவாணர். தமிழாராய்ச்சிக்கு அவர் பதவி கேட்கவில்லை; பட்டம் தேட வில்லை; பொருளை நாடவில்லை; பொழுது போக்கிற்காகவும் செய்யவில்லை. அதுவே அவர்க்குத் தொழில்; அதுவே உணர்வு; உணவு; உயிர்ப்பு; உவகை. தமிழாராய்ச்சியிலிருந்து அவர் தம்மை விடுவித்துக் கொள்ளவில்லை; விடுமுறை வேண்டிய தில்லை. உலகம் அவரை உலமரச் செய்தபோதும் மனம் நொந்து விடவில்லை; வெந்துவிடவில்லை. தமிழாராய்ச்சி அவரைக் காக்கும் மருந்தாக, ஒலியனாக, ஊட்டமாக (Tonic) அவரை வாழ்வித்தது. தமிழை அமுதென்றார் பாவேந்தர். இது உண்மை. இவ் அமுதத்தை அழிக்க முயன்று, இப்பொருள் 'அமிர்' தத்தைச் சாவா மருந்தென்று பொய்த்தனர் தொன்மிகர். ஆயின் பாவாணர் தமிழாராய்ச்சியையே வாழ்க்கைக்கு விருந் தாக, இளமைக்கு மருந்தாகக் கொண்டார். இறப்புப் படுக்கை யில் சாயும் வரை இளமையோடிருந்தார். தொடர் வண்டி யிலிருந்து இறங்கும் போதும் குதித்துக் கொண்டிறங்கினார். ஓடுகின்ற பேருந்திலும் ஓடியேறினார். இறுதிநாள் பேச்சுவரை அவர் இருந்து பேசவில்லை; மணிக்கணக்கில் நின்று முழங் கினார்; நா குழறவில்லை; கை நடுங்கவில்லை; கைத்தடித் துணையை வேண்டவில்லை.

இவ் ஆராய்ச்சியில் அவர் கண்டது தமிழ் உலகமுதன்மொழி என்னும் முழுவுண்மை. இவ்வுண்மையை அவர் பேசாத இடமில்லை. எழுதாத வாயிலுமில்லை. அச்சகத்திற்குப் பெயரிட வேண்டுமா? குமரி மின் அச்சகம். அணுக்கத் தொண்டர்கள் நடத்தும் இதழுக்குப் பெயரிட வேண்டுமா? தென்மொழி, முதன் மொழி, தமிழம்...

ஐம்பதாண்டுக் காலத்தில் பாவாணர் வரைந்த நூல்கள், கட்டுரைகள், பாடல்கள், உரைகள் ஆகிய எல்லாவற்றிலும் இவ்

வுண்மை எவ்வாறேனும் வெளிப்பட்டது. பாவாணர் நாடகம் எழுதியதாகத் தெரியவில்லை. வகுப்பறையோ, அன்பர்குழாமோ கருத்தரங்கோ, மேடைச் சொற்பொழிவோ, மாநாட்டு உரைப் பெருக்கோ, திருமண வாழ்த்துரையோ, பாராட்டுரையோ, இரங்கலுரையோ, எதுவாயினும், எல்லாவற்றிலும், இவ் வுண்மையைப் பேசினார். இவ்வுண்மையைச் சிறிது பேசாமலிருந் தால் எழுதாமலிருந்தால் பெரிது பெறலாம் என அருகிருந்தோர் அறிவுறுத்தினர்; வாய்ப்புமிருந்தது. ஆனால் பாவாணர்க்கோ தமிழுண்மையே பெரிதாயிருந்தது.

பாவாணர்க்கோ சொந்த வீடு கட்டிக் கொள்ள வேண்டும் என்ற ஆசையிருந்தது. கட்டவும் செய்தார். குடி புகவில்லை. வீட்டில் ஓர் அறைக்குச் செந்தண நிலைப்பாடு (Air Condition) செய்ய விரும்பினார். இது சொத்துச் சேர்க்கவும் இன்ப வாழ்க்கைக்காகவுமன்று. கோடை கொடுமையாய் அவரைப் பணி செய்ய விடாமல் வருத்தியது. நெடுங்கோடையாயு மிருந்தது. மாரியும் குளிரும் கோடையுமாக முக்காலத்திலும் எக்காலத்திலும் தமிழாராய்ச்சியை விரும்பியே வீட்டையும், வீட்டிற் செந்தண நிலைப்பாட்டையும் விரும்பினார்.

இப்படி உழைத்தவர், உண்மைகண்டவர் பாவாணர். இவரைத் தமிழர்கள் எப்படி நடத்தினர்? நன்றி கொன்றவர்கள் தமிழர்கள் என்பதைத் தமிழர்கள் உண்மையாக்கினர். தமிழர் விரும்பியிருந்தால் பாவாணர்க்கு நன்மை செய்வதற்காக இல்லா விடினும் தம் இன நன்மைக் கருதியாவது அவர் தம் மூளைக் கொழுமையில் ஊறிய உண்மைகள் அனைத்தையும் எழுதி வாங்கிக் கொண்டிருக்க முடியும். அதைச் செய்யத் தவறிவிட மட்டுமில்லை; அவரை அறியாதது போல், இனங்கண்டு கொள்ளாததுபோல், நடித்தனர். அமைச்சர்களும் தலைவர் களும் பாவாணர் கண்ட உண்மைகளைத் தாம் கண்டவையாக மேடைகளில் முழக்கினர். பாவாணர் பெயரையும் சுட்டாது விட்டனர். ஆராய்ச்சியாளர்களும் அறிஞர்களும் பேராசிரியர் களும் ஒருபுறம் பாவாணர் கண்ட மொழியியல் உண்மைகளைத் தம் நூல்களில் எழுதிவிட்டுப் பாவாணர் பெயரை அடிக்குறிப்பிற் போடவும் மறந்தனர். மறுபுறம், பாவாணரா, அவர் உலக இயற்கைக்கு வேறுபட்டவர் (Eccentric); பிழைக்கத் தெரியாத வர் என்று இருட்டடிப்புச் செய்தனர். பாவாணர் ஆராய்ச்சியை ஓர் உன்னிப்பு வேலை (Guess work) என்றும் கூறித் தம் அறியாமையையும் வெளிப்படுத்தினர்.

மொழிநூற் கதிரவனின் இறுதியாண்டுகளிலும், அவர் தம் மறைவுக்குப் பின்னரும், அவர் தம் அணுக்கத் தொண்டராகவும்

இயக்கத் தோழர்ராகவும் பல்லாண்டுக்காலம் உடனிருந்தவர் களும் அக்கதிரவனின் ஒளியை மறைக்கும் அருளிச் செயலைச் செய்தனரென்றால் வேறு என்ன பேசுவது? வேறு யாரை நோவது?

ஒன்றுமட்டும் கூறுவேன்; 'எண்ணெயும் உண்மையும் என்றேனும் வெளிப்பட்டே தீரும்' என்பதைப் பாவாணர் அடிக்கடி எடுத்தெழுதுவார்.

இதோ கிழக்கு சிவக்கிறது. குமரிக் கண்டத்தின் எச்சத்தில் ஒரு சிறுபகுதியைத் தமிழர் தம் வாழ்க்கை நிலமாகவும் தாயக மாகவும் மீட்டெடுத்துக் கொள்ளப் போராடிக் கொண்டுள்ளனர். தமிழர் ஆளத்தான் போகிறார்கள். மொழிநூற் கதிரவனின் உண்மை வெளிச்சமும் மொழியியல் உலகை ஆளத்தான் போகிறது.

# கருவிநூற் பட்டியல்

## தமிழ் - நூல்கள்


| | | |
|---|---|---|
| 1. | அப்பாத்துரையார். கா. | குமரிக்கண்டம் அல்லது கடல் கொண்ட தென்னாடு (1984-ஆம் ஆண்டுப் பதிப்பு) |
| 2. | அறவாழி. மு. (தொகுப்பாசிரியர்) | செந்தமிழ் ஞாயிறு ஞா. தேவநேயம் |
| 3. | அறவாணன், க.ப.பேரா. | தமிழரின் தாயகம் (1984) |
| 4. | இராகவனார். அ. சாத்தன் குளம் | ஆதித்த நல்லூரும் பொருநை வெளி நாகரிகமும் (1980) |
| 5. | இராமச்சந்திரனார் கோ. பேரா. | பிறமொழிகளில் தமிழ்ச் சொல்லாட்சி. (1966) |
| 6. | இளங்குமரனார். இரா. புலவர். | தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வுகள் (1985) |
| 7. | கந்தையா பிள்ளை. ந.சி. | தமிழகம் (1955) |
| 8. | ” ” | நமது மொழி (1963) |
| 9. | ” ” | தமிழர் சரித்திரம் (1964) |
| 10. | கார்த்திகேய முதலியார், மாகறல் | மொழிநூல் (1913) |
| 11. | ஞானப் பிரகாச அடிகளார். | சொற்பிறப்பு - ஒப்பியல் தமிழ் அகராதி (1938) |
| 12. | சூரியநாராயண சாத்திரியார், வி.கோ. பேரா. | தமிழ்மொழியின் வரலாறு (1968-ஆம் ஆண்டுப் பதிப்பு) |
| 13. | தமிழ்நாட்டு வரலாற்றுக் குழுவினர் | தமிழ் நாட்டு வரலாறு - தொல் பழங்காலம் (1975) |
| 14. | தேவநேயப் பாவாணர். ஞா | ஒப்பியன் மொழிநூல் (1940) |
| 15. | ” ” | புறநானூற்றுச் சொற்பொழிவுகள் (புறநானூறும் மொழியும் 1956-ஆம் ஆண்டுப் பதிப்பு) |
| 16. | ” ” | முதல் தாய்மொழி அல்லது தமிழாக்க விளக்கம் (1962-ஆம் ஆண்டுப் பதிப்பு) |
| 17. | ” ” | திரவிடத்தாய் (1964-ஆம் ஆண்டுப் பதிப்பு) |
| 18. | ” ” | பண்டைத் தமிழ் நாகரிகமும் பண்பாடும் (1966) |

| | | | |
|---|---|---|---|
| 19. | ,, | ,, | தமிழ் வரலாறு (1967) |
| 20. | ,, | ,, | வடமொழி வரலாறு (1967) |
| 21. | ,, | ,, | வண்ணனை மொழிநூலின் வழுவியல் (1968) |
| 22. | ,, | ,, | தமிழர் வரலாறு (1972) |
| 23. | ,, | ,, | வேர்ச் சொற்கட்டுரைகள் (1973) |
| 24. | ,, | ,, | செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி - முதன் மடலம் முதற் பகுதி (1985) |
| 25. | மனோகரன், மீ. | | தென் அமெரிக்காவில் சோழர்கள் (1976) |
| 26. | வேங்கட கிருட்டினன். இரா. | | தமிழே முதன் மொழி (1984) |

# இதழ்கள்

| | | |
|---|---|---|
| 1. | செந்தமிழ்ச் செல்வி | (தொகுப்பு) |
| 2. | செந்தமிழ் | ( ,, ) |
| 3. | தமிழ்ப் பொழில் | ( ,, ) |
| 4. | தென்மொழி | ( ,, ) |
| 5. | மீட்போலை | ( ,, ) |
| 6. | புலமை | (ஏப்பிரல் 81) |

## English-Books

1. Alexander Kondratov — The Riddles of three ocean (1974)
2. Aravanan, K. P; Dr. — Anthropological studies on the Dravido-Africans (1980)
3. Caldwell Robert, D.D; LLD Rt. Rev — A comparative grammar of the Dravidian or South Indian family of languages (Reprint 1976)
4. Darwin Charles — The origin of species (Reprint 1958)
5. Devaneyap Pavanar, G. — The primary classical language of the world (1966)
6. ,, — An Epitome of the Lemurian language and its ramification (1980) cyclostyled Booklet
7. Dey, A.K. — Geology of India (1939)
8. Engels Frederick — Dialectics of nature (Reprint 1974)
9. Gnanagiri Nadar, KCA — Latin words of Tamil origin (1981)
10. ,, — Greek words of Tamil origin (1981)
11. Kanaga Sabai Pillai, V. — The Tamils Eighteen hundred years ago (Reprint 1956)
12. Puranalingam Pillai, M.S. M.A., L.T. — Tamil India (Reprint 1963)
13. Srinivasa Iyengar, P.T; Prof. — History of the Tamils (Reprint 1983)
14. Vaidyanathan, S. MA., Ph.D — Indo-Aryan loan words in old Tamil (1971)

### Periadicals

1. DLA News (As quoted)
2. The Hindu ( ,, )
3. Indian express ( ,, )
4. Blitz ( ,, )

# சொல்லகராதி

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவன வெளியீடுகள்

1. தமிழில் விடுகதைகள் ... ரூ. -1020
2. உலகத் தமிழ் எழுத்தாளர் யார்? எவர்? ... ரூ. 6-00
3. தமிழர் தோற்கருவிகள் ... ரூ. 10-00
4. தமிழும் தமிழரும் ... ரூ. 5-00
5. தமிழர் இசை ... ரூ. 70-00
6. ம. பொ. சி. யின் இலக்கிய நூல்கள்-ஓர் மதிப்பீடு ... ரூ. 20-00
7. இளங்கோவின் இலக்கிய உத்திகள் ... ரூ. 12-00
8. திராவிட மொழி இலக்கியங்கள் ... ரூ. 35-00
9. உ வே. சா. இலக்கண பதிப்புகள் ... ரூ. 12-00
10. தமிழ் இலக்கியக் கொள்கை - 9 ... ரூ. 20-00
11. தொல்காப்பியம் புணரியல் ... ரூ. 10-00
12. தொல்காப்பியம் வேற்றுமை மயங்கியல் ... ரூ. 12-00
13. தொல்காப்பியம் - விளிமரபு ... ரூ. 6-00
14. தொல்காப்பியம் - பெயரியல் ... ரூ. 12-00
15. தொல்காப்பியம் - வினையியல் ... ரூ. 20-00
16. பிரபந்த தீபிகை ... ரூ. 12-00
17. கண் மருத்துவம் ... ரூ. 50-00
18. வர்ம சூத்திரம் ... ரூ. 10-00
19. தன்வந்திரி குழந்தை வாகடம் ... ரூ. 14-00
20. வெள்ளைக்காரன் கதை ... ரூ. 7-00
21. மெய்க்கீர்த்திகள் ... ரூ. 20-00
22. சிந்து இலக்கியம் ... ரூ. 8-00
23. தமிழ்ச் சுவடிகள் அட்டவணை ... ரூ. 6-00
24. தஞ்சை மாவட்ட ஊர்ப்பெயர்கள் ... ரூ. 12-00
25. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 1 ... ரூ. 12-00
26. இலக்கியத்தில் ஊர்ப்பெயர்கள் - 2 ... ரூ. 22-00
27. இஸ்லாம் வளர்த்த தமிழ் ... ரூ. 15-00
28. உ. வே. சா. சங்க இலக்கியப் பதிப்புகள் ... ரூ. 10-00
29. டாக்டர் உ. வே. சா. காப்பியப் பதிப்புகள் ... ரூ. 10-00
30. தமிழரின் தாயகம் ... ரூ. 10-00
31. பாவாணரும் தனித்தமிழும் ... ரூ. 12-00
32. தேவநேயப் பாவாணரின் சொல்லாய்வு ... ரூ. 10-00
33. விவிலியம் - திருக்குறள் - சைவசித்தாந்தம் ... ரூ. 20-00
34. செங்கை மாவட்ட ஊர்ப் பெயர்கள் ... ரூ. 25-00
35. மொழி பெயர்ப்பியல் ... ரூ. 10-00
36. தமிழர் திருமணம் ... ரூ. 25-00
37. தமிழ் வாழ்க்கை வரலாற்றிலக்கியம் ... ரூ. 35-00
38. தமிழ் நாவல்கள் (அகர வரிசை) ... ரூ. 40-00
39. எண்பத்திரண்டில் தமிழ் ... ரூ. 90-00
40. மகாமதிப்பாவலர் ... ரூ. 11-00
41. Siddha Medicine (Heritage of the Tamils) ... Rs. 45-00
42. Cultural Heritage of the Tamils ... Rs. 20-00
43. Literary Heritage of the Tamils ... Rs. 50-00
44. Tamil Drama ... Rs. 20-00
45. Dr Mu. Va. ... Rs. 20-00
46. Thiru Murugan ... Rs. 5-00
47. A Study of the Perunkatai ... Rs. 12-00
48. Tamil Writers Directory ... Rs. 10-00
49. Dissertations on Tamilology ... Rs. 10-00
50. Tamil-Text (An-Auto Instructional Course) ... Rs. 25-00
51. Siddha Medical Manuscripts in Tamil ... Rs. 8-00
52. Karaikkal Ammaiyar ... Rs. 6-00
53. Heritage of the Tamils-Temple Arts ... Rs. 50-00